உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.



# இளசைப்புராணம்.

திருக்கைலாயபரம்பரைத்

திருவண்ணாமலையாதீனத்து

வித்வான்

ப்ரம்மஸ்ரீ

கணேசபண்டிதரவர்கள்

இயற்றியது.



இஃது,

இளையாற்றங்குடி நகரத்தாரால்

சென்னை:

கலாரத்நாகர அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

மன்மதஸு சித்திரைமீ.

சிவமயம்.

# விஞ்ஞாபனம்.

---

மலர்தலை யுலகின் மாண்பெருங் கேள்விப் பலமிகுந் துயர்ந்த பாவலர் நயந்த தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப்பெனப் படுகின்ற நால்வகை நூல் யாப்பினுள் மொழிபெயர்த்தல் யாப்பானூல் செய்வான் றொடங்கிய கந்தபுராண நூலாசிரியர் முதலியோர் சிலபாகந் தொகுத்துஞ் சிலபாகம் விரித்தும் வேண்டும் விகற்பங்கூறியும் நூலியற்றினர். சேதுபுராண நூலாசிரியர் முதலியோர் வடமொழியி லிருந்தவண்ணமே தழுவி யியற்றினர். இங்ஙனமாக: இளையாற்றங்குடி நகரத்தாரும் அவர்களாசாரியவரரும், சிரமாபநோதனபுர மான்மியமென்னும் வடமொழி யிளைசைமான்மியத்தைச் சேதுபுராண முதலியனபோலத் தமிழின் மொழிபெயர்த்தியற்றித் தரல்வேண்டுமென்றமையால், யான் அதனை யங்கிருந்த முறையே மொழிபெயர்த்துச் சிற்சில விடங்களின் வேண்டும் வருணனைகளுஞ் சேர்த்துப்

பன்னிரண் டத்தியாயங்களையும் பன்னிரண்டு படலங்களாக்கிப் பாயிரந் திருநாட்டுப்படலந் திருநகரப்படலமென்னு மிம்மூன்றையும் முன்னேவைத்து இளைசைப்புராணமெனப் பெயரிட்டு இந்நூலை யியற்றினேன். ஆதலின், இந்நூலின் வருஞ் சரித்திர நடைகளுஞ் சம்பிரதாயங்களும் பிறவும் வடமொழிப் பாலனவேயா மென்பதைத் தெரிவிக்கின்றேன்.

இங்ஙனம்

க. ப.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# இலிங்கபுராணம்.

## பாயிரம்.

### கடவுள் வாழ்த்து.

காப்பு.

சிவமெனும் பொருட்டாய் மூன்று திகழெழுத் துடைத்தாய் நின்ற, வுவமையில் பிரணவத்தை யுல கெலாந் தெளிய வாங்கே, கவளமா பூதந் தேவு கலந் ததோ ருருவங் கொண்டு, நவமுற வுதித்த முன்னோ னற்பதம் போற்றி வாழ்வாம். (க)

பரசிவம்.

வேறு.

அருவினையு முருவினையு மருவாரு முருவினையும், வருவினையுஞ் செல்வினையும் வரைவாரும் பெயரி னையு, மிருவினையு நினைவினையு மெதிராரு மறப்பி னையு, மொருவினையு மொன்றாத வொருவனைநன் குள் கிடுவாம். (உ)

### பராசத்தி.

தெரிவரிய திலதைலந் தெற்றுமணித் தெள்ளோசை, பொருவரிய பூவாசம் புனைமணியின் பொலிவொளிபோற், கரவரிய கலைப்பொருளாய் கடவுளிடைக் கலந்தமரும், பரவரிய பரையினது பதமுளத்திற் பதித்திடுவாம். (௩)

### கைலாயநாதர்.

உமையாளையொருவாமையுறவிருத்தியுலகுய்யக்
கமையாளுங்கயிலாயக்கடிவரையிற்காட்டுருவ
மிமையாளுமிருவிழிகளிடமாரவிந்தருளி
நமையாளுங்கயிலாயநாதனடிநண்ணிடுவாம். (௪)

### நித்தியகல்யாணி.

சித்தியலுஞ்சிவைக்கன்றிச்சிவனிடத்திற்சீவர்தமை
யுய்த்தியலலொல்லாமை யுணர்வுறக்கண்ணுவமுனிக்
சத்தியலுஞ்சங்கரனுற்சால்சுபத்தைச்சார்வித்த [குச்
நித்தியகல்யாணிபதநெஞ்சகத்துநிறுத்திடுவாம். (௫)

### சபாநாயகர்.

வேறு.

சிருட்டிதிதி சங்கார திரோபவா நுக்கிரகச் செயலிவ் வைந்து, முருட்டிகழ்வார் துடியபய மழலூன் றுங் தாளுயர்த்து மொண்டா ளென்னும், பொருட்டிறஞ்சே ரானந்த பூரணமாங் தனியுருவப் புனித மூர்த்தி, யருட்டிறத்த வோங்கார வாச்சியனை யருளு நட மகத்துள் வைப்பாம். (௬)

தக்ஷிணாமூர்த்தி.

வரமருவு சனகன்முதன் மாமுனிவர் நால்வருக்கு மருட்கை தீரத், திரமருவு சிவசிவ வைக்கியமா மெய்ப்பொருளைத் தெரிக்கும் போதக், கரமருவு நிலை காட்டிக் கல்லாலின் கீழிருந்து காட்சி தந்த, பரம குரு மூர்த்திபத பதுமயுகம் பணிந்துபவம் பாற்றுகிற்பாம். (எ)

விநாயகக்கடவுள்.

வேறு.

சயசய வென்று போற்றுஞ் சால்புடை யன்பர் செய்யுஞ், செயலுறு மூற்றுவெற்புச் சிதைக்கும்வச் சிரமா யன்னோர்க், கியைதரு பொருளை யெல்லா மீந்தருள் கின்ற தொல்லைக், கயமுகம் படைத்த மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம். (அ)

வைரவக்கடவுள்.

உயிரவ மொழிக்கு மொண்கை யுதிரமார் கபாலங் காட்டக், * கயிரவ மணிச்செம் மேனி கருமணிக் கவசங் காட்டச், செயிரவ னென்னுங் காட்சி தீவினை யகற்றல் காட்ட, வயிரவ மூர்த்தி கொண்ட வடிவினை வணக்கஞ் செய்வாம். (கூ)

சுப்பிரமணியக்கடவுள்.

பொருட்கடல் வேதமூலப் பொருளையு முயிர்கட் குள்ள, மருட்கட லகற்று மாக மப்பொரு ளையு மான்ற, கருட்கடல் பருகி னேனுக் கமைதரக் கருணை

* கயிரவம்—செவ்வாம்பல்.

செய்த, வருட்கட லாய செவ்வே ளருங்கழ லகத்திற் சேர்ப்பாம். (கo)

சரசுவதி.

வெல்லும்வெவ் வினைகள் வீட்டி வீட்டினை விளைக் குஞ் செய்கை, வல்லவாங் கலைகளுக்கு வயங்கொரு வடிவ மாகிப், பல்லுயிர் நாவு தோறும் பயின்றுநின் றருளா நின்ற, சொல்லினுக் கிறைவி பாதந் தொழு துசொற் பொருள்க டேர்வாம். (கக)

திருநந்திதேவர்.

எந்தைவீற் றிருக்குங் கைலை யிருங்கணத் தலைமை பூண்டுஞ், சந்தநான் மறையின் வாய்மை சாற்றுபல் புராண மிம்பர், வந்திட வருளா லீந்து மாணலம் புனைந்து நின்ற, நந்தியெம் பெருமான் பாத நளின மா மலர்கள் போற்றி. (கஉ)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

மீனசம்பந்தம்போலவியனுயிரளித்துநோக்கா
லூனசம்பந்தநீக்குமுமையருண்ஞானமாம்பாற்
றுனசம்பந்தத்தாலேதனிமுதல்பாடிப்போற்று
ஞானசம்பந்தமூர்த்திநல்லடிமுடிமேற்கொள்வாம். ()

திருநாவுக்கரசுநாயனார்.

தேவினுக் கரசா முண்மைச் சிவன்றிரு வடிக ளுன்னிப், பாவினுக் கரசாம் பான்மைப் பதிகங்கள் பகர்ந்து சைனப், பூவினுக் கரசுசெய்த பொருவிறுன் பகன்ற சீர்த்தி, நாவினுக் கரசு நற்று ணறுமலர் சிர மேல் வைப்பாம். (கச)

சுந்தரமூர்த்திநாயனார்.

அந்தர மூர்த்தி ருச்சே ரணங்கினர்ப் பொருவிர ’ண்டு, மந்தர மூர்த்திக் கொங்கை மங்கைமேன் மயங் கா வண்ணம், வந்தர மூர்த்தி தானே வலிந்துவந் தடிமை கொண்ட, சுந்தர மூர்த்தி பொற்றாட் டுணை யைநந் தலைமேற் கொள்வாம். (கரு)

மாணிக்கவாசகசுவாமிகள்.

வேதவூரரசுசெய்யும்விண்ணவர்க்கிறைவசத்தி
நாதவூரரசன்பாய்மாநண்ணுவானுற்றுந்துன்பம்
போத*வூரருணல்கென்னப்புரிந்தவனருளப்பெற்ற
வாதவூரடிகள்செந்தாமரையடிசென்னிவைப்பாம். ()

திருத்தொண்டர்.

வேறு

இலகுபெரும் புவனமெலா மீறுபெறுத் தன்னரு ளா லியங்கி நிற்ப, நிலவுமொரு பரமபதி நிறைபரம சிவனென்னு நிலைபே றுற்றுச், சலமகலுஞ் சாலோ கத் தலையுதவுஞ் சரியாதி சதுர்த்தா பாதஞ், செல வொழுகிச் சிவனடிசேர் திருத்தொண்டர் திருவடி கள் சிரமேற் சேர்ப்பாம். (கஎ)

முதனூல்வந்தவழி.

வேறு.

இறைவனா ரருள்சேர் நந்தி யிசைத்திடச்’ சனற்கு மார, னறைதர வியாத னென்னு மருந்தவ னறிந்து

* ஊர்தல் - பரத்தல்.

கூற, முறையினிற் றெளிந்த சூத முனிவரன் முனிவர்க் கோதுந், துறைகெழு புராண மூவா றென்பநூலுணர்ந்த தொல்லோர். (கஅ)

அன்னமூவாறினுள்ளுமகிலநாயகனுமீசன்
றன்னுயர்புராணம்பத்துச்சாற்றியவவற்றுளொன்று
முன்னரும்பிரமாண்டப்பேருத்தமபுராணமாங்கண்
மன்னியவிளைசைமேலாமான்மியம்வகுக்கப்பட்ட. ()

நூல்செய்தற்குக்காரணம்.

அப்பெருமான்மியத்தையரவணிசடையினார்தஞ்
செப்பருமுகத்தில்வந்தசீர்கெழுகுரவன்றானு
மெப்பெரும்புகழும்வாய்ந்தவிளைசைமாநகரத்தாருந்
தப்பருந்தமிழின்பாவாற்பாடியேதருகவென்றார். ()

அனையவரன்பினாலேயன்றைந்திடும்வார்த்தைதன்னை
நினைவுறக்கொண்டியாதுநிகழ்ச்சியுமாராயாது
பனுவலினியல்புதேர்ந்துபாடுதலுணராதேனுந்
துனியிலாவாசைநின்றுதூண்டிடப்பாடலுற்றேன். ()

அவையடக்கம்.

இலக்கண வரம்பு நல்ல விலக்கிய வரம்புந் தேறாப், புலத்தினீ யெங்ஙன் பாடப் புலவர்போற் புகுந்தா யென்னின், மலேப்பிலென் பொருட்டா லன்றோ வழுவமை வொன்று முன்னோர், விலக்குறு தருளி னாலே வேண்டிய தென்று சொல்கேன். (உஉ)

சொல்லெல்லா மெம்பி ராட்டி தொல்லுருப் பொருள்க ளெல்லாம், வல்லவெம் பெருமான் றொல்லை

வடிவமே யாத லானும், புல்லுமன் னவர்பொற் காதை பொருந்துத லானுந் தேர்ந்த, நல்லவர் சிறியேன் பாவி னவைசொலார் பாதுகாப்பார். (உ௫)

குற்றமுங்குணமும்யாண்டுங்குறுகிடுங்குற்றமின்மை
யுற்றிடலரிதேயோரினுயர்ந்தநற்பதுமந்தாங்கும்
பற்றுடைநாளமுள்ளாற்பல்கியதினையவாற்றாற் [ர்.
கற்றவரொன்பார்க்குற்றங்கருதிடார்குணமாக்கொள்வா

வேறு.

விழுத்தகுங்கதிவிண்ணுளோர்வழிபடும்வன்னிக்
குழுத்தனுப்பிரான்புவியுளோர்பூசையுங்கொளலாற்
பழுத்தவன்புடைப்பாவலர்பாடலேயன்றிப் [மே.
புழுத்தநாயினுங்கடையனேன்புன்சொலுங்கொளு

## சிறப்புப்பாயிரம்.

வேறு.

முறைதிகழ் பாண்டி நாட்டுண் முதிர்தல மாகி நின்ற, மறைதிக ழிளைசை மேலா மான்மியந் தமிழாற் செய்தா, னிறைதிகழ் வடநூ றென்னூ னிலைவலோன் சுருதி யாளன், பொறைதிகழ் தருக ணேச பண்டிதன் புகழ்மிக் கோனே. (உ௬)

பாயிர முற்றிற்று.

## திருநாட்டுப்படலம்.



சீர்மலிந்திடுகைலைநன்னுயகச்செம்மல்
வார்மலிந்திடுவனமுலைமங்கலையுடனே
நேர்மலிந்திடுமிளைசையையகந்தழீஇநிலவும்
பார்மலிந்திடுபாண்டிநாட்டணிசிலபகர்வாம். (க)

குலந்தரும்பலவுயிர்க்குநல்லருள்செயுங்கொள்கை
புலந்தரும்படிபூழியன்பூவையைமணந்து
நலந்தரும்பிரான்முடிகவித்தரசியனடாத்தப்
பலந்தருந்தவம்புரிந்ததுபாண்டிநன்னுடு. (உ)

மாலினுந்தியந்தாமரைமலர்மிசைவேதா
வாலுமாமறையிசையொடுமமர்தல்போற்பொதிய
மேலிசைத்திடுதமிழொடுமகத்தியமேலோன்
பாலினேங்கிடப்பயில்வதுபாண்டிநன்னுடு. (ங)

கொன்றையந்தொடைக்குழகனுங்குமரவேடானு
மன்றுமுத்தமிழ்ச்சங்கமேல்வீற்றிருந்தருளி
மன்றவாய்தமிழ்வாய்த்தலிற்செந்தமிழ்நாடா
நன்றிசேர்பெயர்நணியதுபாண்டிநன்னுடு. (ச)

பொருநைவைகையேகுமரியேபொருவில்வெள்ளா
மருவுதேன்திமுதலியவருபுனனிரைக [றே
டரணிமங்கைமார்பணிந்தபன்மணிதிகழ்தாமம்
பரவுபான்மையிற்பொலிவதுபாண்டிநன்னுடு. (ரு)

நன்மைவாய்ந்ததுநனிவளம்வாய்ந்ததுநசையுந்
தன்மைவாய்ந்ததுதகவருள்வாய்ந்ததுதணவா
வன்மைவாய்ந்ததுவண்மைகள்வாய்ந்ததுமக்கட்
பன்மைவாய்ந்ததுபலர்புகழ்பாண்டிநன்னாடு. (சு)

பூதியாகியசாலிகைபொலிவுறப்பூண்டே
யோதுமஞ்செழுத்தாகியவொண்படைதாங்கிக்
கோதினுற்றவத்தானைகள்கோலியேபிறவிப்
பாதகப்பகைசாய்ப்பதுபாண்டிநன்னாடு. (எ)

எங்குமாமறையாகமமெங்குமெய்ப்புராண
மெங்குநால்வர்வாய்த்திருமொழியெங்குமாலயங்க
ளெங்குமொண்சிவபூசைகளெங்குநல்லறங்க
ளெங்குமேநிறைபாண்டிநாட்டியல்சொலவெளிதோ.

மழை.

கண்ணுவன்றனக்கெம்பிரானழைத்தருள்கங்கை
நண்ணுமாறெனவாரிதிநண்ணிநீர்பருகித்
துண்ணெனுவருள்சுரத்தல்போற்சுரந்தொருசேது
வண்ணதீர்த்தமுன்வந்தெனவந்தனமேகம். (கூ)

எங்கணுயகனிளவலுக்கேற்றதோர்தேவி
யங்கமீதுவெப்புறுத்தவெங்கோடையாமரியைப்
பங்கமாக்கியேவேரொடுபறிக்குதுமென்னுப்
பொங்கியேயுருத்துரப்புதல்போலவேமுழங்கி. (க0)

கொற்றவாளினைவிதிர்த்தெனமின்னலேர்குலவப்
பெற்றுவில்லினேடுற்றிடும்புகள்பெருகப்
பற்றியாகவநிலத்தினிற்படருதல்கடுப்பப் [கி.
பொற்றையாம்பொதியத்தினிற்பொருக்கெனப்போ

வருணனேவியவன்மழைமாரியைவிலக்கக்
கருணையங்கடலாகியசுந்தரக்கடவு
டரணியுய்ந்திடவிடுத்தநாற்சலதரநகர்மே
லரணமானபோன்மலைமிசையடையவுமொய்த்து. ()

கோடையுட்கிடவச்சிரக்கோனிரையன்ன
பீடுறும்புனற்றுரைகள்கயிலையம்பெம்மான்
வாடுமாருயிர்வன்றுயர்மாற்றிடமதித்து
நாடுமின்னருள்பொழிந்தெனப்பொழிந்தனநன்றே.

பொதியமீமிசையொலிகெழுபுயன்மழைபொழிதல்
கதியையீந்திடுங்கயிலையங்காரணன்முடிமேன்
முதியவானவர்முன்னவன்மறையிசைமுன்னு
விதியமஞ்சனமாட்டுதல்போன்மெனமேவும். (௧௪)

மலையி டந்தொறும் பொழிந்தன மரமிகு பழுவத், தலையி டந்தொறும் பொழிந்தன தடம்பொலி கழனி, நிலையி டந்தொறும் பொழிந்தன நெடுங்கழி சூழு, மலையி டந்தொறும் பொழிந்தன வமைவிலார் கொடைபோல். (௧௫)

எங்குமாமழைபொழிதலுமிறைகொள்வெங்கோடை
மங்கியேயழிந்தொழிந்ததுசெய்யகோன்மன்னன்
பொங்கியேயெழுந்துற்றுழிப்புன்மைசெய்குறும்பர்
தங்கிவாழ்ந்திடவல்லரோசற்றுமவ்விடத்து. (௧௬)

துய்ய வான்மழை சொரிதலும் வெவ்வழ றுலைதல், செய்ய வார்சடைச் சித்தர்தம் பிரானருள் செய்யு, மெய்ய ஞானமே லெழுதலும் விழைசுபத் திர

னைப், பொய்யின் மைந்தரை யவிச்சைவிட் டொழிந்
திடல் புரையும். (கஎ)

கழுமலத்திறையொத்ததுகணமுகில்கடனீர்
தொழுமறைப்பரைதொன்முலைப்பாலினையொத்த
தெழுமழைப்பெயலிசைத்திருப்பாடலையொத்த
விழுமடச்சமணொத்ததுவிரவுவெங்கோடை. (கஅ)

முகில்கள்பெய்திடுநீரெலாமெங்கணுமொய்த்து
மிகுதல்கொண்டிடுமுகங்களின்மேவியேபோதல் [ந்
பகைகொள்வெப்பமெங்காயினுமொளித்துறல்பயிலு
தகவினன்னதுபார்த்துமென்றடைதல்போற்சாலும்.

கரையிலானருள்பெற்றவர்கருதுமானந்தம்
விரையுமுள்ளமேயாமெனமேகநன்னீரால்
வரைநிறைந்தனவனங்களுநிறைந்தனவயலி
னிரைநிறைந்தனநெய்தலுநிறைந்தனமன்னோ. (உ0)

பயன்படார்களும்பண்பினர்பாற்படிற்பெருகப்
பயன்படும்வகைபெறுகுவரென்பதுபார்த்தாம்
பயன்படாவுவர்நீர்முகிற்பாற்படூஉப்பெருகப்
பயன்படும்வகைபெற்றனபடியுளோர்யார்க்கும் (உக)

மழையின் வெள்ளமே யெங்கணு மணந்துசூழ்ந்
தொன்றித், தழையும் வெண்ணிறஞ் சாலவும் படை
த்திடுந் தன்மை, குழையும் பூமகள் குளிர்பொருண்
மெய்யினிற் கோலி, விழையும் வெண்படா மொன்
றினைப் போர்த்தென மிளிரும். (உஉ)

பெய்யுமாமழைப்பெருக்கினற்செழித்திடப்பெற்று
வையமேத்திடும்பாண்டிநாட்டதன்வயின்மருவல்
செய்யுநானிலத்தைந்திணையாகியதிறத்துட் [வாம்.
கொய்யுமேனலார்குறிஞ்சியின்கொள்கையைக்குயில்

குறிஞ்சி.

எந்தைமாமலையிடங்களினிருந்திடல்செய்யு
மைந்தன்யானுமப்படிசெயன்மாண்பெனமதித்து
வந்துமால்வரைதொறுந்தொறுங்குமரவேள்வைகுந்
தந்தைசெய்கையைமைந்தனுஞ்சார்வதுதகவே (உச)

வதுவைவேண்டிமான்றேலொடூணுநூன்மார்பிற்
றதையுமாணிகள்பற்பலர்சேயையுட்டரித்து
முதிர்தவம்புரிந்துறைந்திடல்போலுமேமுகிலோ
டுதவுகின்றநீரருவிசேர்ந்துற்றிடும்வரைகள். (உரு)

இரவின்மேலொருபுடைம்தியிலங்கிடக்கீழே
கரியகல்லுறுசோதியந்தருவினேர்காட்சி
பிரமனுகியவெகினமுமரியெனப்பேசு
மரியுந்தேடநின்றருள்சுடரமலனேரும். (உசு)

சந்துகாரகிற்றருக்களைத்தழலெரிமடுத்து
வந்தபுன்பயிர்வளர்க்குவர்குறும்பொறைவாணர்
முந்திடுந்தரந்தெரிகிலார்முற்படினுயர்வு
நந்துதாழ்வெனத்தாழ்வுயர்வென்னவேநண்ணும். ()

திணிகொண்மெய்யுடையிறவுளர்தினைகளையரியக்
குணிலுறுங்கரக்கொடிச்சியர்சிறுகுடிகுறுக
வணிகொளுங்குறிதோற்றியேயலர்வனவேங்கை
கணியெனும்பெயர்பெற்றதிக்காரணம்போலும். ()

சோகமாக்குறுமாரவேளம்பெனத்துயர்கூர்
நீகொலெப்துவையசோகமாநிகழ்பெயரென்று
வேகமோட்டவண்மாதரார்மேவியேயுதைப்ப
வாகுமொய்யலர்கொள்ளுவவடைபொதுள்பிண்டி ()

குறத்திமார்முலைக்கோட்டினுக்கஞ்சியேகொண்மூத்
திறத்தைமேலுறக்கொண்டனகரந்திடுஞ்செல்லா
வறத்தமாமலைக்கோடுகளன்றியுஞ்செல்லு
மறத்தமாமலைக்கோடுகள்விளர்த்திடுமன்றே. (௩0)

கவலையாம்வழிநண்ணுவோராயினுங்கருதுங்
கவலையாம்வழிநண்ணுவரல்லராற்கதிர்கொள்
கவலைவாழ்வினேவழுந்துவர்கன்முலையாரக்
கவலைவாழ்வினினமுழுந்துவர்கானவரானோர். (௩க)

பள்ளமாக்கியேகிழங்கெழப்பறித்திடுமாத
ரொள்ளலின்மணிவருதலுமெடுத்தெடுத்தெறிவார்
வள்ளிநாயகியம்மையாமணியினைத்தம்பாற்
கொள்ளுமற்றவரிவற்றையுங்கொள்வரோகொள்ளார்

நாடுறுந்தகைநாயகியுமையவணயந்து
வாடுறுந்தவவங்கியின்வடிவமுற்றருளிப்
பாடுறும்புகழ்ப்பரமனார்பரிந்தருள்செய்த
கோடுறுங்கொடுங்குன்றினையுடையதுகுறிஞ்சி. ()

அன்பினலெமையூர்பவற்கிவ்வழியணங்கை
முன்புநல்கினேனூர்தியென்றெழிலியைமுன்னித்
தன்பெருங்கிளையான்மயிலகவுதறவிராத்
தென்பரங்கிரிதன்னெடுந்திகழ்ந்துவாய்ந்திடுமால். ()

மாலயன்றனதூர்தியையுண்பவமாய்ந்து
கோலமஞ்ஞைதன்னொருதனிவடிவினிற்குமர
மேலவன்றிருக்கருணையேமெய்யெனமேவச்
சாலுமாமயின்மலையையுந்தன்னிடத்துடைத்தால். ()

காதுவேல்*வளைதமிட்டிரற்காய்ந்துமிக்கருள்கூர்
நாதனுகியவிநாயகனகருநல்லருளான்
மாதமிட்டிரன்வலிகவர்வைரவனகரு [பார்.
மீதுகொண்டதாற்குறிஞ்சியின்பெருமையார்விரிப்

முல்லை.

வேறு.

கொன்றையுந் தும்பை தானுங் குலவுகூ விளையுங் கோலங், துன்றிய வறுகும் யாறுந் துவன்றியே துலங்கும் வண்ண, மொன்றுறக் கொண்ட கொள்கை யுலப்புறு திருக்குங் காடு, தென்றலந் தேராற் செற்ற சிவன்றிருச் சடைக்கா டொக்கும். (கஎ)

நெருங்குறும்ண்டர்சூழநிறைவொடுமலருங்காயா
வொருங்குசாருபமுற்றவுத்தமர்நிலைமைகாட்டத்
தரங்கெழுதுளவஞ்சூடுந்தலைவன்வீற்றிருத்தலாலே
வரங்குலாவுற்றகானம்வைகுந்தநிகர்க்குமாமே. ()

குலந்தருமலர்ப்பூங்காயாக்குலவுறுபிருந்தையைத்த
வலந்தரக்கொள்ளுநீரான்மாயவன்றன்னைநேரு [ன்
நலந்தருபஃடிமாதர்நாசிக்குத்தோற்றுக்கூம்பி
யலந்தருநீராற்கூம்பலாம்பெயர்குமிழ்கொண்டன்றே.

* வளைதமிட்டிரன் - வக்கிர தமிட்டிரன்.

கற்பென லிவற்றி லேதிப் பெயரெவன் கலந்த வெ ன்னுக், கற்பினுர் நகைப்பப் பூக்குங் கற்பெனும் பெ யர்கொண் முல்லை, கற்பினெண் பொருளீ தாமோ கருதுநும் மூரற் சீர்தேர், கற்பினே மடைத றேறீ ரெனநகை காட்டல் போல. (சo)

பசுநிரையெழுதலானும்பலதருத்தோன்றலானு
மிசையமுதுறுதலானுமிக்கதேமருவலானு
மிசைவுறுமண்டரானுமிறைபெறுதிருமாலானும்
வசையில்பாற்கடலையொத்தேமருவிடும்புறவமன்னே.

ஒருபுறங் கொன்றை பூப்ப வொருபுறங் காயாப்பூ ப்ப, மருவியே நடுவட் பூத்த மலர்கெழு பலாசின் ரேற்ற, மொருபுற மலரோன் ரேன்ற வொருபுற மாலோன் ரேன்ற, மருவியே நின்ற வெங்கள் வள்ள லாஞ் சிவ்னே போலும். (சஉ)

அட்டிறு சுவைப்பா லுண்டா மளையுண்டாம் வெ ண்ணெ யுண்டா, மட்டிய ரிழுது முண்டாம் வனத் தில்வா ழுண்டராலே, முட்டிலா திந்த வண்டர் முடி க்கல ரவற்றை யாங்குக், கிட்டுவ மெனவந் துற்றுன் கீரவே லையைமா னீங்கி. (சங)

விழைதரு கோப மன்றி வேறொரு கோப மில்லை, குழைவுறு களவேயன்றிக் கூறிடுங் களவொன் றில்லை, பொழிநிலா மதிக்கோ ளன்றிப் புன்கணேய் மதிக் கோ ளில்லை, பழியின்மான் மருட்சி யன்றிப் பகரொ மருட்சி யில்லை. (சச)

எள்ளொடுபயறுசாமையிறுங்குநற்றுவரைசிம்பை
கொள்ளொடுவரகுகூறுங்கூலமேயாதியாக
வுள்ளபல்வளமும்பாலையுள்ளிட்டுள்ளனவும்யாவுந்
தள்ளறமிகுமேயென்ருற்றளர்வவண்யாதுகொல்லோ

தெய்வமொன் றிருக்கும் பாலே சிறப்புடைத் தெ
ன்பர் மேலோர், மெய்வரத் தேவ ரெல்லா மேவுறு
பசுவொன் றேயோ, வெவ்வமி லெண்ணி லாத விருந்
தன கானத்தூடே, நைவறு பெருமை தன்னை நாமெ
வ னவில வல்லோம். (சசு)

வானப்பேர்கொண்டவேணிவள்ளலார்மலையமீன்ற
ஞானப்பேர்முலையாளோடுநயந்துவீற்றிருந்துநங்க
ளூனப்பேரயர்வுநீக்கியுய்தரவருளாநின்ற
கானப்பேருடையதென்னிற்கானியல்கூறற்பாற்றே.

எல்லையில் கருணை யோடு மெம்மையா ளிறைவன்
வைகுந், தொல்லையா டானைதன்பாற் றுலங்கவே தவ
ஞ்செய் துற்ற, முல்லையம் பெருமை தன்னை மொழி
ந்திட வல்லார் யாரோ, யொல்லுநன் மருதச் சால்பை
யுணர்ந்தவா வுரைக்கலுற்றும். (சஅ)

மருதம்.

அரம்பைகடருக்கடேனுவம்புயம்பணிலஞ்சோதி
பரம்புறுமணிகளோடும்பானமார்கிளைஞரோடுங்
கரம்பயில்குலிசப்புத்தேள்கவினவீற்றிருத்தலாலே
வரம்புயர்மருதவைப்புவானுலகொத்ததாமே. (ச

மலயமா மலையிற் றோன்றி மருங்கினு லயங்க ளண்மி, யலைகெழு கரத்தாற் சந்து மானுறு மைந்துந் தேனும், பொலியுமான் மதமும் வீசிப் பூந்துணர் பொழிந்து மிக்க, வொலியொடு மடியார் போல வொழுகுறும் பொருநை யாறு. (ருo)

அன்றொரு பூதத் திற்கா வடைந்துளே னஃதென் வண்மை, யின்றுபற் பலபூ தங்க டமக்குமே யின்பஞ் சாரச், சென்றிடு கின்றே னென்னுத் திரைப்புனற் பெருக்கு மிக்கு, வென்றியின் வந்த தென்ன விரைந் தெழுந் ததுநல் வைகை. (ருக)

பொதியமா முனிவன் முன்னுட் புரிசடைப் பெருமான் றன்னை, மதுவினு லாட்ட லோடு மற்றது பெருக்க மிக்கே, துதிமது நதிப்பேர் பெற்ற தொன்னதி யிளைசை மேய, பதியருட் பெருக்குப் போலப் பரம்பியே பெருகிற் றம்மா. (ருஉ)

சிவனிடைப் பயன்கொள் வாருஞ் சிவனருள் வழிப்பட் டோர்பா, லவமறப் பயன்கொள் வாரு மாமென மழையி னீராற், றவநிறை யேரி தாமுந் தருமழை நிறைந்த யாற்றுற், கவையுறு மேரி தாமுங் கணிப்பிலா திருக்கு மன்றே. (ருங)

காண்புறு பவர்க ளீது கடல்கொலென் றயிர்த்துத் திம்பான், மாண்புறு நீரை யள்ளி மாந்திய பின்னர்த் தேறி, யேண்படு மேரி தானு மீதெனத் துணிய நின்றே, யூண்பய னுதவு கின்ற வுளைத்திடும் பலவாங் கண்வாய். (ருச)

நதியினே ரியினும் வந்த நறும்புனல் வெள்ளம் போந்து, மதகினூ டளைபோம் பாந்தள் வகையெனப் புகுந்து பண்ணை, விதமுற நிறைந்தி யாண்டு மேவியே யுயிர்க டோறும், பதியெனு மீசன் மல்கிப் பரவுறு நிலைமை தேற்றும். (௫௫)

நீர்விடா யுடையார் தண்ணீர் நேர்ந்துழிப் பருகித் தாகந், தீர்வுற வுளங் குளிர்ந்து திகழ்முக மலர்தல் போலச், சார்வுறு வெள்ள நீராற் றடம்பணை குளிர்ந்து பொங்கிப், பார்விட ரொன்றி யோங்கிப் பொலிந்தன பழன மெல்லாம். (௫௬)

நல்குர வெய்தி நின்றோர் நன்னிதி கண்டாற் போல, வெல்குறு விரக மிக்கோர் மெல்லியர்க் கண்டாற் போலப், பல்கொரு நூல்வெஃ குற்றோர் பாற்படக் கண்டாற் போல, மல்குநீர் வருதல் கண்டு மகிழ்ந்தனர் மள்ள ரெல்லாம். (௫௭)

நன்னி[illegible] முன்னர் நவில்பொருள் பெற்ற காலை, [illegible]ளபருவச்[illegible]றத்தை யாற்ற வனுபவஞ் செய்ய வாய, [illegible]வயலி[illegible]னர் முயலு மாபோன் முனைகெழு கலப்பை[illegible]ந்திக், கன்னெடுந் திரடோண் மள்ளர் கலந்துழ வமைந்து சூழ்ந்தார். (௫௮)

நுகங்கொள வேர்க்கால் சேர்த்தி நோன்பக டெருது பூட்டி, முகங்கொளு மேழி தன்னை முகிழ்தரு மிடக்கை பற்றி, நகங்கொளும் வலக்கை யோர்கோ ணலமுறப் பற்றி வாயா, லகங்கொளு மருதம் பாடி யார்வமோ டுழுத லுற்றார். (௫௯)

தடம்பணை மாக்க ணின்று சால்கொழ வுழுத போழ்து, திடம்படு மணியும் பொன்னுந் திகழ்ந்தெழுந் தொளிர்ந்து தோன்றி, யிடம்படு பூமிநாம மிரத்தின கருப்பை யென்று, முடம்படு வசுதை யென்று முற்றகா ரணத்தைக் காட்டும். (சுய)

நாமுறு நிலத்திற் கின்ன னண்ணயா மிருத்த லென்னென், றேமுறு வீரர் போல வெழுந்துமேற் பாயுஞ் சேல்க, டமையிங் கிதற்கி யாமென் செய்துமென் றழுங்கி யேங்கி, யாமைக ளொளிக்குஞ் சென்றே யாற்றலில் லார்கள் போல. (சுக)

உழவர்கண் மாறி மாறி யுழுதலும் புற்க ளாதி, யழிதரக் குழுவி னீங்கு மறிஞரிற் றனித்துத் தொண்டர், குழைதரு முள்ள மென்னக் குழைந்தொரு மாயை யெங்குந், தழைதரல் போலச் சேறு ததைந்தன மருத மெல்லாம். (சுஉ)

ம் யொரு
சீடர்தமுளத்தைச்செப்பஞ்செய் ற லொப்ட 'மான
மேடவனீங்கச்செய்யுள்விரிபரம்பரு ங் காட ப்பு
நாடிநன்ஞுளின்மேகநாயகற்போற்றிச்சா செ
நீடநன்முளையிட்டென்னநென்முளைவித்தி கள்.()

முளையெலாம் வெள்ளி போல முளைத்தலும் பசிதேர் தாய, ரிளமகார்க் கூட்டும் பால்போ லேற்றநீர் பருவத் தூட்டக், கொளுமவை மரக தம்பொற் குலாவியே பசந்த *வாயி, லுளபுயற் றன்மை யீண்டு முற்றிடன் முறையே யன்றே. (சுச)

* வாயில் - காரணம்.

உயிர்களைப் பருவ நோக்கி யுற்றபல் புவனந் தோறுஞ், செயிர்களைந் தமரும் வண்ணஞ் சிவபிரான் செலுத்தல் போலப், பயிர்களைப் பருவ நோக்கிப் பயில்பல வயல்க டோறு, மயிர்களை யாற்றன் மள்ள ரமைவுற நடுதல் செய்தார். (௬௫)

நடுதலு மறியா வூரி னண்ணினோ ரென்ன வாடி, யுடையதோ ருயர்வு நோக்கி யூரொலாம் போற்ற வன்னோ, ரடைதரு மகிழ்வி னேங்கு மமைவெனத் தொழுவர் வேண்டும், படிசெயத் தோகை காட்டி பயிரொலாந் தழைந்த மாதோ. (௬௬)

வறுமைநோய் கல்வி தன்னை வந்துசூழ்ந் துற்றாலென்ன, வறைதருங் காமு மாதி தவத்தினை யடைந்தா லென்னக், குறைசெயு முலோப நல்ல குணத்தினைச் சார்ந் ா லென்ன, நிறைதரு பயிரை யெல்லா நெருங்கின களை ணீடி. (௬௭)

களைகளைபருவச்செவ்விகளமர்களானோர்கண்டு
வளமலிவயலிற்சாரவாழ்க்கைசேருழத்திமாரை
விளைதருமகிழ்விற்கூவமென்னடையன்னமென்ன
விளமயிலென்னவந்தாரிசைமலிமருதவாயார். (௬௮)

வாக்குறு நறவந் தன்னை வள்ளமீ மிசையே கொள்ளத், தேக்கின ராடி யென்னச் சீர்முக மதனுட் டோன்ற, நோக்கினர் நுனித்து மள்ளர் நுண்ணிடைப் பாவை யன்னார், மேக்குறு காத லோடு மிசைந்திட லுற்ற ரன்றே. (௬௯)

வாடுகின் ருர்கள் சில்லோர் மயங்குகின் ருர்கள் சில்லோ, ரூடுகின் ருர்கள் சில்லோ ருயிர்த்திடு கின் ருர் சில்லோர், பாடுகின் ருர்கள் சில்லோர் பணிவுறு கின்ருர் சில்லோ, ராடுகின் ருர்கள் சில்லோ ராயி னர் மதுவை யார்ந்தார். (எ0)

மதுமலர்வாய்வெளுப்பவடுவெகிர்விழிகள்சேப்ப [தத்
விதுமுகம்வேர்வுதோன்ற மென்மொழி விகற்பமெய்
தளைமலர்க்கூந்தல்சோரத்தானையுஞ்சரியமாதர் [ர்.
பதிகண்மெய்யின்பந்தோய்ந்தபண்பினர்போலவானு

இவ்வகை வெறியை மாந்தி யியன்றிடுங் கடைசி மார்கண், மைவரை யனைய வன்ருேண் மள்ளர்க ளே வ லாலே, தெவ்விய லடைந்த வாகிச் செம்மைசேர் பயிரை வாட்டு, மவ்வகைப் பெற்று நிற்கு மடர்களை களைத லுற்ருர். (எஉ)

ஒருகுலத் துறுவோர் தாமே யொருவன்செய் தீமை நோக்கிப், பருவர லியற்ற லொப்பப் பயி ரடுங் கமலந் தன்னை, யருவிழிக் கமலங் காட்டு மவி ரடிக் கமலங் கிட்டும், பொருகரக் கமலங் கொய்யும் பொலிமுகக் கமல மோங்கும். (எங)

ஒருவனோர் குற்றஞ் செய்யி னுற்றிடு மரபின் யார்க்கும், வருமஃ தென்னுந் தன்மை மற்றிவட் கண்டா மெங்கள், சுரபதி செல்வ மெல்லாந் தொலைத்ததா மரையின் சார்பென், றுருவறக் கமல மெல்லா முழத் தியர் பறித்தார் மாதோ. (எச)

தத்தமக்குரியதானந்தலைப்படலலதுகீழ்மை
யுய்த்திடுந்தானஞ்சாரினுறுகளையுறுதலுண்மை
பைத்திடுகுவளைவாவிநீங்கியேபணையென்றேரு
மத்தலையடைந்தநீராலழிந்தனகடைசிமாரால். (எரு)

திருந்துமெவ் வுயர்ச்சி மேவிச் சிறப்பினும் பகை
யொன் றின்றிப், பொருந்தலே வாழ்க்கை யாகும்
பூசனைக் குரிமை வாய்ந்து, முருந்துறழ் மூரலார்த
முனைவிழிப் பகையொன் றுலே, கருந்தகை யுற்பலங்
கள் களைவுறப் பட்டயாவும். (எசு)

ஆம்பனீர்பருகமுன்னரதற்பினர்வெளியசேய
வாம்பனும்பொருவநும்வாயெனநிமிர்ந்தமருந்தோற்
தாம்பலையாம்பலென்னவாம்பலர்கோலியட்டா [றத்
ராம்பலம்பிடியேயன்னவாற்றுக்காலாட்டிமார்கள். ()

களைகளைகடைசிமார்கள்கழனிவாய்நீரிற்றங்க
ளொளிமுகநடுவெண்வாய்ந்த வுண்கணும்வாயுந்தோன்
நளினமாமலரினூடுநறுமலர்க்குவளையோடு [ற
வளமலியாம்பலீண்டுமலர்ந்ததற்புதமாமென்பார். ()

கமலமுற்பலமேயாம்பல்கலந்திடும்வள்ளையாதிக்
குமைதருகளைகளெல்லாங்குலந்தருபயிரைவாட்டத்
தமதுளத்திரங்கிவந்துதாமவைகட்டல்செய்தா
ரமைதருநல்லாரொன்னுமரும்பெயரவர்க்கேசாலும்.

இன்னணங் களைகட் டோம்பி யின்செயல் புரித
லோடுந், தன்னிக ரிளைசை புக்கோர் தம்பவப் பகை
கண் மாழ்க, மன்னுநல் வினையே மிக்கு வளர்ந்துறு

மாறு போலத், துன்னுபைங் கூழ்க ளெல்லாந் துவன்றியே தழைந்த மன்னோ. (அ௦)

, தழைதரு பயிர்கள் யாவுந் தவந்தரு பயனை யொப்ப, வுழைதரு கதிர்க ளீன்ற வுற்றிடுங் கதிர்கண் முன்போ, லெழுபதம் விளர்த்துப் பின்ன ரியைந்தன பசுமை யீன்றோர், வழிவரு குணத்தின் பான்மை மகவினுக் குறுது கொல்லோ. (அக)

செல்வம்வந்துற்றகாலைச்செருக்கொடுநிமிர்ச்சிமிக்கு
நில்வகைமாந்தரொன்னநெற்றலைதூக்கிநின்று
பல்குறுந்தோறுஞ்செல்வம்பணிதருநல்லோரொன்ன
நல்வருமுதிர்வுதோறுநறுங்கதிர்பணியுமன்றே. ()

தக்கபேரறிஞருள்ளஞ்சால்சிவவிளைவைமான [டு
மெய்க்கதிர்ச்சாலியெல்லாம்விளைந்தனவிளைதல்கண்
மைக்கருங்கடுங்கான்மள்ளர்வரனவர்பதிக்குப்பூசை
பொக்கமிலன்பினோடும்புரிந்திவையியற்றலுற்றார். ()

அங்கையி னரிவாள் வாங்கி யருங்கிணை முழங்க வெள்ளைச், சங்கமங் கதிரச் சேலுஞ் சலமலி கயலும் பாயப், பங்கமின் றறிய ரிந்து பாங்குறக் களத்திற் சேர்த்து, மங்கையோர் பங்க னேந்தா மலைபல வமைத்தல் செய்தார். (அச)

மகபதியாயமேலோன்மலைகளைத்தள்ளிவீழ்த்தி [பத்
முகில்களைமிதிக்கவிட்டமொய்கெழுதோற்றமொப்
தகவுறுநெற்போரெல்லாஞ்சரியவேதள்ளிவீழ்த்திப்
பகடுகெண்மிதிக்கவிட்டார்பன்னருமாற்றன்மள்ளர்.()

தம்மிறை யுயிரு மெய்யுந் தனித்திடப் புரித லேய்ப்பச், செம்மைசேர் நெல்லும் வையும் பிரித்தன செழிய மேதி, வெம்மறு நீக்கி நீர்மை கைக்கொளு மேலோர் மானப், பொம்மெனத் தூற்றி நெல்லைக் குவித்தனர் பதடி போக்கி. (அசு)

குவித்தநென் மலைக டம்மைக் கூறுசெய் தளவை கண்டு, கவித்தவெண் குடையாண் மன்னன் கடன் கொடுத் தில்லோ ரின்மை, யவித்திட நல்கி யெஞ்சி யமைந்திடு நெல்லை யாருஞ், செவித்துணை பொத்து மார்ப்பிற் றிகழ்மனை கொடுசென் றுய்ப்பார். (அஎ)

பிறத்தலும்வளர்தருனும்பின்னுறமூப்புவந்தே
யிறத்தலுமுலகினுளுமியைந்திடுமியலேபோல
வுறுத்தியேநடுதருனுமோம்பலுமோம்பிப்பின்ன [ம்.
ரறுத்திடுசெயலுநாட்டினகத்திடையொழிந்திடாவா

அரும்பயிர் நெல்லை நெல்லே யாமெனக் கரும்பைக் கண்டுங், கரும்பினைக் கரும்பா மென்னக் கமுகினைக் கண்டு மந்த, விரும்புறு கமுகு தன்னைக் கமுகென விளங்கித் தோன்றுங், குரும்பைகொ டெங்கைக் கண்டுங் குறித்துளந் துணிவர் வந்தோர் (அகூ)

மாப்பலாப் பழம்பெய் சாறும் வாழைமென் கனியின் றேனு, மீப்பல மலர்கள் சிந்தும் விழுமெனு மதுவு மோடிக், கோப்புறு வயலிற் போகிக் குளிர் பயிர் வளர்க்கு மங்கண், யாப்புறுத் தமறு நீரோ விசைத்திடின் மிகையே யாகும். (கூ0)

மனைமுகம் வளையே கண்ட மயிலைவாள் விழிக ளாம்பல், பெருகுவா யறன்மென் கூந்தல் பெட்புறுங் குமிழி கொங்கை, தரளமே தந்த மாகச் சார்ந்திடுந் தடங்க ளாங்கே, பருவமங் கையர்கள் பல்லோர் பரந்தெனப் பரந்து வைகும். (கூக)

தனையெலாஞ் செந்நெல் சூழுந் தடமெலா மன்னம் வாழுங், கனையெலா மணியின் கூட்டங் காவெலாஞ் சுரும்பி னீட்ட, நிரையெலா மூடல் பெற்றோர் நீரொலா மாட லுற்றோர், புனையெலாந் துஞ்சு மஞ்சிப் புலமெலா மஞ்ச ளிஞ்சி. (கூஉ)

சொற்பதங் கடந்த சோம சுந்தரக் கடவு டொல்லைச், சிற்பர வடிவத் தூடு திருவடி மாறி நின்றே, யற்புதத் திருக்கூத் தாடு மாலவாய் நகரைத் தன்பாற், பொற்புறக் கொண்ட மேன்மை மருதத்தைப் புகல்வார் யாரே. (கூங)

திருமகள் வழிபட் டேத்தச் சிறந்தநல் வரத்தை யீந்த, மருமல ரிதழி வேணி வள்ளலார் கோயில் கொண்ட, பொருவறு திருப்புத் தூராம் பொற்பதி தனையு மேற்கொ, ளருமைய மருத மாட்சி யறைந்திட நாமா வல்லேம். (கூச)

## நெய்தல்.

வேறு.

தவிசுமல்கியேதணந்திடாத்தனியிடத்தன்றிச்
சிவனுமற்றொருதலத்திடைச்சேர்ந்திடறவாதென்
றிவருமுள்ளமேலிசைந்தெனவிருஞ்சுருவுலவு
முவரிநீர்க்கனைநெய்தலினுறைந்தனன்வருணன். ()

கடலினுடியேவந்தவர்கடும்பசியகற்ற
வடுசுவைப்பொதிசோற்றினையவிழ்த்தெதிர்நல்கும்
படியினுறொனப்பரந்திடும்படுகடற்பாங்கர்
வடுவிருழைகள்பற்பலமலர்கொளீஇநிற்கும். (சுசு)

புன்னைமாலெனப்பொலிந்திடுந்துவர்க்கொடி பொன்
மன்னியேதழுவுற்றிடுமானகைத்தென்ன [போன்
நன்னர்சேர்முகையரும்புறுநாகுநம்பெருமான்
மின்னுசெஞ்சடைப்பிறையெனத்துகிரிடைமேவும்.

நல்லசேர்க்கையாற்றீயதுநல்லதாநல்ல
தல்லசேர்க்கையானல்லதுமல்லதேயாகும்
வெல்லுநெய்தலைமீனடைந்துயர்மணமேவுஞ்
செல்லுமீனையுற்றான்மணஞ்சேர்வுறுநெய்தல். ()

பலவகைக்கலைப்பொருளெலாம்பாற்படக்கொண்டே
நலமுறும்படிநல்கிடுநாவலர்நயம்போற்
பலவகைத்தலப்பொருளெலாம்பாற்படக்கொண்டே
நலமுறும்படிநல்கிடும்பற்பலநாவாய். (சுகூ)

கலத்தினேகியேவலைகொடுமீன்களைக்கவர்ந்து
வலத்தின்வாழுவர்வலைஞர்களிகழவாயுண்டோ
நலத்தின்மேம்படுமதுரைமாநாயகனுளையர்
குலத்தினுகிமீன்வலையினிற்கொண்டனனென்றால். ()

எங்கள்கண்களைநிகர்த்தலின்வாட்டுகமென்று
நுங்குமீன்களை நுண்ணிடைநுளைச்சியருணக்கத்
தங்குகாக்கையுற்றடைந்தவரோப்பினுந்தணவா
பொங்கியேதினைப்புரியினும்பிள்ளைதான்போமோ.()

கடல்குளித்துமுத்தெடுத்திடுங்கடலராரவமும்
படிகொளுப்பமைப்பார்களினமலையும்பஃறி
விடுதலார்ப்புமீன்முதலியவிற்றலினொலியு
மொடிவில்வாரிதியோசையையுண்டுமேலெழுமே. ()

பொருவிலாண்மைகொளிராமனூர் புணையினைப்போக்
யருளியங்கணரிராமநாதப்பெயரடைந்தே [கி
மருவியின்னருள்செயுமிராமேச்சுரமகிமை
பெருகியோங்கியதன்னிடைப்பெற்றதுநெய்தல். ()

தடையின்மாமறைமும்முறைதன்பெயரொடுத்துக்
குடிலையோடிசைத்தேத்திடுங்குமரவேளமர்ந்து
படியினல்லருள்செய்திடுஞ்செந்தியம்பதியை
யுடையதென்றிடினெய்தலையெங்ஙனமுரைக்கேம்.

பாலை.

வேறு.

கொற்றமாருருக்கொடுகுலவுங்கொற்றவை
யுற்றிடுபலிவகைமறவருட்டிடப்
பெற்றருள்வழங்கியேபிறங்கும்பேற்றினைப்
பற்றியேயிருந்திடும்பாலையாநிலம். (கoரு)

பாலையைப்பயனிலதென்றுபன்னுத
லேலுமோவழிச்செலுமியல்பினர்க்கெலாங்
கோலுறுபசியினைக்குறைக்குமீந்துகள்
சாலுறுநீர்விடாய்தணிக்குநெல்லிகள். (கoசா)

பரந்கடுநிலத்திடைப்பயிலுமிம்பமாத்
தருக்கிளர்பழத்தினைக்கழுகுசார்வது

திருக்கழுக்குன்றமேற்றிகழுஞ்சோதியை
யுருக்கிளர்கழுகடைந்துறுதல்காட்டுமே. (கoஎ)

எயினர்தஞ்சிறுமியரொடுப்பவெண்பொரி
நயமுறச்சிதறினலென்னநன்னிலம்
பயிலுறுகுரவம்பூம்பாவைக்கேற்றிடு
மயலுறமுருங்கைகளலர்கள்சிந்துமே. (கசஅ)

சீரினர்சீரிலார்திறத்துவந்தெனக்
காரகிரூன்றிடுங்கள்ளியின்புடை
யேரினெம்பெயருறுமிந்நிலம்மெனப்
பாருறுபாலைகள்பழுத்துநின்றவே. (கoசு)

ஆடவர்பின்றொடர்ந்தடையுமாதரார்
பாடகமெல்லடிபரிவுருமலே
கோடியர்கோங்குகள்குலவும்பஞ்சினை
நீடவேசொரிந்துபார்நிறைத்துநிற்பன. (கக0)

வழிபறித்திட்டவுஞ்செழியமாண்பதி
யுழிகவர்ந்திட்டவுமொளிகொளெல்லிடை
யெழுவலிச்சூறைசெய்திட்டவும்பொரு
ளழிவறவாழ்குவர்மறவராயினோர். (ககக)

திணைமயக்கம்.

வேறு.

குலமயிலாடல்கண்டு கொன்றைபொன் சொரியாநிற்
மலிதருபுழைக்கைநீட்டிமதகரியிறுங்குகொள்ளூ [கு
நலமிகுகுயில்போய்த்தேமாநறுந்தளிர்கோதிப்பர்டு
மெலிவில்கூர்ங்கோட்டுமேதிவிரவுறுவரகுமேயும்.()

கள்ளமுண் டகம்வா ழன்னங் கழிகொண்முண்டகத்திற் சாரும், பிள்ளைநன் மூதூர் வந்து பிடியுறு சோறு கொள்ளும், விள்ளுமா மதுவு மானபா லதுவு முண் வேழச் சாறுந், தள்ளறக் கூடன் மூவர் தமிழுமொன் றுற்ற போலும். (ககூ)

கறிவளர்கொடியுமுல்லைக்கானுயர்கொடியும்வள்ளை
யறைதருகொடியுந்துப்பினவிர்தருகொடியுந்தன்பா
னெறிவரப்படரநிற்குநெடுங்குராமரநான்கும்
பெறுமடமாதர்புல்லப்பெற்றவாண்மகனேபோலும்.

இன்னபல்வளங்களோங்கியநாற்குலமும்வேறு
துன்னுபல்குலமுமல்கித்தொன்னெறிவழாமலீசன்
றன்னடியன்பின்வாழுந்தன்னிகர்பாண்டிநாட்டின்
மன்னியலறிந்தென்சொற்றும்வளநகர்வகுக்கலுற்றும்.

திருநாட்டுப்படல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-கசக.

---

## திருநகரப்படலம்.

வேறு.

பயன்மருவுற்றிடும்பாண்டிநாட்டினு
ணயன்மருவுற்றிடுநகரம்யாவினும்
வியன்மருவுற்றிடுமேன்மைசான்றதோ
ரியன்மருவுற்றுளதிளைசைமாநகர். (௧)

வீசனைவரநதிவிளங்கித்தென்றிசே
ராசையையாள்யமனணுகவஞ்சலாற்
றேசிகநிலைக்கொருதேயமாதலா
லீசனேநிகருவதிளைசைமாநகர். (௨)

எம்மையுமிடர்கெடுத்தின்பமீதலாற்
செம்மைசேர்சங்கநற்களத்தின்சீரினாற்
கொம்மைமென்கொங்கைமேன்மேவலானம
தம்மையையன்னதாலிளசைமாநகர். (௩)

சித்தியும்புத்தியுஞ்சேருமாண்பினல்
வித்தைகளனைத்தினுமுதன்மைமேவலா
லெத்திறவினைவருமிடருநீக்கலா
லத்திமாமுகவனையனையதந்நகர். (௪)

சந்தமார்தெய்வதயானைசார்தலா
லந்தமில்சூர்படையடல்பெருமையான்
மைந்துடைப்பிணிமுகமாற்றுமாண்பினாற்
கந்தவேளொப்பதுகன்னிமாநகர். (௫)

மன்னியமாவினைமருவிவைகலாற்
றுன்னுநற்பொருளெலாந்துவரநல்கலாற்
பன்னரும்புவியினிற்பொலிந்தபண்பினாற்
பொன்னினைப்புரைகுவதிளைசைப்பொன்னகர். (௬)

காணியகாட்சியாற்கவினுங்*கச்சபிப்
பாணியைத்தாங்கல்கொள்பான்மையாலெவர்
பேணியநாவினும்பிறங்கிநிற்றலால்
வாணியைமானுவதிளைசைமாநகர். (எ)

பயிலுறும்பண்ணவர்படிவர்போற்றலான்
மயிலனவுமையொடும்வள்ளன்மேவலாற்
றுயிலருந்தன்மைசேர்துயரந்தீர்த்தலாற்
கயிலையம்பொருப்பினைக்கடுப்பதப்பதி. (அ)

தண்டுளவாகியவிபவஞ்சார்தலாற்
கண்டிடவரியதோர்மெய்யர்க்காட்டலா
லண்டருங்கருடனதடியைக்கொள்ளலால்
விண்டுவினகரெனவிளங்குமந்நகர். (௯)

கரையகல்வேதநற்கானமோங்கலால்
விரியுலகேழினுண்மேலதாதலாற்
பொருவலில்விதித்திறம்பொருந்தும்பொற்பினாற்
பிரமன்மாநகரெனப்பிறங்குமப்புரம். (௧0)

---

* கச்சபிப்பாணியென்பதற்கு - இளைசைக் கியையக் கொள்ளுங்கால் கச்சபத்தையுடைய நீரெனவும், சரசுவதிக்கியையக் கொள்ளுங்கால் கச்சபியென்னும் வீணைபொருந்திய கையெனவும் பொருளாம். கச்சபத்தையுடையது கச்சபியென்பது வடநூன் முடிபு.

உலகினையுதவுவோனுமைகொணுயக
னலமுறப்படைத்தருணயத்ததாமென
வலமொடுவெழங்கியநகரமற்றித
னிலவியபெருமையார்நிகழ்த்தவல்லுநர். (௧௧)

அருளினையுடையநல்லமலற்சூழ்வுற
நிரைகெழுமன்பினோர்நெருங்கிநின்றெனத்
திருநகர்ப்புறத்தினிற்றிகழ்ந்துநின்றதான்
மருவுதேன்வண்டிசைமல்குபூம்பொழில். (௧௨)

மாவுழுபொழின்மலர்வாசமிக்கெழீஇக்
காவுறுகற்பகங்களுலும்பொன்மலர்
மேவியேகமழ்ந்திடவிளைக்குமன்றிப்பொற்
பூவினுக்கொருமணம்புவனத்துண்டுகொல். (௧௩)

வெயிலிடைவருந்தினோர்தன்னைமேவுழி
நயமுறுகுளிர்பொழினவிலவ்வெய்யிலி
னயலுறவிரைவினிலடையச்செய்யுமாற்
பயனுறப்பகையினைப்பண்ணுவாரென. (௧௪)

ஆன்றபூந்தழைபொதுளலர்மென்சோலையிற்
றேன்றுளிசிதறலுந்திகழுமாமயில்
வான்றருமழையெனமதித்துத்தோகையை
யேன்றுறவிரித்துநின்றெழிலிஞடுமே. (௧௫)

கற்பகச்சோலையைக்கருதிநக்கென
நிற்புறுசோலைமேனிமிர்ந்தரும்புவ
பொற்புறுமலர்தெரிபொறிவண்டார்த்திடு
மற்பொடுபொருந்துமற்றன்னதென்பபோல். (௧௬)

மாமைகொணகரினர்ப்பொருதுமாரவே
ளேமுறுசிலையவையிறவிறப்பினுந்
தாமவைகொள்ளுவான்றனைமுயவைத்தெனக்
காமுறவளருமாற்கரும்பினீட்டமே. (௧௭)

இளைசைமாநகர்தனதிடத்துவீற்றிருந்
துளகருணகரற்குயர்கைநீட்டியே
மிளிருறுசாமரம்வீசுமாறெனக்
களிதருபாளையோடசையுங்கந்திகள். (௧௮)

கோழுறுகாட்சியிற்குலவிநின்றிடும்
வாழையினிலைகளின்வளருநெற்கதிர்
தாழுறக்கிடந்திடுந்தன்மைபின்னிக
ழூழுறுசெயலைமுன்னுணர்த்தலொக்குமே. (௧௯)

தென்றல்வந்தசைவுறத்திகழுமூசனேர்
மன்றலங்கமலமேன்மகிழுமன்னமுற்
றொன்றுதேன்சோலைவண்டுவந்துபாடடத்
தன்றுணைதன்னொடுஞ்சயனஞ்செய்யுமால். (௨௦)

தையலார்குடைந்திடுந்தடத்தின்வாளைகள்
மொய்யின்மேற்பாய்ந்தெழூஉமுகிலைக்கீறியே
யொய்யெனச்சிதைத்திடவுவந்துபைம்பொழில்
செய்யதேன்கனியெதிர்சிறப்பவீசுமே. (௨௧)

ஆடியல்கருங்கணாராடும்போதினின்
வீடியகோவையுமணியுமிக்குறீஇத்
தேடுநரின்மையிற்றிகழுமாதரிற்
கோடுறுவாவியுங்குலவுமென்பவே. (௨௨)

பேணுறுமூன்றுகண்பெற்றபான்மையாற்
ருணுவைநிகர்த்தகாய்சான்றனம்மென
வேணுறுகொள்கையினெழுந்தவாறெனச்
சேணுறநிவந்ததுதென்னஞ்சோலையே. (உ௩)

பரிதிதேர்ப்பாகொருபகலினீர்விடா
யொருவவித்தென்னிளநீரையூக்கியே
விரைவொடுபறித்தலுந்தவறிவீழ்ந்தனன்
கரைதருமவனிருகாலுமிற்றவே. (உ௪)

சோலைவாய்த்தென்னையந்தலையுந்தோகைமார்
கோலமென்மார்புநற்குரும்பைகாட்டிடு
மோலிடிற்சிறுமையின்மறையுமொன்றுள
மாலுறப்பெருமையின்மறையுமற்றது. (உ௫)

தங்கண்மெய்யெடுத்தவன்றன்பகைக்கின
மிங்கிவையெனத்தெளிந்திடர்செய்தன்மைபோ
லங்குயின்மாமரத்தலங்கல்கோதியே
வெங்கவைமீமிசைமிதித்துச்செல்லுமே. (உ௬)

நந்தனகளத்துமைநாதன்றேண்டினர்
நந்தனமேயெனநயந்துபொற்றிடு
நந்தனவனமவைநாகர்நாட்டுறு
நந்தனநாணுறநண்ணும்பற்பல. (உ௭)

புறநகர்.

உரலடியுடையனவுலக்கைக்கையின
வரிமுறச்செவியனகும்பம்வாய்ந்தன
தருபலகாரமேற்றரிப்பவாகிய
கரியினநகர்ப்புறங்கலந்துமன்னுமே. (உ௮)

காருறுநிறத்தினுற்கடியிடிப்பினுற்
சாரும்வில்லணியினுற்ருனமாரியான்
றூரிமால்யானைகண்முகிலினின்றிடும்
வாரிகளெண்ணிலமல்குகின்றன. (உ௯)

மதமிகுமருவியவயிரக்கோட்டின
முதிர்பெருவடிவினமணிகொண்மொய்ம்பின
பதலைகணிகர்த்திடும்பருங்கையானைகள்
கதிகொளுஞ்செலவினிற்காட்டும்பேதமே. (௩0)

கந்துகமொப்பனகாலிற்செல்கையின்
வந்தினையொப்பனமடங்கலொப்பன
நந்தலிலார்ப்பினினடத்தினுடகர்
தந்திறமொப்பனசரிக்கும்பாடலம். (௩க)

தந்தனித்தன்மைகொண்மறையின்றன்மையை
யந்தமிருமுமுற்றமைந்தபண்புபோற்
கந்துகமாயினகதிகள்காட்டுவ
மந்திரமுறுவனமங்கலத்தன. (௩உ)

பரியெனவிதிவயம்பரிப்பித்தான்கொலோ
வொருபரிப்பெயரடைவுற்றவவ்வய
மருவியவியல்வயமாவெனும்பெயர்
தெரிவுறச்செய்திடச்சிறக்கும்வாசிகள். (௩௩)

கண்ணுதல்பொற்றதேர்கடுக்குமவ்வயி
னண்ணுறுதேரொனநவிலலாகுமோ
தண்ணியவியல்புடைத்தகுவனன்னதை
யெண்ணலன்கவர்ந்திடவிழிந்ததென்றிடின். (௩௪)

பரிதிதேர்நிகரெனப்பகர்துமேயெனி
னிருநிலத்தேகுதலிலதுமற்றதோ
ருருளினையன்றியேயொழிந்தவில்லது
தரியலர்வைகலுந்தடுத்தல்செய்வது. (௩௫)

மாடுறுநேமியவயிரவச்சின
பாடுறுசெம்மணிப்பரப்பபச்சையிற்
றேடுறுகாலகாழ்மேலதேரவை
யாடுமைம்பூதமாரடுக்குநேருமே. (௩௬)

வேலெதிர்மேவினும்விழியிமைக்கலார்
காலனேர்கடுகினுங்கால்பின்வைக்கலார்
மால்வரைவீழினும்வாட்கைசோர்கலார்
கோலியபோரெனக்குலவும்வீரரே. (௩௭)

படையினற்போரினிலாகம்பற்றிய
வடுவதுவேயலால்வடுவொன்றோர்கிலா
ரடலுறுகாலையிலரியவாவியைக்
கடைதருபுல்லெனக்கணிப்பர்வீரரே. (௩௮)

படைபயிலிடங்களும்பகருங்கோழியோ
டுடுமுதற்போர்தெரியிடமுமுற்றிடும்
புடைநகரியலிலென்புகலுற்றுமினி
யிடைநகர்வளத்துளுமியம்புகின்றனம். (௩௯)

இடைநகர்.

வேறு.

புளினஞ்செய்வரைபொய்கையே பூம்பொழில்பொன்
கொளுவுமாடமேகூடமேமுதலவாக்கூறும் [னேர்

வளமெலாந்தெரீஇக்கண்ணிமையார்களாய்வானத்
துளபெருஞ்சுரர்நோக்குவரின்னமுமுறங்கார். (௪0)

மிடையுநன்னளிர்மிக்கதோர்விரிமலர்ப்பொங்க
ரிடையின்மென்மொழிக்குயிலனுறொழிலினொடாட்ட
வடுவிலூசலுற்றூடுவார்மாதரார்மருங்கி
னடையுமாடவருளத்தையுமாட்டுவாரூசல். (௪௧)

மாவடுப்புரைவரிவிழிமங்கையர்தங்கை
மேவுபந்தினையடித்தலுங்கச்சுகவெளியிற்
றாவிநோக்கிடுந்தடமுலைதம்பகைக்கின்னல்
பாவியுற்றிடின்மகிழ்வொடுயாவர்தாம்பாரார். (௪௨)

பதுமமார்தடத்தொருமகன்பயின்முகந்தோற்றி
வதியுமாதினைத்தேடலுமற்றவணகைக்கப்
புதியதாமரைமுத்தெனப்புகன்றுபின்றேட
விதமொடேயெழமகிழுவனின்னவர்பல்லோர். (௪௩)

உரைகொண்மாதரார்தம்மிசையுரங்கெழுகுமரர்
மருவிவெஃகிடமாரவேள்வடித்தவிற்கணைகள்
பொருதல்வேண்டிடாமற்றவர்புருவவில்லிரண்டோ
டரிவிழிக்கணையிரண்டுளவன்னவேயமையும். (௪௪)

அளத்தல்செல்லருமளவினவரும்பொருளான்ற
வளத்தசேய்மையிற்றேன்றுவவன்பெருநிலைய
முளைத்தமாமுடிமாடங்கண்மொய்வரைநேருங்
கிளக்கின்மாடங்களழகினவழகிலகிரிகள். (௪௫)

யாகமன்றியுமாடமேனெறிவழியேகி
நாகமுற்றிடல்கூடுமானரரிவணண்ணும்

போகமற்றவணின்மையின் வெறுத்தனர்போகார்
மாகமோர்பெயர்வெறுக்கையங்நகரொனமன்னும். ()

குலவுமாமணிமாடமேலாடுறுங்கொடிக
ளிலேயெனச்சொலுமுலோபிகளிடத்தினிலேகீர்
புலமைமிக்குளீரிங்நகர்ப்பொலிந்தவரிடத்துப்
பலமுறும்படிவம்மினென்றழைத்தெனப்பரவும். ()

மாடமேலுறச்செம்பொனின்மணியினின்வகுத்த
நீடுமேன்மையகுடங்கர்கணிரைநிரைநிலவும்
பீடுதங்குசெந்தாமரைப்பிராட்டியையாட்டக்
கூடுமன்பினினமைத்திடுமாமனுக்குடம்போல். ()

செம்பொன்மாடமுநித்திலமாடமுந்திகழப்
பம்புமாமணிமாடமுமடுக்கியேபயிற
லும்பரிற்பொலிபரிதிநல்லுடுபதியெரிக
டம்பரம்புறுமண்டலமூன்றெனச்சாலும். (சகூ)

செம்மணித்திருமாடமேற்கருமுகில்செறியு
மெம்மையாளரன்கரியுரிபோர்த்ததையேய்ப்பக்
கொம்மைவெம்முலைக்கொடியனார்குளிர்முகமதியாற்
பொம்மலம்புலிக்காந்தநன்மாடநீர்பொழியும். (ரு௦)

துங்கமேனிலேமாடமேற்றேகையினிருந்து
மங்கைமார்குழற்கூட்டகிற்கொழும்புகைமருவி
யங்கணற்பலகணியுறவவ்வழியடையுந்
திங்கண்மெய்ப்படக்களங்கமென்றுயதுதெரியின். ()

மருவுமாடமேன்மைந்தரோடூடியமகளிர்
விரவுபன்மணித்தாரினையகைத்தனர்விரைவி

னுருவிவிண்ணிடையமுழ்ந்துறவோச்சலுமழுந்திப்
பெருகுதாரகைப்பெயரினைப்பெற்றனபிறங்கும். ()

வீதுயர்ந்திடுமாளிகைமிசையுறநிற்கு
மாதொருத்தியின்மருங்குலைவானவர்நோக்கி
யீதுவானெருகும்பமேயுற்றுளதிரண்டா
வோதுகும்பமுற்றுள்ளதவ்வானெனவுவப்பார். ()

மலையினிற்கொடிதோன்றிடல்வழக்கதாமலைதா
னிலைகொடியினிற்றோன்றிடலிவ்வியலிகந்து
நிலவுநன்மலையிரண்டுமேற்றோன்றிடநிகழு
மலகில்பூங்கொடியங்குறுமரம்பையர்நாண. (௫௪)

மைந்தர்மாதர்களுபரிகைமருவியேமாறுச்
சிந்துகின்றபொற்சிவிறியிற்றெறித்திடும்பனிநீ
ரந்திலாக்குறுஞ்சேற்றினையன்னவர்பின்ன
ருந்துபொற்சுணமுலர்த்திடவொளிர்ந்திடும்வீதி. ()

வரத்தினுங்குளாரகற்றியமணிகளேமறையோர்
கரத்தினுக்கியதானநீர்வெள்ளமேற்கலந்து [ற
புரத்தினின்றுபோந்தெங்கணும்புதைந்துமேற்றோன்
விரத்தினுகரமெனும்பெயரெய்தியதாழி. (௫௬)

மேக்குயர்ந்தபொன்மாடமெல்லமளியின்விளக்கு
மாக்கமன்னவராடவர்கலவியினயர்வை
நீக்குமைந்தருமலர்மணநீடிவானதியின்
றேக்குநீரளாய்வந்திடுந்திகழுமென்காற்று. (௫௭)

இரதிநேரெழின்மாதர்பஞ்செழுதடிச்சுவடு
திருமிகுந்துளகாளையர்குஞ்சியிற்றிகழு

முளைகொண்மாரனேர்மைந்தர்களொளிர்நகச்சுவடு
குரவமார்குழன்மங்கையர்கொங்கையிற்றிகழும். ()

மலையிடத்தவும்வனத்தினிடத்தவுமருத
நிலையிடத்தவுநெடுங்கடலிடத்தவுநகரத்
தலையிடத்தவுமாம்பொருள்சாருமாவணமுன்
னுலகமேழையுமுண்டமாலொருவயிறொக்கும். ()

அகநகர்.

திகிரிமால்வரைதானுமத்திகழ்வரையுடுத்த
நிகரிலாப்பெரும்புறக்கடற்றனுமேநேர்ந்து
தகவினுற்றெனப்பல்பொறித்தடம்பெருமதிலு
மகழியும்புறஞ்சூழ்ந்திடுமகநகரறைவாம். (சுO)

முந்துகின்றகாலாக்கினியுருத்திரமுதல்வன்
செந்தழற்படிவத்துறுதீயதோர்வெம்மை
வந்தெமக்குறுதவன்றலம்வரையுறவாழ்ந்தே
யந்தமில்கமடத்தொடுமமர்ந்திடுமகழி. (சுக)

வெங்கராமுதலாயினவகத்திடைவிரவப்
பங்கயம்முதன்மலர்கண்மேற்பரவுறும்பரிகம்
பொங்குதீக்குணமுள்ளுறப்பொலியவேபுறத்திற்
றங்குநற்குணங்காட்டிடும்வஞ்சமாத்தகையும். (சுஉ)

குமுதமம்புயங்குவளையென்றின்னவைகோலி
கிமிருமோடையினிற்றலங்நகரநேரிழையா
ரமுதவாய்முகம்விழியுறுமழகினைவெல்லத்
திமிருநீரினுற்றருந்தவஞ்செய்திடல்சிவணும். (சுந)

தருமவாழ்க்கையான்சார்தனம்புறத்துளார்தமக்கு
மருவநன்மையைவழங்கல்போலிளேசையின்மன்னும்
புரிசைமேலுறுங்கீழுறுமுலகையும்புரக்கு
மொருதனிப்பெருந்தன்மையையுடையதுமன்னோ.()

வென்றி கொள்பொறி யடக்கலாற் பகைப்புலம் விளிய, வொன்று மேன்மையா லகத்திடை யுயர்பொரு ளமைந்து, துன்று வண்மையாற் றொலைவருந் தன்மைசே ருரவாற், குன்ற லில்பெருந் தவத்தரிற் குலவுறு மிஞ்சி. (சரு)

மதிலிற்கோபுரமேனிலேக்குளிர்புழைவழியாக்
கதிகொள்பானுதேர்ப்பரிகளங்கெய்தலுங்களித்து
முதிரும்வேனிலிற்றூழ்த்துநின்றேகுவமொழியு
மதுபொருட்டினுற்பகற்பொழுதறவுநீடுறுமால். ()

## பாத்தையர் வீதி.

### வேறு.

இகபரத்தாசைநீத்தோரொன்னினுமணுகினன்றே
ரகமுறமயங்கச்செய்யுமழகினர்கற்பினரின்
மிகுதியினன்புகாட்டிவேழமுண்விளவையொக்கும்
வகையினுடைவராயாக்குமாதரார்சேரிம்ல்கும். (சஎ)

பயனொரு வருக்கே யாக்கும் பான்மையர் தமினும் பல்லோர்க், கியலுற வாக்கு வோரே யேற்றம துடையா ரொன்னு, முயர்வுறு முலக நீதி யுண்மையை யுணர்ந்தார் போலு, மயர்வறு பயனே யார்க்கு மாக்குவார் வரைவின் மாதர். (சஅ)

ஆடவர்முத்தமீவாரவர்களுமுத்தமீவா
ராடவர்தனங்களீவாரவர்களுந்தனங்களீவா
ராடவராசையீவாரவர்களுமாசையீவா
ராடவர்மெய்யன்புள்ளாரவர்களோமெய்யன்புள்ளார்.

சிலர் பொரு ளவி நயத்தின் றிறத்தொடு மாட லா னுஞ், சிலர்பொரு ளமுதம் போலத் தெளிவுறப் பாட லானுஞ், சிலர்பொரு ளுள்ளம் பூப்பத் தெரித் திடும் விநோதத் தானுஞ், சிலர்பொருள் கலவி யா னுஞ் சேருற வெளவிக் கொள்வார். (எ0)

புல்லுறல் சுவைத்த லங்கம் புணர்நகக் குறி சுவை த்துப், பல்லுற வழுத்த லோடு பாணியாற் றட்ட லாதி, யெல்லையில் செய்கை தேற்றி யெழுதுசித் திரங்கள் காட்டி, மல்லல்சேர் மைந்த ருள்ள மயக்கு வார் கணிகை மாதர். (எக)

மைந்தராம்வயலைத்தங்கட்பார்வைஃாம்விலையின்வாங்
தந்தமேர்முலையலத்தாற்சாலுறவுழுதுகாம [கித்
மந்தமிலாதுவித்தியமுதவாய்நீரைப்பாய்ச்சி
முந்துமன்னவர்தஞ்செல்வமுதிர்விளைவெய்துவார்கள்.

### வேளாளர்வீதி.

மண்மகண் மகார்களென்னும் வண்பெயர்க் கேற்ப மண்ணி, னுண்மலி விளைவின் வாழ்வா ருயர்கங்கா குலத்த ரொன்னுந், தண்மைசால் பெயருக் கேற்பத் தவாதநற் றூய்மை மிக்கார், திண்மைசேர் வேளாண் மாக்கள் செல்வமா மனைகள் சேரும். (எ௩)

தம்முயிர்க் கிடுக்கண் வந்து சாரினும் வாய்மை காத்துச், செம்மையி னிறுத்த வல்ல செய்கையை யுடையா ரீசன், மெய்ம்மைசேர் திருவ டிக்கண் மேவுநல் லன்பு வாய்ந்தோர், பொம்மல்சேர் விருந்து செய்வார் புகழுறு வேளாண் மாக்கள். (எச)

வைசியர் வீதி.

தருமநற் குணங்க ளெல்லாஞ் சான்றிடுந் தகையோ ராகித், திருவுறு சீர்க ளெல்லாஞ் சிறந்திடுஞ் செல்வ ராகிப், பெருமைசேர் புகழ்க ளெல்லாம் பெருகிடப் பெற்றோ ராகி, மருவுறும் வணிக மாக்கண் மல்லன்மா ளிகைகண் மல்கும். (எரு)

இறைதிகழ் காம கோட்டத் திறைவிமுன் னெண்ணான் காய, வறவகை வளர்த்தல் செய்தா ளறம்பெறீஇ வடநா டுய்ய, நிறையுமன் னதுதான் செய்யாணித்தகல் யாணி யம்மை, முறையொடிங் நாட்டினுய்க முதல்வனா வைத்த நீரால். (எசு)

இளைசைமா நகரந் தன்னி லியல்பெரு வணிகர் தம்பா, லளியொடு வறியோர் செல்லி னன்னவர் மிடியை யோட்டித், தளர்வறு தனத ரென்றே சாற்றிடத் தருவா ரென்னின், விளைவுறு மன்னோர் செல்வ மேன்மையார் விரிக்க வல்லார். (எஎ)

மனைவியே மைந்த ராதி வகையினர் பெருகட்டே நாளுநந், தனமவை யீட்டல் செய்யுந் தன்மையோர் நாண மெய்த, முனைதரு மன்ன தான மாலய தரும

முன்னும், வினைகளின் பொருட்டே நாளும் விரும்பி நன் கீட்டல் செய்வார். (எஅ)

பொருளினை முன்ன ரீட்டும் போதினிற் காணி யென்னு, மொருசிறு கணக்கைத் தானு மொராயிரம் பங்கா வெண்ணி, வளைவொடு மீட்டு வார்கண் மா நகர் வணிக மாக்க, டருமமேற் செலுத்தும் போது தாமது நினையா ரம்மா. (எகூ)

அவர்திருப்பணிகள்செய்யாவாலயம்யாண்டுமில்லை
யவர்திறத்தமைத்திடாதவன்னசத்திரமுமில்லை
யவர்வயினிரந்திடாதாரவனியில்யாருமில்லை
யவர்வயினேற்றிட்டோருக்காவதோர்மிடியுமில்லை.()

கோணுத லின்றிக் கோடி கோடியாப் பொருள் கொடுக்கு, மாணுடை ய்வர்க ளிந்த வணிகரோ யன்றி யாவர், பேணியே யெவர்வந் தாலும் பின்னிடா தெ ந்த நாளும், பாணியா தளிக்கும் பான்மை படைத் திடு நியமம் பூண்டார். (அக)

கண்ணிய கழக வாயாற் கல்வியாம் பொருளை யீவார், திண்ணிய கொடையாம் வாயாற் செல்வமாம் பொருளை யீவா, ரெண்ணிரு பொருளு மீங்தே யிரு பொரு டாமுங் கொள்வார், புண்ணியப் பொருளு மோங்கும் புகழ்ப்பெரும் பொருளு மன்னோ. ()

ஒருவரோர் தருமஞ் செய்ய வுற்றிடின் மற்றை யோரும், பரிவொடு துணையா நின்று பண்பொடு

முடித்தல் செய்வார், கருதுமுள் ளழுக்கா றில்லார்
கைதவஞ் சிறிது மில்லார், தருமமே கொள்ளை கொ
ள்வார் தரணியில் வேறி யாரே. (அங)

இடையறுத் தரும மின்னே ரியற்றுவா ரென்ப
தோர்ந்தோ, வடுவினுட் டறங்க டற்பின் வளர்க்குவ
ரென்று தேர்ந்தோ, கொடைதிகழ் வணிகர் தம்மைக்
குறித்தலு முவந்து தானு, மடைவுறீஇ யிங்கண் வாழ
வமைத்தனன் பாண்டி வேந்தன். (அச)

துங்கவெண் ணீறு பூசித் துலங்குருத் திராக்க மா
லை, யங்கமேற் பூண்டு நாளு மஞ்செழுத் தெண்ணு
வோராய்ச், சங்கர னெம்மான் பாதந் தணப்பறும்
வழிபா டுட்கொண், டெங்குமே புகழ் படைத்தா ரிந்
நகர் வணிக மாக்கள். (அரு)

அரசர்வீதி.

அறனினின் றிழுக்கா ராகி யல்லவை நீக்கி யான்ற,
மறனினின் றிழுக்கா துள்ள மானம துடைய ராகி,
முறைகெழு முயிரை யெல்லா முதிருமன் பியலி
னோடு, மிறைசெயும் வாழ்க்கை யோர்வா ழேந்தன்
மா ளிகைக ளோங்கும். (அசா)

மந்தமில்வயமானார்ப்புமதகரிபிளிறுமார்ப்பு
மெந்திரத்தேரினார்ப்புமிகலுடைவீரரார்ப்பு
முந்திடுசெயலைக்காட்டுமும்மையாமுரசவார்ப்பு
மந்தமின்றியங்காநிற்குமரசர்பொன்மாடவீதி. (அஎ)

அந்தணர் வீதி.

ஓதலேயோதுவித்தல்வேட்டல்வேட்பித்தலோடு [ர்
மீதலேயேற்றலென்னவியம்பறுதொழில்கள்செய்வா
மாதொருபாகனுரைமரபினுக்கிறையாக்கொண்டோர்
மேதகுமறையோர்வாழுமேனிலைமாடமோங்கும். ()

முதல்வழி சார்பே யென்ன மொழியுமுந் நூலுந் தங்கண், மதிபெறு முளத்தே யுள்ள வகைமையைத் தேற்று வார்போ, லிதமுறு மார்பின் முந்நூ லிலங் கிடப் பூண்டார் நல்ல, கதியுறு மந்த ணப்பேர்க் கார ணம் விளங்க வாழ்வார். (அகூ)

இந்நகர் மறையோர் செய்யு மிட்டியி னெழுதீந் தூமந், துன்னிமேற் போந்து வானந் தொடர்புகை வண்ண மாக்கிற், றுன்னரு மவர்த மில்லின் யூபமுந் * தருமத் தோங்கு, மன்னவ ருள்ள நீர்மை யவபிரு தங்கள் காட்டும். (கூ0)

மன்னுமாமகங்களாற்றிமந்திரமுறையிற்கூவி
யிந்நகருவந்துவாழும்பூசுரரிடையருது
பன்னருமவிகணல்கும்பண்புறுசெயலாலந்தப்
பொன்னகர்ச்சுரரைத்தம்போற்பூசுரராக்கினர்கள்.()

ஒருபிறப்பெய்தியப்பாலிருபிறப்புற்றுமூன்று
துரிசினிற்றீர்ந்துநான்குதொன்மறைதேறியைந்து
தருபொறியடக்கியாறுசார்பகையகற்றியேழு [ர்வார்.
வருபிறப்பொழிந்தேயெட்டுவான்குணத்திறைவற்சா

* தருமம் - யூபத்தம் பத்தி னுனியுமாம்.

முத்தழலோடும்*வேறுமுதிர்தழல்வளர்ப்பாரையர்
மெத்துநல்லதிதியோர்கள்வெம்பசித்தழலவிப்பா
ரத்தனூர்பூசையன்றியகங்கொளார்வேறுபூசை
சித்தமங்கவர்பாலன்றிச்சேர்கிலார்வேறிடத்து(கூ௩)

நாந்தகமாதியாகநவின்றிடுங்கருவியெல்லாந் [ங்கண்
தேய்ந்திடவழிவுசெய்யுஞ்செய்கையொன்றுடையவ
வாய்ந்திடுமறையோர்தங்கள்வாய்மனுக்கருவியோந
ருய்ந்திடினழிவினேடுமோக்கமுமியற்றவல்ல. [ன்

நான்மறை யங்க மாறு நவிலுமீ மாஞ்சை தர்க்க, மேன்மைய புராண மிக்க மிருதியாம் வித்தை சேரும், பான்மைய பொருள்க டேர்ந்து பகர்வுறு வாதஞ் செய்வோ, ரூன்மலி யுயிர்போ லென்று முலப்புருக் கழக மெங்கும். (கூ௫)

மற்றையநகர்கள்வாழுமாந்தர்களாயினுரை
யுற்றிடுதுயிலினீக்குஞ்சூட்டுவாரணத்தினேசை
சொற்றவிந்நகருளாரைத்துயிலினினீக்கல்செய்யும்
பற்றவாமறையோரோதும்பரமவாரணத்தினேசை()

கரந்திகழ் பலாசத் தண்டுங் கடியிடை முஞ்சி நாணின், றிரந்திகழ் தானைத் தூக்குஞ் செறிந்திடு சிகையின் சீரு, முரந்திகழ் மான்றோ லார்த்த வொள்ளூமுந் நூலும் பொற்ப, வரந்திகழ் மாணி யோர்சார் கிடைகளே வயங்கு மெங்கும். (கூஎ)

---

* வேறுமுதிர்தழல் - ஔபாசனக்கினி.

வேதமுற்கலைகளோடுவிரிந்திடுசிவாகமங்க
ளோதியேயுண்மைதேறியுயர்கயிலாயநாதச் [ய்
சோதிதன்மேனிதீண்டித்தொன்மையாராதனஞ்செ
கோதிலாவாதிசைவர்குலங்களும்பலவாமங்கண். ( )

கரகமார்கரத்தராயுங்காவிதோயுடையராயு
மருவுகோவணமேலார்த்தவளவியகோலராயும்
பரசிவவுணர்ச்சியின்றிப்பரகதியிலையென்வேத
சிரமுணர்ந்துயர்வோராயுந்திகழுமாதவர்களெங்கும்.

குடிலையொன் றிரண்டாய்ப் புல்லக் குலவியே யவ தரித்த, கடகரி முகத்துப் புத்தேள் காவல்செ யையனுதிப், புடைதரு தேவ ரெல்லாம் பொலிவொ டு பொருந்தா நின்ற, வடுவிலா லயங்க ளெங்கு மரு விடு மளவிலாத. (கoo)

மும்மல நோயை நீக்கு முதல்வரா மான்ம நாதர், தம்மருட் சத்தி யாய சௌந்தர நாய கிப்பே, ரம்மை யோ டினிது மேவி யமர்ந்துவீற் றிருக்குங் கோயில், செம்மைசேர் சீர்க ளோங்கச் சிறந்தொரு பாலின் வைகும். (கoக)

மருமலர் மகிழ்சீ தேவி வனப்புறும் பூமி தேவி, யிருவரு மிருபான் மன்னு மெழிலினோ டருளின் வைகிப், பெருமையிற் றிகழு மாதி கேசவப் பெரு மாள் கோயி, லொரு மருங் கதனின் மேவி யுயர் வொடு விளங்கு மன்னே. (கoஉ)

இயலுறுமிவைகளெல்லாமெழிலினோடியங்கப்பெற்
பயிலுறுநகரந்தானோர்பதக்கமாமதற்குநாப்ப [றுப்

னுயர்கயிலாயநாதரொருதிருக்கோயிலந்த
நயனுறுபதக்கத்தோங்குநாயகமணியேயாகும். ()

'திருத்தகு கோயிற் றென்கீழ்த் திசையினிற் சித்தி நல்கும், பொருத்தமார் சித்த தீர்த்தம் பொலிந்திடு மதற்கு மேல்பால், விரத்திசேர் முனிவன் வேண்ட விரிசடைப் பெருமா னுய்ப்ப, வரத்தொடு வந்த சேது கங்கைநீர் மலியு மாதோ. (கoச)

வே.று.

தந்திரமுணர்ந்துளார்தாஞ்செய்பூசையின்
மந்திரவகைகளின்வகுக்குமாமதிற்
சுந்தரநிலைமையைத்துலங்கக்காட்டுமே
கந்தரமேலெழுகடிகொண்மாடதில். (கoரு)

மும்மதில்கடந்திடுமுக்கண்மூர்த்தியைத்
தம்மகத்தமைத்திடுந்தகைமைபெற்றதோ
ரிம்மதிலென்றுமேயீறிலன்புடைச்
செம்மதியடியவர்திறத்தைத்தேற்றுமே. (கoசு)

நாகமேற்பதங்களைநலித்திடாவகை
யேகநாயகன்சிவனேவவந்துநற்
சேகுயர்மதிலுநீஇயழுத்துஞ்சீரொன
வாகையினெருங்குவவிடபமாநிரை. (கoஎ)

இன்னமும்பொரினிறையெடுப்பன்வில்லென
வன்னதுவராவகையமைவன்யானென

வுன்னியேமேருவிவ்வுருவுற்றுலெனப்
பொன்னுயர்முடியொடுபொலியுங்கோபுரம். (க0அ)

மலங்களைந்தாண்டிடும்வள்ளலாருறை
நலங்கெழுமிலிங்கமங்கதற்குநாடுமுற்
றுலங்குசீர்க்கோபுரந்தூலலிங்கமா
விலங்கலின்யாவருமிறைஞ்சுநீரதே. (க0கூ)

சேணுறுபதங்களிற்றிகழுவோரொலாங்
காணியமதிபுனைகயிலைநாயகன்
மாணடிவழிபடவிறங்கிவந்திடு
மேணியினிவந்துளதெழில்கொள்கோபுரம். (கக0)

மடலவிழ்நீபமாமாலைப்புங்கவன்
மிடலுறுசூரனதகந்தவிட்டிட
வடைதருவிச்சுவரூபமன்னதா
னெடுநிலைகெழுமுறநிவந்தகோபுரம். (ககக)

தொழுங்கயிலாயநற்றேன்றன்முன்னுற
வழங்குசீர்க்கோபுரவாயில்சார்ந்தவ
ரொழுங்கதிர்ச்சிவபுரவாயிலேயல
தழுங்கல்செய்யமபுரவாயிலண்ணுரர். (ககஉ)

சிமயமாமகளருள்செய்யுஞ்சீரினை
யமைவுறக்காணியவடைந்தகுன்றுகள்
சமைதரநின்றெனச்சாரச்சூழ்வுறு
மிமையவர்சினகரமிமைக்குமென்பவே. (ககங)

பண்ணவர் தலைக்கொளும்பர்க்கனுருறு
மெண்ணருமிரவியின் மண்டலம்மிவண்
டிண்ணினிங்குற்றெனவள்ளலார்திக
ழொண்ணிழன்மணிகெழுநிலயமோங்குமே. (கக௪)

நிறைநிலவுவாவினினீடுயிர்க்கெலா
முறவருள்பிராட்டிதன்னிடத்தினேங்கிடப்
பெறுமதிமண்டலமானும்பேரரு
ளிறைவிசேர்நிழன்மணியிமைக்கும்பொற்றளி. ()

அம்மையோடப்பனைதெதிரிலன்பினோர்
செம்மையிற்பணிந்திடுவாருஞ்சீர்த்திக
டம்மைநன்கிசைத்திடுவாருஞ்சால்பொடு
மிம்மெனநடித்திடுவாருமேயெலாம். (கக௬)

மறையொலிமனுவொலிமணியினொல்லொலி
துறைகெழுபண்கொடேவாரத்தொல்லொலி
நிறைதிருவாசகநெருங்குநல்லொலி
யறைகொளின்னியவொலியார்க்குமெங்கணும். ()

இத்தகுகோயிலினினிதுமேவுறு
நித்தகல்யாணியாநிமலைநாயகன்
முத்தொழினுயகன்மோனநாயக
னத்திருநாயகன்கயிலைநாயகன் (கக௮)

அந்தநன்னுயகனுருயிர்க்கெலாஞ்
சிந்தையினினைந்தவைசேரும்வண்ணமே
தந்தருள்கருணையின்சால்பின்மேவுறு
மிந்தனவானுதலிறைவிதன்னேடுமே. (கக௯)

பன்னரும்பான்மைசேர்பகவனாகிய
வன்னவனருளினையகங்கொடேயவன்
மன்னியசரிதையைவடமொழிப்படி
தென்னுறுமொழியினாற்செப்பலுற்றனன். (௧௨௦)

திருநகரப்படல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௬௨.

---

## புராண வரலாற்றுப்படலம்.

திகழிரும்புவிபடைத்தவன்முனிவரர்சில
நிகழுமாறொருதருப்பையினேமியையுருட்டப்
புகழுமன்னதுபோகியேயிறுத்ததோர்பொருட்டான்
மகிழுறும்பெயர்படைத்ததுநைமிசவனமே. (௧)

மண்டனிற்றிகழ்தபோவனமெனப்படுமகிமைத்
தண்டகாவனமுதலியதலங்களிற்றலையா
மெண்டிசாமுகமளந்திடுமிருஞ்சினைமீது
விண்டுதெங்கீடருச்செறிநைமிசவிபினம். (௨)

உற்றசெவ்வியையுணர்ந்திடுமுறுவராமுழவர்
பற்றுறும்புலந்திருத்தியேபத்திநெல்வித்தி
யற்றமின்மைநீர்தேக்கியேயவக்களைகளைய
நற்றவப்பயிர்வளர்நிலநைமிசாரணியம். (௩)

திங்கள்சூடியசிவபிரான்றிருச்சடையிதழிக்
கொங்களாவியகுணத்ததாயன்னவன்குவ்வி
லெங்களம்மைசேரிமகிரிமிசைவிடவிறங்குங்
கங்கைமாநதிகலந்ததுநைமிசக்கானம். (௪)

அனைவருந்தொழுஞ்சிவமுளத்தழுத்துதலானும்
வினையைவீடுறச்சினத்திடலானுமுண்விடயந்
தனைவெறுத்துறலானுமத்தனிவனத்துறுவர் [தும்.
முனிவரென்பதோர்மொழிப்பொருணாட்டுவர்முழு
தோலையார்த்துநன்மலர்ப்பொடிதுதையவேபூசி
மாலைவண்டெனுமுருத்திரமணிவடம்பூண்டு
கோலவீழ்சடைகுலவியேகாலினீர்பருகி
மேலவாந்தருவெனுமுனிகணங்களும்விளங்கும். ( )

குயில்கள்கூவுவதென்றனின்றசைகுவகுலவிப்
பயில்வகிள்ளைகளறுபதம்பாடுவவேணுக்
கியலுங்காகளந்தேர்பரிநாரியாயிருந்துஞ்
செயிர்விளைத்திடவலியிலவாயினசிறிதும். (எ)

பின்னமுற்றிடாப்பிரமமாரொழுக்கமும்பிரியை
துன்னொழுக்கமும்வனத்துறையொழுக்கமுந்துறவு
மன்னொழுக்கமும்வழுவிலாமெய்யர்கள்வசிக்கும்
பன்னசாலைகள்பற்பலபரந்தவட்பயிலும். (அ)

கூறுநான்மறைமுழக்கமுங்கோதிலாகமங்கள்
வீறுமிக்கெழுமுழக்கமுமிருதிகண்முழக்கு
மாறிலாதபல்புராணநன்முழக்கமும்வைய
மீறுசேரினுமீறுசேர்ந்திடுதலையியையா. (கூ)

*பிரமசாரிகளங்கியு+மனையினிற்பிரியா

---

* பிரமசாரிகளங்கி—சமிதாதானாக்கினி.

+ மனையினிற் பிரியாரிருவகைப்படு மெரிகள்—ஔபாசனாக்கினியும் அக்கினிகோத்திராணியும்.

ரிருவகைப்படுமெரிகளுமீறின்மெய்த்தேசும் [கி
பொருவில்சோதிகொள்விருக்கமுங்கானிருள்போக்
விரவலோதியாலவித்தையைவிலக்குமாறுணர்த்தும்.

வேதநான்கவாவிதித்திடும்வியாதனுர்விபின
மாதியாகியவருந்தலமிருந்துவந்தடையுங்
கோதிலாரிடர்குழுவினைக்குறிக்கிலார்கலியிற்
போதுகின்றதோர்நதித்தொகைபோன்றிடுமன்றே.

வேழங்கேசரிமாவொடுவியாக்கிரமுன்னுச்
சூழுமாக்கடந்தொகையொருதுறையினீர்பருகிக்
காழுறும்பகையின்மையைக்காட்டுமேலங்கண்
வாழுநற்றவர்மாட்சிமைவகுத்திடும்வகைத்தோ. ()

இவ்வகைப்படுநைமிசமெனும்வனத்தொருகாற்
சைவவாகமம்வல்லநல்விரதமாதவர்க
ளௗவியந்தவிர் * சத்திரயாகமொன்றதனைத்
தெய்வமாமறையிசையொடுசெய்குவாரானுர். (கங)

அன்னகாலைவான்பெருமையுமளவிலாத்தேசு
மன்னுகின்றசீர்ச்சூதனுமாதவர்கோமான்
றன்னையன்பொடுநன்குறப்பரவியத்தகையோன்
மின்னுமாமுகநோக்கியேவினுவுரைசெய்வார். (கச)

பரசிவன்கதையமுதநற்பானத்திற்றெவிட்டன்
மருவவேயிலையெங்களுக்கின்னுமவ்வள்ளல்

---

* சத்திரயாகம் — பலருங்கூடிப் பலவகைத் தருமங்களோடு நெடுங்காலஞ் செய்யப்படுமொருவகையாகம்.

பொருபவந்தனையகற்றிடும்புண்ணியக்கதையை
யருளுருக்கொளுமருந்தவபகர்ந்தருளன்பால். (கரு)

நல்லதாங்கதைகேட்டிடுநயப்பினலன்றே
வெல்லுமற்புதச்சித்தவைராக்கியவீறுந்
தொல்லைத்திவ்வியஞானமுஞ்சோதிபாலொழியா
தொல்லும்புண்ணியத்ததிகமாம்பத்தியுமுண்டாம் ()

என்றுகூறியவிருந்தவரின்மொழிகேட்டுத்
துன்றருட்சுவைநிதியமாஞ்சூதமாயோகி
நின்றயாவையுமுணர்ந்திடுநிகரிலாவியாத
மன்றனைத்தனதிதயமாங்கமலமேல்வைத்து. (கஎ)

முத்திறப்படும்பகைகளைமுருக்கியமுனிவர்
சித்தமாகியதாமரைசெவ்விதின்மலர
வுய்த்தசெங்கதிர்ப்பரிதியஞ்செல்வனுயுவந்தே
யித்திறத்தினலின்புறவியம்பியேயருள்வான். (கஅ)

தேவதேவனதிருங்கதைசெவிக்கொளவிரும்பு
நீவிரோநிலவுலகிடைநெடுந்திருவுடையீர்
தாவிலாப்பெருந்தகைபெறுந்தவத்தினீரதனை
கூவுகின்றனமன்புடைக்குணத்தொடுங்கேண்மின். ()

நிகரிலாகமமெங்கணுநிகழுமந்தணமா
மிகலிலாமலேயமருவதிளைப்பினையாற்று
நகரமாகுமான்மற்றதுநனிபெரிதுலகின்
மிகுதியாகியதலங்களின்மேன்மைபெற்றுளது. (உ0)

ஓதுபாவங்களனைத்தையுமுனைத்திடலொண்ணுப்
பாதகங்களெவ்வெவற்றையும்பரிந்திடப்பாற்று

நீதிசேர்ந்ததாலன்னதனிகரின்மான்மியத்தைப்
போதமாம்வகைபுகலுவம்புகரிலாப்புலத்தீர். (உக)

தப்பிலாவகைமுழுமையாந்தருமங்களுணர்த்து
மிப்புராணங்கேட்பவர்களுக்கெவ்வகைப்பாவத்
துப்புநீக்கிடுமிகபரத்தொன்மையைப்பயக்கு
மொப்பிலாதசௌபாக்கியமுதவிடுமென்றும். (உஉ)

முன்னைநாளினிலகத்தியமுனிவரன்விரும்பித்
தன்னுணர்ந்திடும்வசிட்டனையாதியாச்சாற்றும்
பொன்னிருந்தவர்க்கிசைத்ததோர்புராதனவனத்தின்
மன்னுமான்மியமறைகளின்முடிவினில்வயங்கும். ()

வேதவீற்றிடைத்தவமறைபொருள்களைமிகவும்
போதமாம்படிதெளியவேபுராணங்கள்புகலு
மாதலானவில்புராணங்களெவற்றினுமமைய
வோதிடப்படுமிளைசையாந்தலத்தினதுண்மை. ()

ஆயினுஞ்சிவபுராணங்களவற்றினுளொன்றாய்
மேயதோர்பிரமாண்டமாம்புராணமேவிரிவாய்
நேயமோடதன்வகைமையும்பெருமையுநிகழ்த்து
மேயவாறுலகுய்ந்திடவியம்புவமவையே. (உரு)

வேறு.

முன்னமோர் காலங் காசியாந் தலத்தின் மூலமா மறைமுடி வுணர்ந்தோர், பன்னுமைம் முகத்துச் சிவ பரஞ் சுடரை யுளத்திடைப் பதித்திடு நீரார், மன்னு நற் பத்தி விழுங்கவே தோன்று வடிவமா கேச்சுரத் தொல்லோர், தன்னைநே ரில்லாத் தவத்தையே யுல கிற் றலைமைசேர் தனமெனக் கொண்டோர். (உசு)

வசிட்ட னங்கிராக் காசிபன் குற்ச னத்திரி பிருகு வான் மீகி, விசிட்ட ஞஞ்சத்தி பராசரன் வியாதன் சுகன்கட முனிவரன் விடயம், புசித்தலில் போதா யனன்புலத் தியன்சா பாலியே கவோளகன் புலக, னசித்தலில் வாம தேவன்யாக் கியவற் கியன்சன கா தியர் நால்வர். (உஎ)

இத்திறப் பெரிய ராதியா முனிவர் யாவரு மொ ருங்குசேர்ந் தாங்கே, சித்திதேர் ஞான வாவியே முதலாந் தீர்த்தங்க ளெவற்றினும் படிந்து, பத்தி யின் விசுவ நாதநற் றேவைப் பணிந்துயர் தோத்தி ரம் பகர்ந்து, முத்திமண் டபத்தி லிருந்துநம் பெரு மான் முதன்மைபா ராட்டினர் மகிழ்ந்து. (உஅ)

அந்தநற் பொழுது பத்திநின் றேவ வருந்தவர் வே தநூ லகலாச், சிந்தையைத் திருத்திச் சிவத்தினை யிருத்துஞ் செல்வமுந் திருச்சடைச் சீரு, மிந்தலர் முகமு மக்கமு நீறு மிலங்கொளி மேனியும் பொலிந் து, முந்துற வதிந்த வகத்திய முனியை முதத்தொடு போற்றுவார் தொழுது. (உகூ)

வெல்கநீ குமர நாயக னடியார் வேங்கெனுந் தலை மைபூண் டுள்ளோய், வெல்கவைம் புலத்தை வென் றிடுந் தவரின் மேம்படு மகிமைபெற் றுறுவோய், வெல்கவே தாந்தப் பங்கயத் தடத்தை விளக்கிடும் விண்மணி யானோய், வெல்கவா தாவி மேவல வென் ன வியந்துபின் னிங்ஙனம் விரிப்பார். (௩௰)

பவ்வமா ருலகின் மகத்துவம் விசிட்டம் பல்கிய சுயம்புவா மிலிங்க, மவ்வவை யனைத்து மண்ணலா ரருளா லறிந்தனை யவற்றினுண் மேலாய்த், திவ்விய புத்தி முத்திக ளளிக்கு மிலிங்கமே தீர்த்தமே தல மே, யிவ்வொரு மூன்று மார்வமீக் கூர்ந்த வெங்களு க் கிசைத்தரு ளென்றார். (ருக)

என்றசொற் கேட்ட வகத்திய நாமத் திருந்தவப் பெருந்தகை முனிவன், மன்றவா தரித்து வடிவினி லெங்கு மயிர்த்தொகை பொடிப்பவா ரிசம்போற், றுன்றெழில் வதன மலரநீர் விழிகள் சொரியநாத் தழுதழுப் படையக், குன்றலில் குணத்து வசிட்டனை முன்னு மறிஞரைக் குறித்திது கூறும். (ருஉ)

வினையிலீர் நீவிர் வினவிய தாற்ற மேலதாம் வி டையதற் களிப்பே, மனமுறக் கேண்மி னென்றுபின் னுளத்தை மலைவுறா தொருப்பட நிறுத்தித், துனி வினை யகற்றும் விசுவநா யகனுந் தொல்பெருந் தே வையு மகலாத், தனதருட் குருவா மறுமுகம் படை த்த தாயனுன் றன்னையு முன்னி. (ருரு)

இளைத்தலை யொழிக்குந் தலத்துவீற் றிருக்கு மி றையையு மிந்துநேர் முகத்தாற், றளைத்தகை சிதைக் கு மங்கலத் திறைவி தன்னையுஞ் சார்ந்தவ ரிடும்பை, வளைத்தடுஞ் செல்வ வடுகநா தனையும் வணங்கிநல் லஞ்செழுத் தெண்ணித், திளைத்தருட் கடலின் முனி வரை நோக்கிச் செகமெலா முய்யவே செப்பும். ()

முன்பெருங் கயிலைக் கோயிலின் வீணை முனிவற்
கு முளரியின் முளைத்தோ, னின்புறம் வகையி னீங்
கிது விரித்தே யிசைத்தன னென்றனன் கேட்ட,
மன்புனை யறவோர் மலரய னெங்ஙன் வகுத்தனன்
வகுத்தியா லென்றே, யன்பினெண் காதை விருப்பி
னுல் வினவ வன்னவ னருளுவா னுனன். (௩ரு)

வே று.

உலகம்யாவினுமொருவுருதுறைந்திடுமொருவ
னலகிலாவுயிர்க்கருளுவான்சத்தியானமைந்த
விலகுருக்கொடுவெளிப்படவினிதுவீற்றிருக்குஞ்
சிலையெனப்படுந்தகையதுதிருக்கயிலாயம். (௩சு)

பணிபரித்திடும்பாருலகிருள்கெடப்பாற்று
மணிபெறும்படியெம்பிரானமைத்ததோர்தூண்டா
மணிவிளக்கினையொத்துளதூழியுமழியாக்
கணிதமற்றிடுஞ்சுடருடைக்கயிலையங்கிரியே. (௩எ)

கண்டுறுங்குளமியைதலாலைம்முகக்கவினுல்
விண்டுதன்னடிவணங்கலான்மேகமேற்கொளலான்
மண்டபப்பொலிவெய்தலான்மறலிமாய்ந்திடலாற்
றெண்டர்சூழ்தலாற்சிவனெனத்தொழப்படுங்கயிலை

சிமயம்பெற்றிடுதொடர்பினுற்சிவனிடத்துறலாற்
கமழும்பூங்கொடித்தகவினுற்களிறுதோன்றுதலாற்
றமமகன்றிடவுயிர்த்தொகைதன்வயின்வரலா [ல்
லுமையெனப்படுமொருத்தியையொத்ததவ்வோங்க

பண்ணுலாமறையெவைகளுமிருங்கலைபல்லவு
மெண்ணிலாவுயிர்முழுவதும்பற்பகலியற்றும்
புண்ணியத்தொகையாவையும்பொற்புறத்திரண்டு
நண்ணியோருருவந்தெனவிளங்குமங்ஙகமே. (சO)

பிள்ளைவான்மதியணிபவன்பெட்புடனிருக்க
வெள்ளிவெற்பெனஞானமார்பிழம்பினைவிதித்திட்
டுள்ளதாம்பெருங்கயிலைமிக்குயர்ந்தஞானியர்தந்
தள்ளருந்திருமனத்தினுந்தணப்புறுதியலும். (சக)

எவ்வகைப்படுமுலகுளோருளத்தையுமிழுப்ப
தெவ்வகைத்தனியறங்கட்குமிருப்பிடமாய
தெவ்வகைச்சுசிப்பொருளையுமிருஞ்சுசிசெய்வ
தெவ்வகைத்தினும்புண்ணியர்தொழுவதவ்விரவி. ()

பிணிகணீக்கியெப்பொருள்களும்பெறச்செயுஞ்சிந்
மணியினங்களுங்கோக்களுமலர்கனியொழியா [தா
தணிதருக்களுமதுவிழுதமுதம்பாறயிர்க
ணணியவாவியுமங்கவணலத்தொடுநிலவும். (சங)

திருந்துமாமறையோசையுந்தேவதுந்துபிக
ணிரந்தவோசையுந்தவர்துதியோசையுநீடும்
புரந்தராதியர்வேண்டுறையோசையும்பூதர்
பரந்தவோசையுமருவிவீழோசையும்பல்கும். (சச)

பல்வகைப்படுஞ்சிகரமார்பந்தியுமணிசேர்
பல்வகைப்படும்விமானங்களொழுக்கமும்பகரும்
பல்வகைப்படும்பிரமதகணங்களின்பதியும்
பல்வகைப்படும்பாரிடர்பவனமும்பரக்கும். (சரு)

இன்னதாகியசிறப்பினையியற்கையாவுடைத்தா
மன்னதோர்பெருங்கயிலைமேனனந்தலையகத்தி [ந்த
லுன்னுதெய்வவெண்கமலமென்பொகுட்டெனவுயர்
பொன்னிலைமைகோயிலொன்றுற்றதுபொலிந்தே.

முந்துமொள்ளொளியரதனதீபிகைமுயங்கு
மந்தவாலயமதனிடையனந்தசூரியர்கள்
வந்தொருங்கியேயொளிர்தல்போனவமணிமயமா
யுந்துசீர்கொளுமரியணைப்பீடிகையும்பர். (சஎ)

திங்கள்சூடியசடிலமுந்திகழொருமுகமும்
பொங்குமுக்கணுமான்முதற்பொலிந்திடுநான்கா
மங்கையுங்கறைக்கண்டமுஞ்சேர்ந்தமெய்யழகு
மங்கைபாகமுமுடையதோர்சீகண்டவடிவாய். (சஅ)

பம்புபல்லியங்கவரிகள்பீலிகள்பரித்துத்
தம்பரஞ்செயப்பாரிடர்தாபதர்பரவத்
தும்புருப்புதனுதியோரியாழ்கொடுதிப்ப
வெம்பிரான்பெருங்கருணையோடினிதுவீற்றிருந்தான்.

பரியநாரணனிதயமார்சுடரிடைப்பதிந்த
வரியகாட்சிபோற்கயிலைசேர்கோயிலினணைமேற்
றெரியவெம்பிரானருளினூற்றிகழ்ந்துவீற்றிருக்கும்
பெரியசீர்த்திறமினைத்தெனப்பேசுதற்கெளிதோ. ()

அப்பரன்றனைவழிபடவயனரியுவணை
வைப்பினுக்கிறையாதிபாம்வானவர்தவத்தி
னெப்பிலாதுறைநாரதன்முதலியவுறுவர்
தப்பிலேனையவிருடிகளியாவருஞ்சார்ந்தார். (ருக)

அன்புநின்றுமுன்னேவுறவனைவருஞ்சார்ந்து
முன்புகோபுரத்தலையினின்முதன்மைகொண்டிருந்த
துன்புநீக்குநந்தியம்பிரான்றொல்லருள்பெற்றுக்
கொன்புனைந்ததோர்திருத்தகுங்கோயிலுட்குறுகி. ()

தேவதேவுமுச்செகங்களுக்கிறையுமாய்த்திகழ்ந்து
நோவகற்றுநங்கறைமிடற்றண்ணலைநோக்கி
யேவுமன்பினாலிறைஞ்சியேயைந்தெழுத்தெண்ணிக்
கோவின்முன்னுறச்சிவனருள்குறிக்கொடேயிருந்தார்.

வே று.

இருந்திடுங் காலை யோகத் தேற்றநா ரதனென் னு மத், தருந்தவன் பதுமக் கண்ண னம்புயத் துதித் தோ னென்னப், பொருந்திய விருவர் தம்மைப் போ ற்றியே விநயத் தோடு; திருந்திய கமலத் தோனைத் தெரிந்துவந் தியம்பு கின்றான். (ருச)

புண்ணியத்தலங்களுள்ளும்புண்ணியதீர்த்தத்துள்ளு
திண்ணிலத்தமுதநல்குந்திவ்வியவிலிங்கத்துள்ளு [ந்
நண்ணியதூய்மையானநலமெலாம்வல்லைநேர்வ
தண்ணியமறங்கடீர்ப்பதலமுதன்மூன்றும்யாவை. ()

பவக்கடல் கடந்து முத்தி பசுக்கள்பெற் றிடுமா றெங்ஙு, னிவக்குழூ வகைய கன்ம நிகழ்பய னெதனு லெய்து, மிவற்றினை யெல்லா மெந்தா யிசைத்தரு ளன்பின் சீட, ருவக்கவெப் பொருளுந் தீர்த்த ருணர்த்துவ ரன்றோ வென்றான். (ருசு)

என்றுநா ரதப்பேர் பெற்ற விருந்தவ னியம்ப லோடுந், துன்றுபல் புவன மெல்லாந் தோற்றிய பிர மு தேவன், மன்றவத் தொல்லோன் சொற்ற வாசகஞ் செவிவாய்த் தேக்கி, யொன்றிய வருளி னூலே வுல கெலா முய்ய வோதும். (ருஎ)

நாரத நீயிங் கெல்லா ஞாலமு முய்யு மாறு, கூர வே வினவ லுற்றாய் செவியிடைக் கொள்வோர் பா வம், வேரறக் களைந்து மிக்க வெறுக்கையை வழங்கு மன்ன, சீரினை விளம்பு கின்றாஞ் சித்தமொன் றிட வே கேட்டி. (ருஅ)

தனயநீ வினவி யுற்ற தலமுதன் மூன்றி னுக்குந், துனியக லுவமை யான தொல்லைமூ வுலகி னில்லை, யனையவை புவியில் வாய்ப்ப வமைந்தன வவற்றின் மேன்மை, யெனையவு மியாருந் தேறு தியலுமந் த ணமாய் வைகும். (ருகூ)

இளைசைமா நகரம் பிள்ளா யிருந்தல மெவைக்கு மேலாங், களிதருங் கயிலை வெற்புக் கடுப்பது கயிலை நாதக், கிளர்பெய ரிலிங்கத் திற்குக் கேழிணை யெங்கு மில்லை, நளிர்மிகுஞ் சித்த தீர்த்த நயப்பினுக் கொப் பொன் றுண்டோ. (சூ0)

என்னவே யிசைத்த கஞ்சத் திருந்தவி சிருந்த தோன்றல், பொன்னடி வணங்கிப் போற்றிப் பொரு விலா விறும்பூ தெய்தித், தன்னிகர் தலமூன் மூன்

றுஞ் சாற்றினை தொகுத்தி யாரு, நன்னரெய் துறவி ரித்து நவிலுதி யென்முன் றூயோன். (சுக)

புன்மைசே ரவங்கண் மாற்றிப் புரையிலாத் தவங்கள் செய்தோ, னன்மைசேர் பத்தி யோடு நாரத முனிவன் கேட்பப், பன்மைசேர் * பொழில்க ளெல்லாம் படைக்குநான் முகத்துப் புத்தேள், வன்மைசேர் பான்மை யின்றி வகுத்தவை யருளிச் செய்தான். (சுஉ)

கயிலையிற் கமல யோனி காதலித் தருளிச் செய்த, வியனுறு மிளைசைத் தான மேன்மையை யன்ன காலை, யயலுறு மியாருங் கேட்டா ரன்னதை யுங்கட்கின்னே, நயமுற மொழிது மென்ன நற்றவ னவில லுற்முன். (சுந)

புராணவரலாற்றுப்படல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௲உ௫.

---

## தலவிசேடமுந் திர்த்தவிசேடத்திற் சுபத்திரன்கதையு முரைத்த படலம்.

ஒருமையாருமுளந்திகழுண்மையி
ரருமையாருறுமம்புவிக்கையா
மிருமையாருமிளைசையெனுந்தலப்
பெருமையாருந்தெரிந்திடப்பேசுவாம். (க)

---

* பொழில்—உலகம்.

என்றுபுண்ணியத்தானங்களெங்கணு
மொன்றுமேயமைந்துற்றிடலில்லன
வன்றுசங்கரனுகியவெம்பிரான்
மன்றவாற்றுபுவைத்ததிளைசையே. (உ)

ஆதலாலதன்மேன்மையனைத்தையுங்
கோதிலாதுணர்கொள்கையர்யாருளர்
மாதுபாகனெனப்படும்வள்ளலே
பேதமின்றியுணர்ந்திடும்பெற்றியான். (௩)

வேறு.

முதலுகந்தன்னின்ஞானமுந்துமற்றையதின்வேள்வி
யதன்பினுமிரண்டினீகையரியவீடுதவுமென்றும்
விதமுறுமவற்றினெல்லாம்வியன்சிவபூசையொன்றே
யிதமிகுமுத்திநல்குமென்றுநல்லறிஞர்சொல்வர். ()

தீமைதீர்த்தின்பநல்குஞ்சிவலிங்கபூசைதானுங்
காமுறுபவர்க்குப்பன்னுட்கழியவீடருளுமென்ப
ராமதத்தலத்திலந்தவரும்பயன்விரைந்துநல்குந்
தோமிலத்தலத்தின்றென்மைசொற்றிடுகிற்பார்யாரோ

வேறு.

இளையாற்றங் குடியென்று கேட்டலினு லறம்பெ
றுவ ரியல்சேர் மாந்த, ரிளையாற்றங் குடியென்று நி
னைத்தலினுற் பொருளடைவ ரேற்ற மிக்க, விளையாற்
றங் குடிதன்னைக் காணுதலா லின்புறுவ ரிடைய று
ம, லிளையாற்றங் குடிதன்னில் வதிதலினு லிறைவன
டி யெய்தி வாழ்வார். (சு)

காசிமுதற் புண்ணியநற் றலங்களிலே யுடன்முடி விற் கலப்பர் முத்தி, தேசுடைய விளசையினின் மூன்றுதினம் வசிக்கினது சேர லாகும், பேசுபெரும் பாதகமாம் பஞ்சினுக்குச் சூறையெனும் பெருமைத் தாகி, யேசகலு மப்பதியின் முன்னைவினை சிந்திடுமா றெய்தல் வேண்டும். (எ)

அறியாமை மயக்கமொடு தெய்வகதி யெனப்புகலு மவற்று ளொன்றான், மறைபுகழு மிளசைநகர் புகினுமவர் பாவமெலா மாய்த லுண்மை, * யுறவிமுத லானைவரை யுயிர்களவண் முத்தியடைந் துய்யு மாற்றான், முறைதருமத் தலந்தனக்கு நிகரில்லை யில்லை செக மூன்றி னுள்ளும். (அ)

அனைவருக்கு மிருமைதரச் சிவபெருமா னிருமித் த வனைய தானம், வன்மவுலி முதலமரர் சித்தியெலா மெய்திடுவான் வழிபட் டுள்ள, தினையதல நினைத்த தொரு மாத்திரத்தே பெரும்பாவ மிரிக்கு மின்னு, முனிவரரோ யுயர்புத்தி முத்திபெறக் கொடுக்கின்ற முதன்மைத் தாகும். (கூ)

அத்தலத்தி லென்றுமுறை யனைத்துயிர்க்கு மீள வும்வந் தவனி மீது, பொத்துமலத் துடலுழலு மச்ச மிலை யீதாயப் புகலும் வேண்டாந், தத்துவத்தின் றலைகடந்த சிவபெருமான் வீற்றிருக்குந் தலங்க டம்மு, ளுத்தமமாம் புராதனநல் வனத்தளவின் மகிமை யையா ருரைக்க வல்லார். (கo)

* உறவி—எறும்பு.

சுபத்திரன்கதையு முரைத்தபடலம்.

எவரேனும் பொறியடக்கி யுளநிறுத்தி யப்பதியி லிருப்ப ராயி, னவர்மூன்று பொழுதினுமுண் டிற்றிடினுங் காற்றினையுண் டமர்வா ரொப்பர், நவிலுமொரு முட்டியள வுதவினது மாதான நலத்த தின்னு, நுவலுவதென் சித்தபுரங் காசிமுதற் றலங்களினு நோன்மைத் தாமே. (கக)

அப்பதியின் றிருப்பெயர்கள் சிவபுரம்பூ கைலாயமகில காமந், துய்ப்பவருள் புரஞ்சித்த புரம்பழையவரணியமே தொலைவின் மன்ற, லுய்ப்பதொரு பொருவில்புர மிளையாற்றங் குடிமுதலா வுயர்வுற் றுள்ள, விப்பெயர்க ளன்றியினு மனேகமுள வறிவுடையோரிசைத்த பேர்கள். (கஉ)

இன்னவகை மான்மியத்தா மிளைசையெனுந் திருப்பதியே யெவற்றி னுக்கு, முன்னையதா யுத்தமத்தினுத்தமமா மீண்டைய முனிவீ ரில்லை, யன்னபரிசுணர்திரொன வகத்தியமா முனிவிளம்ப வதனைக்கேட்டு, மன்னுபெரு வியப்பினராய் மாதவர்க ளின்னபடி வழங்கு கின்றார். (கங)

தலப்பெருமை முழுதுணர்ந்த மாதவநீ யுண்மையினைச் சாற்றல் செய்தா, யுலப்பில்விய னிளைசைநகர் வைபவத்தைக் கேட்டுநல முற்றோம் யாங்கள், மலைப்பில்வகை சித்ததட மான்மியத்தைக் கருணையினால் வகுத்தி யென்ன, நலப்படுமம் மொழிகேட்டு முற்றுணர்ந்த கடமுனிவ னவில லுற்றான். (கச)

கேட்டபொழு தேயுயிர்கள் பெரும்பாவம் போக்குவதாய்க் கிளரு மேன்மை, யீட்டமுள தாயியலுஞ் சித்ததட மான்மியத்தை யின்ப மாரக், காட்டுமதன் ரேற்றமொடு கழறிடுவ மின்னேயாங் கரிசு சேர்ந்து, வாட்டமுறு முனீந்திரர்காண் மனந்தன்னை யொருப் படுத்தி மகிழ்ந்து கேண்மின். (கரு)

எப்போதிப் புவனமிசைத் தீர்த்தங்க ளானவைக ளில்லை யாமோ, யப்போது கயிலையிறை யெப்பொருளு மருடீர்த்த மமைத்தா னங்கே, யொப்போதாச் சிவதீர்த்த மெனப்படுமன் னதுபீழை யொழிக்கு மேன்மைத், திப்போதத் தீர்த்தவுயர் வுணர்த்துமொரு தொல்காதை யியம்பு கின்றும். (கசு)

வேறு.

முன்னமொருகாலத்துமுத்தமொடுமுழுவயிர
மின்னுமாமணிகனகம்வெற்பிஞெருங்குறவரன்றிப்
பன்னுமுயரகிலாரம்பறித்துவருந்திரையகலாக்
கன்னனிகர்சுவைவிருத்தகங்கையிஞேர்கரைதன்னில்.

நிபத்தினில்வே றில்லாத நீடுவள நிறைந்துடைய, சுபத்திரக மெனவுரைக்குந் தொன்மைபெறுங் கிராமத்தில், விபத்தினையுற் றறியாத வேதியர்தங் குலத்துதித்தோ, * னுபத்திதிசே ராரணநூ லொழிந்திடுநற் கரைகண்டோன். (கஅ)

சிரவுகமே மார்த்தமெனத் திகழ்கரும நெறிவல்லோன், பொருமாரன் வடிவிலிப்பேர் பூண்டிடச்

* உபத்திதி—ஓதியவையுள்ளத்தமைத்தல்.

செய் வடிவுடையோன், வருபிறகே மாவனப்பை மாற்றுமெழிற் பத்திரதைப், பொருவில்பெயர்ப் பன்னியொடு பொருந்தியவில் லறம்புரப்போன். ()

இஞ்ஞாலஞ்சுபத்திரனென்றேத்துமொருநாமமுளோ
விஞ்ஞானம்பிகையோடுமேவியருள்வைப்பாகி [ன்
மெய்ஞ்ஞானமீந்தருளும்விரூபாக்கப்பரமனடி
யெஞ்ஞான்றும்வழிபடுதலியற்றியேயிருந்தனனால். ()

இருந்திடுமம் மறையாள னேழுலகு மிருணீங்க, வருந்திருக்கண் மாண்புடையோன் வைகலுமே மகிழ்ந்தருளப், பெருந்தவங்க ளல்வகையிற் பேசலுறுஞ் சரியையிடைப், பொருந்தியநந் தனம்வைக்கும் பொருவில்பணி பேணிடுவான். (உக)

தாதகிகூவிளம்புன்னைசண்பகயாமந்தாரம்
பாதிரிமாதுளந்தும்பைபலினிதுழாய்கரவீர [ந்து
மாதவிமல்லிகைமௌவன்மருவகம்வேர்மருக்கொழு
பீததருதேவதருபிணரிதழிமகிழ்குந்தம். (உஉ)

இவைமுதலா முயர்தருக்க ளிருங்கொடிகள் புதல்பிறவு, நவையறவைத் துண்டாக்கி நந்தனமாம் வனமமைப்ப, வவையெல்லாங் கண்டோர்க ளதிசயிக்க நனிவளர்ந்து, கவைசேருந் தழைபொதுளிக் கான்மலர்மிக் கோங்கினவே. (உங)

கொம்பரவை நின்றசையக் குலவுமலர் தேன்சொரிய, வம்புதெரி வண்டிமிர வயங்கியுறுந் தருநிரைக, டம்பயில்கை யேந்திவிழி சார்தரநீர் போற்றல்செயு,

மும்பர்பிரான் றிருத்தொண்ட ருயர்கூட்ட மொப்ப
னவாம். (உச)

செந்திருமார்பனையேய்ப்பத்திகழ்ந்துமலர்ந்தனகாயா
வந்தணனைநேராகவலர்ந்தனபொற்கொன்றைமர
மிந்திரனையொப்பமலரியைந்தபெருங்காஞ்சிநகஞ்
சந்திரனைமானவலர்ந்தனவோங்குமரவங்கள். (உரு)

அருணனையே கடுப்பவொளிர் மலர்பூத்த பலாசங்
கள், வருணனையொத் தவிழ்ந்தனவெண் மந்தார மம்
மலர்ச்சி, பொருணயங்கொ ளத்தேவர் போதெதிர்
பார்த் தெண்ணிலவர், கருணைநுதல் விழிப்பெருமா
ன் கழல்போற்ற வுறல்போலும். (உசு)

சுருதியிடை விளங்குதிரி சுபன்னமிசைத் திடுகின்
ற, வரமிகுசத் திகண்மூன்றின் வடிவிதழ்கள் பொது
ள்வில்வ, *மரியமறை நல்லவெனு மடைதன்னு லரு

* அரிய மறை நல்ல எனும் அடைதன்னுல் அருளியது ஓர் பொருளினைத்தன் அடைதன்னுல் புலப்பட நேர்காட்டிடும்.—அருமையாகிய வேதமானது நல்லவென்னும் விசேடணத்தினுலே அருள்செய்த அருத்தத்தைத் தன்னிலையினுலே தெரியும்படி நேராகக்காண்பிக்கும். ஈண்டு அரிய மறை யென்றது திரிசுபன்னத்தை. திரிசுபன்னம் யசுர்வேதத்திலே தைத்திரீயோபநிடதத்திலுள்ளது. திரிசுபன்னத்தைக் கூறுகின்றமையால் அவ்வேத பாகம் திரிசுபன்னமென்னும் பெயர்த்தாயிற்று. திரிசுபன்னம் மூன்று நல்ல விதழ்களையுடைமையால் வில்வத்திற்காகிய வெரி ருபெயர். நல்லவெனுமடை நல்லவென்னும் பொருள்படநின்ற சுவ்வென்னுமடை. அடையிரண்டில் முன்னையது விசேடணம். பின்னையது இலை. திரிசுபன்னம் நல்லவென்னும் விசே

ளியதோர், பொருளினைத்தன் னடைதன்னாற் புலப்
படநேர் காட்டிடுமோல். (உஎ)

குற்றமுருக்கவையினொடுகுலவுநெடும்பாதபங்கள்
பற்றியேபடர்ந்துமலர்பல்குற்றபைங்கொடிக
ணெற்றிவிழியுடையபிரானீள்கழல்கள்பற்றியலாற்
சிற்றுயிர்கள்பேரின்பஞ்சேராமைதேற்றுவன.(உஅ)

மருவியலுங்கொழுந்துதுழாய்வனப்புடையசெவ்வந்தி
யுருவமதுவாடுறினுமுயர்வாசமுதவுதிறம்
பெருகிளையான்குடிமாறர்பெற்றிருந்தசெல்வமெலா
மருகியுமேயடியார்கட்கமுதளித்தவாறனைய. (உகூ)

காமருவுநீர்நிறைந்தகயங்களெலாங்கலந்திலகுந்
தாமரைகள்செங்குமுதந்தண்கழுநீரரும்புவன
சேமருவுசிவபெருமான்றிருவாரூர்க்கோயிலுற
நாமமிகுநமிநந்திநாட்டியநீர்விளக்கெனலாம். (௩௦)

எய்தியவண் விரூபாக்க விறையுறைதல் கேட்டு
மதன், வெய்துறலுற் றேடவுளம் வீவசந்த சாமந்த,
னுய்தலையே கடைப்பிடித்தவ் வுய்யானப் பணியரற்
காச், செய்துவர மலர்ந்ததெனத் திகழ்ந்திடுமம்
மலர்ப்பொம்மல். (௩க)

செந்தளிரார் தேமாவிற் சேர்ந்தகுயில் கூவுவது,
நந்தமையின் றெடுத்தவுமை நந்தனத்தின் பணியு

---

டணத்தாற்கூறிய பொருட்டன்மையாகிய கோமளப்பொலிவை
வில்வந் தன்னிடத்திலுள்ள தளிரினாலே காட்டுமென்க. இத
னால் வில்வம் வேதப்பிரதி பாதிதமென்பது பெறப்பட்டது.

வந்தே, யந்தணனுஞ் சுபத்திரனுக் கருடரவந் தரு ளென்று, வெந்தைபிரான் றனைக்கூவு மிருஞ்சிறப் பை யேய்த்திடுமால். (௩௨)

இத்தகைய நந்தனத்தை யினிதோம்பிச் சுபத்திர ப்பே, ருத்தமனுண் மலராய்வுற் றோவாது கொய்தெ டுத்துக், கொத்துமலர்க் கண்ணிதொடை கோவை முதற் றூர்சமைத்து, மித்தையற மேனோக்கும் விழி ப்பரற்கு நனிசாத்தி. (௩௩)

நறுமலரால் வில்லுவத்தா னன்குபெறப் பூசைபு ரிந், தறுசுவைய வமுதுபல வருங்கனிக ணிவேதித் தே, யிறைமகிழு மைந்தெழுத்தா மீறின்மனு வுவந் தெண்ணிச், செறிவகைய தாளமொடு திருமுன்னர் நடஞ்செய்வான். (௩௪)

சிவனடியார்க் கெந்நாளுந் திருவமுது செய்விப் பான், சிவாகம மன்பினொடுஞ் செபித்திடுவா னின்பு தருஞ், சிவபெருமான் றிருக்கருணைத் திறங்கேட்கக் காதலித்துச், சிவகதைவல் லோர்புகலச் செவிக்கொ ண்டு மகிழ்வுறுவான். (௩௫)

இவ்வண்ண நன்னிலையி னிருந்திடுமம் மறையோ ற்கு, மைவண்ண மேவுகுழன் மங்கையையோர் பங் குடைய, செவ்வண்ணத் திருமேனிச் சிவபெருமா ன் றிருவருளா, லுய்வண்ண நெறிமைந்த ரொன்பதி ன்ம ருதித்தார்கள். (௩௬)

உதித்திடுநற் புத்திரர்க ளுரியபொழு துபநயனம், விதித்தபடி செயப்பெற்று வித்தையெலா மொருங்குணர்ந்து, கதித்திடுவெல் லமைபூணக் கண்டபெருமறையாள, னிதித்திறங்க ளொன்பதுமே நேர்ந்ததெனக் களிகூர்ந்தான். (கூஎ)

குணநிதிக்கும் பொருணிதிக்குங் கோதகலும் வைப்பாய, தணிவில்புகழ்ச் சுபத்திரன்பின் றன்புதல்வரனேவோர்க்கு, நணுகுபெரு மங்கலஞ்சேர் நல்லமயந் தனில்வாய்ந்த, மணவினையைப் புரிவித்து மகிழ்சிறந்து வாழ்ந்திருந்தான். (கூஅ)

வேறு.

இத்திறஞ்சின்னாட்செல்லவெத்திறக்கலேயும்வல்ல
புத்திரரியாரும்வீடுபொருந்திடும்வேட்கையெய்தி
யத்தனையணுகிவந்தித்தங்கைகள்கூப்பிநின்று
தத்தமகருத்தையிங்ஙன்சாற்றுவாராயினர்கள். (கூகூ)

கருமமே மேன்மைத் தென்று கழறின னொருவன் பத்தி, மருவிய மேன்மைத் தென்று வகுத்தன னொருவன் யோகம், பொருவறு மேன்மைத் தென்று புகன்றன னொருவன் ஞானம், பெருகிய மேன்மைத் தென்று பேசின னொருவன் மாதோ. (சo)

இன்னண மியாரும் பேணு மியல்பதா யிருஞ்சிறப்பு, மன்னிய வீட்டி னுக்கு வயங்குகா ரணமா வொவ்வொன், றுன்னியொவ் வொருவர் தாமு முரைத்தனர் கேட்ட மெய்யன், றன்னுள மகிழ்ந்து பின்னர்த் தனயரை நோக்கிச் சாற்றும். (சக)

தனையர்காளுங்களுள்ளந்தனிப்பரமுத்திதேறும்
வினையினிலியற்கைத்தாகமேவலிற்புலன்வாய்ப்பட்டு
மனைவயல்சோலையாதிவாஞ்சையினழுந்திற்றில்லை
யினையதோர்பண்பானீவிரிருஞ்செல்வனாயமில்லை.()

உலகியல் போகந் துற்று மொடுங்கிய திலையென் னு ள்ளங், குலமெலா முய்ய நீவிர் கூறிய வகைமை தன் னை, நலமுறத் தெளிந்து தேற்ற நான்வலி யுடைய ன ல்லேன், வலமுடை யுபாய மொன்று வகுப்பனன் ன தற்குக் கேண்மின். (சங)

பொருளெலாங் கையிற் கொண்டு புடவியி லெங் கும் போதுந், தெருளுற நமக்குச் சங்கை தீர்ந்திட யா வ ரேனு, மருளுறி னவரோ யார்க்கு மதிபர்சத் துவத் தின் சால்பான், மருளறப் பூசித் தேத்தி வணங்கவும் படுவர் திண்ணம். (சச)

என்றுதேர்ந் துறுதி கூறி யிருபிறப் பாளர் கோமா ன், றன்றனித் துணைவி மைந்தர் தனமொடுந் தன் னூர் நீங்கிச், சென்றுபை திரங்க டோறுந் திரிந்திட ரடைந்து சையக், குன்றினின் றெழுகா நின்ற குளை புனற் பொன்னி சார்ந்தான். (சரு)

பாவனநீரதாகிப்பண்ணவரொவரும்பல்குங்
காவிரிநதியையன்பாற்கலந்துகண்டதன்றீரத்து
மேவுயரிலிங்கம்யாவும்விரும்பியேயிறைஞ்சிப்பூசித்
தோவுறுதங்கங்கெல்லாமுழுவலோடுறைந்துபின்னர்.

உம்பொரலொன் றடைந்து வான்பே றுற்றவா ரணி ய மெய்தி,நம்புறு மகில வண்ட நாயகி யோடு மேவுஞ்,

சுபத்திரன்கதையு முரைத்தபடலம்.

சம்புகேச்சுரப்பிரானைத் தாழ்ந்துபே ரன்பினோடும், வெம்புதங் நிகழ்ச்சி யாவும் வினயமோ டுரைத்து நின் ருன். (சஎ)

அங்குவா ழந்த ணர்க்கு மருந்தவ யோகி கட்குஞ், சங்கையைப் பரிவாற் சொற்ருன் றவிர்த்தில ரொவரு ம் பின்ன, ரிங்குநின் றகன்று தென்பா லியைந்ததோர் பெருங்கா டெய்திப், பொங்கிய புதல்வ ரோடும் புன்க ணுற் றிளைத்துச் சென்று. (சஅ)

திருமகிழ் சசிமுன் பூசை செய்திடுங் கீர னூர்போ ய்ப், பெரியநா யகிப்பேர் பெற்ற பிராட்டியோ டினி து மேவி, யொருவுரு தின்ப நல்கு முத்தம நாதன் றன்னைப், பரவியே நிகழ்ந்த வெல்லாம் பரிந்துவிண் ணப்பஞ் செய்தான். (சகூ)

அங்கதன் கீழ்பாற் ருல வனந்தனை யடைந்து தூய் தாய், நங்குறை யகற்றஞ் ஞான நாசினி நதிதீ ரத்து, மங்கலாம் பிகைசேர் தால வனேச்சுரப் பரமன் பாத, பங்கயம் பணிந்து வேண்டிப் பகர்ந்தன னிகழ்ந்த பான்மை. (ருo)

உரைதரு மதற்குத் தென்பா லுன்னரு மரனு லுண் டாய்ப், பிரமன்மான் முதலாந் தேவர் பேறுற வழிய ட் டுள்ள, திருவரன் குளமென் றேத்துந் திவ்விய தல த்திற் சேர்ந்து, குரைபுன லரதீர்த் தத்திற் கோதறக் குடைந்தே யாடி. (ருக)

உன்னுமத் தீர்த்தப் பாங்க ருத்தம விலிங்கந் தன்னைப், பின்னமி லருட்கு வைப்பாய்ப் பெரியவம் பிகைப்பேர் கொண்ட,வன்னையை யுளத்திற் சார வமைத்துயர் பூசை யாற்றி, முன்னுறு பரிவால் வேண்டி முன்னிகழ் வுணர்த்தி னானல். (ருஉ)

அத்தலந்தனக்குமேல்பாலரிபிரமேந்திராதி
யெத்திறத்தேவராலுமியோகியர்முனிவராலும்
பத்திசேர்மக்களாலும்பசுமுதற்பசுக்களாலுந்
தொத்துறவழிபட்டுள்ள தூயகோகன்னம்புக்கான். ()

சொல்லிய கோகன் னப்பேர்த் தொல்பதி யதனின் ஞான, மில்லதோர் பசுவு மூண்மை யியல்பசு பதியாந் தன்மை,புல்லுமா லினைய பான்மை பொருந்திய தொடர்பா லந்த, நல்லதோர் தலத்தின் மேன்மை நவின்றிட யாவர் வல்லார். (ருச)

துங்கமாரத்தலஞ்சேர்சுபத்திரனென்னுந்தொல்லோ
மங்கணதீர்த்தமென்னும்வாலிதாந்தீர்த்தமாடி [ன்
யங்குயராலயஞ்சென்றமைந்தவற்புதங்களெல்லாம்
பொங்கியபுதல்வரோடும்புரிவொடுகொண்பானான் ()

வேறு.

ஆங்கிலஞ்சி மரத்தடியி னாண்பெண்பாற் பன்மையினு வடைவிற் கொண்ட, பாங்கிறுதி விசர்க்கமமை மயிற்குரலாங் கேகாவென் பதத்தைக் கேட்ட, வோங்குமைகைக் கிளிநேற்றிங் குடல்பிரிந்து சாரூப முற்ற பொட்டு, ளீங்கெவரா டவர்பெண்க ளெவரெனவிம் மயில்கேட்ட தென்றே சொல்லும். (ருசு)

(இ - ள்.) ஆங்கு - கோகன்னமென்னுந் தலத்தில், இலஞ்சி மரத் தடியில் - மகிழமரத்தி னடியிலே, ஆண் பெண்பால் பன்மை வினா - வடமொழி ஆண்பாற் பன்மைவினாவையும் பெண்பாற் பன்மைவினாவையும், அடைவில் கொண்ட - முறையே பொருந்திய, பாங்கு இறுதி விசர்க்கம் அமை - உரிமையோடும் தன்னிறுதியிலே இருசுழி வடிவினதாகிய விசர்க்கமமைந்த, மயிற்குரல் ஆம் - மயிலின தோசையாகிய, கேகா என்பதத்தை - கேகாவெனப்படும் வடசொல்லை, கேட்ட ஓங்கு உமை கைக்கிளி - கேட்டிருந்த உயர்ந்த உமாதேவியாரது திருக்கரத்துக் கிளியானது, நேற்று இங்கு உடல்பிரிந்து சாரூபம் உற்ற பொட்டுள் - நேற்று இவ்விடத்தில் இறந்து சிவசாரூப்பிய சத்தி சாரூப்பியங்களைப்பெற்ற கீடங்களுள்ளே, எவர் ஆடவர் - யார் புருடர், எவர் பெண்கள் என்று - யார் பெண்களென்று, இம்மயில் கேட்டது என்று சொல்லும் - இந்த மயில் வினவியதென்று கூறும்.

ஆண் பெண்பாற் பன்மைவினா வடைவிற்கொண்ட கேகாவென்பதம், பாங்கிறுதி விசர்க்கமமை கேகாவென்பதம், மயிற்குரலாங் கேகாவென்பதமென்று தனித்தனி கூட்டுக. பதமென்றதனால் வடசொல்லென்ப தாயிற்று. ஈங்கு அசைநிலை. கே என்பது ஆண்பாற் பன்மைவினா. காஃ என்பது பெண்பாற் பன்மைவினா. இரண்டு வினாக்களுஞ் சேர்ந்த கேகாஃ என்னுஞ்சொல் மயிற்குரலை யுணர்த்தும் பன்மைச்சொல்லாம். பன்மையாற் கூறியது மயில் பலமுறை யகவிற்றென்பது தோன்ற.

கோகன்னத்திலே மகிழமரத்தடியிலே கேகாஃ என்று மயிலகவுதலை யம்மையார் திருக்கரத்துக் கிளிகேட்டு இங்கே நேற்றிறந்து சிவசத்தி சாரூப்பியங்களை யடைந்த கீடங்களுள் யாராடவர் யார் பெண்களென்று இந்தமயில் வினவிற்றென்று சொல்லுமென்க. இது வடமொழியிற் கூறியவாறு கூறியது.

என்பதுவே முதலாய வின்புதரும் பலமொழிக ளினிது கேட்டு, மன்பொலியு முண்மையறி வானந் த மயமான வடிவங் கொண்டு, கொன்பரிவு தீர்த்த ருளுங் கோகன்னப் பெருமாற்குக் கோதில் பூசை, யன்பினெடும் விதிவழியே யாற்றியடி பணிந்தேத்தி யார்வங் கூர்ந்து. (ருஎ)

என்னுடையாள் பெரும்புகழ்க்கோ ரியையுடை யாள் பல்லண்டத் திடையே மேவி, மன்னுடையாள் பரிதிநிகர் * மஞ்சுடையாண் மந்திரங்கள் வகைக ளெல்லாந், தன்னுடைய வவயவமாச் சார்ந்துடையா ளருட்சுவையே தணப்பி லாது, துன்னுடையாள் சே ந்தநெடு நோக்குடையா ளிந்துமுகத் தொன்மை வா ய்ந்தாள். (ருஅ)

அயனுதி கீடம்வரை யமையுயிர்கட் கன்னையுல க னைத்தி னுக்கும், * வயினுளள் பதினறு வன்னமனு நாமமுளாள் வரிமூ வைந்தா, வியலாரு மனுமெய்யா ளெழுகோடி மனுத்தவிசி னிருந்தாள் செல்வம், பெ யராமை யருளுபவள் பெருந்தேவி பொழிற்றலைவி பெரிய வம்மை. (ருகூ)

என்றுபுக ழிறைவிக்கு மேற்றபடி யங்ஙனமே யி னிய பூசை, நன்றியற்றி வழிபட்டு நற்புதல்வ ரோட ங்கு நண்ணி யுற்ருன், மன்றவது பொழுதங்கண் ம ங்கணனு மாதவர்கோன் வந்து வானேர், துன்றுமரு

* மஞ்சு - ஆபரணம். * வயின் - ஆதாரம்.

ங் கத்தனையு மம்மையையுந் தரிசித்துத் தொழுது
போற்றி. (கூ0)

உள்ளமகி ழமையமதி லுவர்த்துமன மிளைப்புமிக
வுற்றுச் சோருந், தெள்ளுதவச் சுபத்திரனைத் தேவி
யொடுஞ் சிறுவரொடுஞ் சேரக் கண்டு, கள்ளமிலாக்
கருத்துடையாய் கலங்குதற்குக் காரணமென் கழறு
கென்னத், தள்ளலிலன் போடுமவன் றங்நிகழ்ச்சி யி
னையெல்லாஞ் சாற்றினனே. (கூக)

அதுசெவிக்கொண் மங்கணனு மருந்தவத்தோ னி
ருகடிகை யகத்தி னுய்ந்தே, யிதுதுணிபென் றிசைக்
கும்வலி யில்லாது தேற்றுமொழி யியம்பி யீண்டுக்,
கதியுதவுங் கருணையுருக் கலந்தபெரு மாட்டிபிரான்
கருத்துட் கொண்டு, திதியியையா நம்முளத்தைத்
தெளிவித்தே யருள்வனெனச் செப்பி னனல். (கூஉ)

செப்புமொழி கேட்டசுபத் திரன்பெரிய வம்மை
யது திருமுன் சார்ந்தங், கப்பனிகர் மங்கணனோ டம
ர்ந்தன னு லப்பொழுதி னந்த ரத்தே, யொப்பரிய
சைவமொழி யொன்றெழுந்த தித்தலத்திற் குரைக்
குந் தென்பாற், றப்பகலோ சனையொன்றிற் சத்திய
புட் கரிணியெனுந் தடத்தின் பாங்கர். (கூங)

பேசுறுசத் தியகிரியென் பெயர்பெற்ற வுத்தமமா
ம் பெரிய தான, மாசகல விருந்தததற் கறைதென்
மேற் றிசைதன்னி லங்கு ரோச, வேசுத்விர் நீளி
டையி லிளையாற்றங் குடியென்ன விசைக்கு நாமத்,

தேசுடைய பெருமைமிகுந் திருநகர நிகரின்றித் திக
ழு மன்றே. (சுச)

அவ்வயினுஞ் சுயம்புவடி வாகியரு ளளித்திடுமா
றமர்து நாமே, பெய்வளையா ளுலகமெலாம் பேதுற
றீர்த் தாளுபவள் பெரிய வம்மை, யெவ்வமிலா நித்
தியகல் யாணியெனு மேற்றபெய ரெய்தி விண்ணோ,
ருய்வகையை வேண்டிடவே யுருக்கொண்டு கருணை
யொடு முறைகின் றுளே. (சுரு)

வானவர்கள் வழிபட்ட மாண்பொருளாய் மறை
பொருளாய் வயங்கி லிங்கத், தீனமிலாச் சந்நிதியிற்
சிவதீர்த்த மெனுந்தீர்த்த மிருந்த தாங்கே, நானமது
செய்தலினு னமதருளா லியாவர்க்கு நண்ணி யுள்ளத்,
தானபெருஞ் சங்கையெலா மகன்றிடுமா லருந்தவ
னே யைய மில்லை. (சுசு)

இருவிசும்பி னிங்ஙனமே யெழுந்தமொழி யிருசெ
வியி லேக லோடும், பெருகியதோ ளையமுறும் பெ
ருமறையோன் பேதுறவின் பெற்றி நீங்கி, மருவு
மொரு மகிழ்வென்னும் வாரிதியி னழுந்தியுள மாட்
சி யெய்தி, யருமைதரு தனயரொடு மடைந்தனனு
லிளைசையென வான்ற தானம். (சுஎ)

இளைசையெனுந் திருப்பதியை யெய்தியிடுஞ் சுப
த்திரனு ரினிய மைந்தர், தெளிவுதருஞ் சிவதீர்த்தங்
திளைத்தாடித் தீர்த்தத்தின் செம்மை யாலே, யுள
மிகுந்த சங்கையெலா மொருவிநவ சித்தனொ வுறை

ந்தா ரற்று, லளிதருமத் தீர்த்தநிகர் தீர்த்தமிலை யிலை யுண்மை யந்த ணீரே. (சூஅ)

தலவிசேடமுந் தீர்த்தவிசேடத்திற்
சுபத்திரன்கதையு முரைத்தபடல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ருசூரு.

---

## சுபத்திரன் சித்திபெறு படலம்.

---

என்றுசொலு மலயமுனி யின்மொழியை யிருந் தவத்தோ ரினிது கேட்டு, நன்றுரைத்தாய் தீர்த்தவி யன் ஞானமுளோ யத்தீர்த்த நலத்தா லாங்கே, தன் றனயர் தம்மோடுந் தவமிக்கோ னெங்ஙனந்தன் சங் கை தீர்ந்தான், குன்றடக்குங் குறுமுனிவ குயிலுகெ னக் குடத்துதித்தோன் கூறலுற்றான். (க)

சிவபெருமான் றிருவாக்கைச் செவிக்கொண்ட திருமறையோன் சிறுவ ரோடும், பவமகற்றும் பக வானைப் பகவதியைப் பரிவினொடும் பணிந்து போற் றித், தவமுயலு மங்கணனுந் தாபதன்பால் விடை கொண்டத் தலத்தை நீங்கி, யுவமையிலாச் சிவவாக் கை யுவப்புமிகப் பலகாலு முன்னி முன்னி. (உ)

இத்துணைத்தோ விளைசையெனு மிருந்தலத்தி னேற்றமதென் றிறும்பூ தெய்தி, மெத்தியதோர் வே கமொடு மேன்மைதிகழ் மெய்யமெனும் வெற்பு மே

விச், சத்தியபுட் கரிணியெனச் சாற்றுபெருந் தடத்தின்பாற் சார்ந்து மூழ்கிப், பத்தியொடு சத்தியநற் பருப்பதத்துப் பரனையருட் பனையை யண்மி. (௩)

தரிசித்துத் தாழ்ந்தெழுந்து தானவரைச் சங்கரித்த சார்ங்க பாணிப், பிரசித்திப் பெருமானைப் பேணி நவில் பிறங்கற்குப் பிறழ்தென் மேல்பாற், பரிசித்து வானையுயர் பழுவத்தே படர்ந்தெய்த்துப் பரிந்தப் பாலும், வருசித்தி மைந்தரொடு சிறுதூரம் வழிக்கொண்டு வருந்தி யுற்றான். (௪)

திசைகாணுக் கானகத்திற் சென்றிளைத்த திருமறையோன் றெண்ணீர் தன்னை, மிசைதாகந் தலைப்படலும் வெய்துயிர்த்து நீர்தேடி வெதும்பிச் சோர்ந்து, தசைசார்மெய் பலவெடுத்துச் சலித்தவனற் குருவருளைச் சார்வுற் றுங்குக், குசைநேருங் கூர்மதியீர் குரைபுனல்சேர் சிவதீர்த்தங் குலவக்கண்டான். (௫)

திடந்தனைநல் லுயிர்க்கருளுஞ் சிவதீர்த்த மெனவழங்குந் தீர்த்த நோக்கி, யடைந்துமிகு மகிழ்ச்சிநல மான்றபெரும் புதல்வரொடு மதன்றே யத்திற், குடைந்தெழுந்து நாடோறுங் குயிற்றியிடுங் கருமமெலாங் குன்று தாற்றிக், கடந்தசுவை நீர்பருகிக் கரையேறி யிருந்தனனாற் கலைவல் லீரோ. (௬)

அப்பொழுது சிவபெருமா னருள்புரியத் திருவுளத்தி லார்வங் கூர்ந்து, துப்புநிகர் சடைமுடியோங் குறயோக பட்டமிகத் துலங்க வேங்கை, யொப்பிலு

ரி யுடைமருவ வுயர்பூதி மெய்யொளிர வுருத்தி ராக் கந், தப்பில்வகை சிவணமதித் தண்முகத்துப் புன்மு றுவல் சார்ந்து பொங்க. (எ)

கோடிபெரு மன்மதர்கள் கோலமெலாந் திரண் டொன்ருக் குலவி யென்னப், பாடியலு நல்லழகு ப ரவவுயர் பொற்பிரம்பு பாணி மல்க, வீடுதருஞ் சித் தவுரு வெடுத்தருளி யெழில்கூரு மியலா ளோடு, நாடுசிவ தீர்த்ததட நண்ணியரு ளினன்புனித ஞான மூர்த்தி. (அ)

மறையாலும் வாக்காலு மனத்தாலு மிற்றெனவே மதிக்கொ ணுது, நிறைவாகி யெவ்வயினு நின்றபரம் பொருளாய நிமல மூர்த்தி, யறிதருதற் கெளிதாகி ய ம்பிகையி னேடுமெழுந் தருளி வந்தும், பெறலரிய திருவடியைப் பெருமறையோன் பேதுறலாற் பேணு துற்ருன். (௯)

இன்னவகை பொருட்படுத்தா திருந்திடவு மெம் பெருமா னெவ்வாற் ருனு, மன்னுயிருக் கெளிவந்து வழியடிமை வருவித்து மாட்சி நல்கும், பின்னமிலா வியல்புடைய பெருங்கருணைத் தடங்கடலாம் பெற்றி யாலே, யன்னவனைப் புதல்வர்தமை யளித்தருளத் திருவுளங்கொண் டருளிச் செய்யும். (௰)

யாவர்நீ ரெங்கிருந்திங் கெய்தினிரா லெய்துதற்கோ ரேது வென்னை, யோவறுமுள் ளயிர்ப்புநனி யுடையீ ராக் காண்கின்றீ ருவற்றை யெல்லாந், தாவகல நமக்

கீண்டுச் சாற்றுதிர்நற் றுணிபுரையைத் தருவ மெ ன்னுத், தேவர்குழுத் தொழுதேத்துஞ் சித்தர்பிரான் முறுவலொடுஞ் செப்பி னுனல். (கக)

சித்தவுரு வெய்தியருள் சிவபெருமான் றிருமொ ழியைச் செவியிற் கொண்டு, முத்திநெறி தலைநின் ேருர் மொழிந்தருளு மியல்பிற்ருய் முதன்மைத் தாய, மெய்த்திறனை யரிவையொடு மேயினே னெங் ஙனமோ விளம்பு வானென், றத்தனது திருவாக்கை யாதரியா தருஞ்சுதரோ டமர்ந்தா னன்றே. (கஉ)

இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ண னிவனெனக் காண் பியையாதாக, வப்படியு மந்நிறமு மவ்வண முந் தகக்காட்டி யருளும் பெம்மான், றப்படையா மார்ச்சால சம்பந்த நயம்பற்றித் தயைமீக் கூர்ந்து, மைப்படியுங் கண்ணுமையாள் வாணகைய முகநோக் கி வகுத்தல் செய்வான் (கங)

மங்கலநல் லியல்புடையாய் மற்றெமது வடிவை யிவர் மதியா துற்று, ரிங்கிவர்கள் பரமார்த்தத் தியல் சங்கை மிக்கவரா யீண்டு வந்தார், துங்கமுறு ஞாலத் திற் றூரமிருந் தெய்திப்பூ சுரர்க ளுள்ளச், சங்கை யெலா நாந்தாமே தவிர்த்தருளி முதுக்குறைவு சார் விப் பேமால். (கச)

எவற்றினையு நாமறிது மெவற்றினையு நாம்புரிது மின் ன வாய்மை, யவற்றினையிங் கறிகிலரொன் றறைந்தரு ளச் சுபத்திரன்ருனைவ ரோடு, முவற்றினைக்கேட்

டுயர்பெரியோ யுணர்தியெனி னுயங்குநம துள்ளத் தெண்ணங், தவற்றினையா தருள்கவெனத் தயாமூர்த் தி வாய்மலர்ந்து சாற்ற லுற்றான். (கரு)

வேறு.

மருளூறு மனத்தராகி வைகிய மறையீர் கேண் மின், பொருளூறு வேதமுன்னுப் புகன்றநல் லருள் சேர் நூல்க, ளருளூறு தெளிவா யுள்ள வரும்பெறற் றுணிபு தன்னைத், தெருளூற நுங்க ளுள்ளஞ் செவி யறி வுறுத்தல் செய்வாம். (கசா)

அறம்பொரு ளின்பம் வீடென் றறைந்தநாற் பொ ருள்க ளுள்ளே, திறம்படு முன்னை மூன்றுஞ் சிதை வன வாத லாலே, மறம்படா யாவ ராலு மதித்திடப் பட்ட வீடே, புறம்படர் சிந்தை யில்லீர் பொருவி னித் தியமாய் மன்னும். (கஎ)

அந்தநல் வீட்டிற் கேது வாகிய தரிய ஞான, மிந் தவா றுறு வேறிங் கில்லையென் றிசைத்து நின்ற, சந் தமார் சுருதி வாய்மை தலைக்கொண்ட வன்மை தன் னுன், முந்துறு நூல்க ளெல்லா முழங்கியே யுரைக்கு மன்றே. (கஅ)

அனையதோர்ஞானந்தன்னையடைதரற்குரியவாய
துனியகல்காரணங்கடொல்லையாரணத்தின்பாகங்
கனிவொடுகழறுநின்றகரிசறுங்கருமசால
மினுமுயர்பத்தியோகமென்றிடுமிவைகளாகும்.(ககூ)

உண்மைநல் லறிவா னந்த வுருவமாய் மனம்வாக் குக்கட், கண்மைய தின்றிக் கூறு மருவமாய்க் குண

ங்க ளின்றித், தெண்மை சேர் மகிமைத் தாகிச் செயல்வகை யொன்று மின்றி, யெண்மையில் காட்சிக் கண்ணே யிருந்திடும் பிரமந் தானே. (உ௦)

அருளுறுமாயாசத்தியதனதுசார்பினலே
வருகுணமுடைத்தாயாரும்வழுத்துதற்கேற்றதாகிப்
பொருவிலீசாதிநாமம்புகலும்வாசகமாயோங்கத்
திரிபில்வாச்சியந்தானுகித்திகழ்ந்தருள்செய்துநிற்கும்.

அத்தகு வாச்சி யந்தா னுகியே பரமே சான, மெய்த்திரு நாமங் கொண்ட மெய்யனைப் புகலாக் கோடல், பத்தியென் றுரைக்கற் பாற்றுப் பரசிவா காரத் தோடுஞ், சித்தமொன் றிடவே செய்தல் செயற்கருமியோக மாமே. (உஉ)

சிவபிரா னருளிச் செய்த செழுமறை விதித்த வாகி, நவையறு மிருதி யாலே நன்குறத் தெரிக்கப் பட்ட, வுவமையில் கரும மெல்லா மோர்ந் துணர்ந் தியற்றல் வேண்டு, மவைபெருஞ் சித்த சுத்தி யரும் பய னுக நல்கும். (உ௩)

சித்தசுத்தியினலாங்குச்சேர்வதுவிரத்தியாகு
மத்தகுவிரத்தியாலேயடைவதுசாந்தியத்தாற்
றத்துவஞானம்வந்துதலைப்படுமதுவேமுத்தி
யுய்த்தியல்சுவானுபூதிக்குத்தமகரணமாமே. (உ௪)

விதிமுதலாயினேர்கண்மேலதாமுத்திவேட்டுத்
துதிபெறுமுயற்சிநாளுந்தொடர்வுறப்புரிகின்றுர்கள்

பதியுறுசொரூபந்தேர்தல்பந்தமின்முத்தியாகுங்
கதிதருசொரூபமுற்றுங்களுலவேமறைவுற்றன்றே. ()

மன்னுலகுதிக்குமூலமாயையுட்கரணம்பற்றித்
துன்னுமற்றுலனுதிமலத்தொடுதொடர்ந்ததென்று
பன்னுபகரணந்தன்னைப்பகருமும்மலங்கடம்மைப்
பின்னமின்றுணர்தன்ஞானப்பெற்றியாற்றுனேசாரும்.

அந்தநன்ஞானந்தன்னையடைவிக்குஞ்சித்தசாந்தி
வந்திடுமதுவிராகவன்மையால்விராகந்தன்னை
முந்திடுநான்குபேதமொழிந்துறுசாதனங்க
டந்திடுமவைவேதாந்தத்தருமொழிக்கேள்வியாலாம்.

பற்றவாங்கேள்விமேலாம்பத்தியாலுண்டாம்பத்தி
நற்றவர்சங்கத்தாலேநண்ணிடுமனையசங்க [னுங்
முற்றிடுஞ்சிரத்தையாலேயுரைத்திடுஞ்சிரத்தைதா
கற்றவரொழுகாநின்றகருமத்தால்வாய்க்குமாதோ. ()

கருதியீண் டுரைக்கப் பட்ட கருமங்க ளெல்லாங் கோதில், சுருதிகள் விதித்த லாலே தூய்மைசேர் சிரௌத மென்று, மிருதிகள் விரித்த லாலே விளம்பிடு மார்த்த மென்று, மிருதிற னுடைய வாக விசைத்திடப் படுமோன் மன்னே. (உகூ)

அக்கரு மங்க டேரு மறிவுமா மறையா லாகு, மிக்கதோர் மறையு மேலோ ரொழுக்கமீத் தொடர நிற்குந், தக்கதா மொழுக்கந் தேர்ந்து தழுவிய வந்தணாள, னிக்குவ லயத்தோர் போற்ற விரும்பய னிம்மை யெய்தும். (௩௦)

ஒழுக்கமா ரானைத் தூய்மை யுய்ப்பன வாகா வேத, மொழுக்கமார் விப்பிரற்கே யுற்றிடுஞ் சித்தி யெல்லா, மொழுக்கமா ரிருமை யின்பப் பயனெலா முவற்கே யுண்டா, மொழுக்கமார் கரும நன்காய்ந் துஞற்றுக வாத லாலே. (ஙக)

அறிவுடை யவன்மேற் கூறு சாதன மனைத்துந் தேடி, மறையுணர் பெரியோ ரோடு மகிழ்ந்திருந் தின்ப நல்கு, மிறைதிகழ் ஞான மூக்கி யெய்திமேற் பிறவி சாராத், துறையெனுஞ் சுவானு பூதிச் சொரூப மா முத்தி சேர்க. (ஙஉ)

எனச்செவி யறிவு றுத்தே யேற்றமா மகிழ்வு பூப்ப, வனிச்சமெல் லடியா ளோடு மாடியு நகைத்து முற்றான், மனச்சுசி யடைந்து வீயா மாணலன் விரும்பி னோர்கள், வினைச்செயற் கேற்பத் தோன்றி வீடருள் கருணை மூர்த்தி. (ஙங)

அவ்வழிச் சுபத்தி ரப்பே ரருந்தவன் புதல்வ ரோடு, மெவ்வமில் பன்னி யோடு மெய்தரு மகிழ்ச்சி யென்னும், பவ்வம திடையே யாழ்ந்து படருமற் புதத்தோ டன்னோர், திவ்விய பாதம் போற்றி நின் றிவை செப்பு கின்றான். (ஙச)

கேண்மதி பெரியோ யன்பிற் கிளத்திடும் வாச கங்கள், வாண்மதி வழங்கு மிப்பூ மண்டலந் தன்னில் வாழு, நீண்மதி யுடையார் யாரு நீக்குதல் செல்லா தெங்கண், மாண்மதி மயக்க லுற்ற வலியதோர் சங்கை தீர்த்தாய். (ஙரு)

ஆகலி னமக்கு நீயே யரும்பெருந் தலைவ னாய், சோகமி லுலக மெல்லாந் தொழப்படுந் தொன்மை யோனும், யோகமார் நிலைமை சார லுற்றிடும் பெரி யோ ருக்கு, மோகமின் மற்றை யோர்க்கு முதல் வனு நீயே யன்றோ. (௩௯)

அத்தகுபெருமநீயாரமர்வதெங்கெங்கிருந்தே
யித்தலந்தனக்குவந்தாயியம்பினீமனுடனல்லை
புத்தமுதருந்துகின்றபுலவனுமல்லைமேலாஞ் [றாய்.
சித்தியையுதவுந்தொல்லைச்சிவபிரானெனக்காண்கின்

நினைத்தரிசித்தபோதேநிகரினல்லறிவுதோன்றிற்
றினித்துயரொன்றுதானுமில்லையாலெங்கட்கெந்தாய்
நுனித்ததோர்தகையமாழைநோக்குடைவஞ்சியோடு
முனைத்தநின்னுரியகோலமுயலினுமறியொணாதால்()

ஞானிகளாயினோர்கணணுகிடுஞ்சங்கமெல்லாம்
போனபின்விரத்தியுள்ளம்புகுந்தவராகிநிற்பா
ரானதனலேபெண்ணோடமர்ந்திடுநினதுசித்த [டும்.
மோனமார்புலனைவேட்டதென்றரோவுரைத்தல்வேண்

ஆயினு நினது கோல மகமொழிக் ககப்பா டில்லை, நாயகி பாகங் கொண்ட நாயகன் சிவனே போல, நீயிவட் டோன்று மாற்றா னின்னுரு வியல்பை யெ ல்லா, மேயநல் லருளா லின்னே விளம்பியே யருள்க வென்றான். (௪௦)

எனுமொழி கேட்டி யோக வியலுருக் கொண்ட வெம்மான், பனிமொழி யமலை யோடும் பயினகை

முகத்த ஞகிக், கனிமொழி யொன்று தானுங் கழறி டா திருந்து சென்றே, தனிமொழி யிலிங்கந் தன் னிற் முன்மறைந் தருளினனே. (சுக)

செய்கைசெய் யாமை வேறு செய்கையென் றிவை கள் யாங்க, ளுய்கையைப் பொருளாக் கொண்டே யுஞற்றிடுங் கருணை வள்ளல், கைகழ ரேன்ருச் சா தாக் கியந்தனிற் கரத்த லோடு, நைகையி னின்றுந் தீர்ந்த நற்றவ னதனைக் கண்டான். (சுஉ)

காண்டலு மைந்த ரோடுங் கருதரு மற்பு தங்கொ ண், டாண்டுற விரைந்து சென்றே யவிர்சடை யுரு த்தி ராக்க, மாண்டிருக் குறிகொண் டோங்கு மகி மைசே ரிலிங்கந் தன்னை, யேண்டகு பொற்பு வாய் ந்த விறைவியைத் தரிசித் திட்டான். (சுங)

தரிசனஞ் செய்த மேலோன் சால்புறு மன்பி னோ டுங், கரிசற வணக்கஞ் செய்து கடிமலர் வகைக ளா லே, விரிசடை குலவா நின்ற மேலவன் றனக்கு மின்பப், பரிசருள் செய்யு நோன்மைப் பனைக்குநற் பூசை செய்தான். (சுச)

மனுதிகட்களவுகாண்டன்மற்றரிதாகிநின்ற
வனுதியாமிலிங்கத்திற்கங்கமைதரும்விமானமாதி
தனுதிரும்பொருளானன்னூல்சாற்றுமாறெல்லையாற்
பினுதிமாறின்றிமிக்கபெருமைசேர்பூசைசெய்து[றிப்

பலம்வ்ர வுயிர்கட் கெல்லாம் பரிந்தருள் பகவன் றன்னே, வலம்வரல் புரிந்து பல்கால் வணங்கிநெஞ்

சுருக நீள்கட், புலம்வரத் தூநீர் வாரி பொடிப்பு முற் றுடலம் போர்ப்ப, நலம்வரத் திருமு னின்று நாத்தழு தழுப்ப வேத்தும். (௪௬)

வே று.

தத்துவங்க டோற்றமுறுந் தனியிலிங்க வடிவுடையா, யெத்திறமு நமையாண்ட வியம்பரிய பேரிறைவா, பத்தியொடு பணிவோர்கள் பணிவுகொளும் பரம்பொருளே, சித்தரெலாந் தொழுதேத்துஞ் சித்தேச நமநமவே. (௪௭)

வே று.

பிரமன்முத லானவர்க டேடும் பாதப் பெருமையனே யனைவோரும் பேண லுற்றோய், மருவுலகுக் கிறைவசுரர்க் கதிப மாற்றார் மதின்மூன்று மட்டவனே மன்னு மீசா, வருமைமிகு மங்கலநல் லியல்பு சேர்ந்தோ யச்சுதனுங் கணையுடையா யான்ற மேலோய், கருமைதிகழ் கண்ணினுமை களிக்கும் பாகா கடையேன்மேல் வைத்தியருட் கடைக்க ணேக்கம். (௪௮)

ஆதிமுடி வில்லவனே யமர ரெல்லா மஞ்சலிசெய் திறைஞ்சுமல ரடிகள் கொண்டோ, யோதியமற் கந்தகனே யந்த கன்ற னுரம்பிளந்தோய் கருணையெனு மோதத் தானே, கோதகலுஞ் சித்தவன நாதா நாதா குலவிபுத ராகமங்கள் கூறுஞ் சீரோய், காதளவுங் கண்ணியுமை களிக்கும் பாகா கடையேன்மேல் வைத்தியருட் கடைக்க ணேக்கம். (௪௯)

நமனைவலி யொழித்தவனே நிமலா வெங்கு நண்ணினேய் மதிசூடீ நலத்தை யீவோய், சுமசரத்தோன் றனையெரித்தோய் மூன்று நோக்கத் தொன்மையனே மூவுலகுந் தோன்ற நின்றோ, யமைவுதருங் கயிலைமலை யமர்ந்த வாழ்வே யடைக்கலம்புக் கோர்க்கின்ப மளிக்கு மெந்தாய், கமழுமியற் கூந்தலுமை களிக்கும் பாகா கடையேன்மேல் வைத்தியருட் கடைக்க ணோக்கம். (ரு0)

பங்கமில்பாற் கடனுரைபோற் பயிலு மூரல் பல்குமொரு திருமுகத்தாய் படருங் கங்கை, துங்கமுறு திருச்சடையாய் தொலைவில் லோனே தூண்டாத சுடரனையாய் சூல பாணீ, யிங்கெவர்க்கு மிறையானே யிமையோர்க் கீச விருடிகள்வந் தடிவணங்கு மெம்பி ரானே, கங்குல்புரை கோதையுமை களிக்கும் பாகா கடையேன்மேல் வைத்தியருட் கடைக்க ணோக்கம். (ருக)

படருமதி வெண்மைதிகழ் படிவ முள்ளாய் நல்லோர்கள் புகலடைந்து பணியு மாதீ, யிடரிலறு நூறெரிக்கு மேற்ற மிக்கோ யியல்கவிநற் பூசைபுரி யெழில்சேர் பாதா, தொடருமறைச் சிரமுணர்த்துந் தொல்லோய் வாய்மைச் சொற்பயிலு மாகமமாங் கூண்டி லுற்றோய், கடனிகருங் கருணையுமை களிக்கும் பாகா கடையேன்மேல் வைத்தியருட் கடைக்க ணோக்கம். (ரு௨)

வேறு.

என்றுபோற்றிசெய்தெம்பெருமான்றனைக்
குன்றுபோலுங்குணநலங்கொண்டுளான்
மன்றவன்பின்வணங்குமனத்தனாய்
நின்றுசிற்சிலவேண்டுநிகழ்த்துவான். (ருங)

என்னையாண்டவயாவுமுணர்ந்தவ
முன்னுமூதுலகுக்குமுதல்வயா
நின்னோர்தீர்த்தமகிமையினின்னடைந்
தின்னசித்தியிங்கெய்தினமாகலின். (ருச)

இத்தலக்குமிலிங்கமதற்குமேற்
சுத்ததீர்த்தந்தனக்குஞ்சொலும்பெயர்
சித்தகேத்திரஞ்சித்தபதிநல
முய்த்திடுஞ்சித்ததீர்த்தமென்றோதுக. (ருரு)

இன்றுதொட்டுலகெங்கணுமிப்பெயர்
சென்றுசீர்த்திசிறந்துதிகழுத
லன்றியும்பலவண்மையடைகுக
வென்றிசேரிறைவாவெனவேண்டினன். (ருசு)

வேண்டலோடும்விமலன்றிருமொழி
சேண்டனிற்றிகழ்ந்தோமெனச்செப்பிய
தாண்டுநின்றசுபத்திரற்கம்மொழி
யீண்டுபுத்தமுதென்னச்செவிப்புக. (ருஎ)

மகிழ்ச்சிபொங்குமனத்துமறையவ
னிகழ்ச்சியற்றநம்மெண்ணமெலாமிவ
ணிகழ்ச்சிபெற்றனவென்றுநினைந்துபின்
புகழ்ச்சிமிக்கபுதல்வருக்கோதுவான். (ருஅ)

சித்தபங்கபமீதுசிவன்றனைச்
சத்துஞானசுகக்குறிதன்னைமெய்
யெத்திறத்தையுமென்றுமறிவனை
யுய்த்தநல்லருண்மூர்த்தியையுன்னியே. (ருகூ)

அன்னவன்மயமாகிப்பிரமநா
னென்னுமொப்பரும்பாவனையெய்தியே
துன்னுகின்றசுகத்திடைவைகுவன்
பன்னுநல்லியல்பற்றியமைந்தர்காள். (கூ0)

மறுமைநன்னிலைக்கோர்வழுவந்திடா
தறநெறிக்கணின்றேய்வனவாற்றுமென்
றுறுதிகூறியரன்றனையுள்ளுற
நிறுவியின்பநிலையினின்மேவினுன். (கூக)

மைந்தர்தாமும்வழுத்துநன்னூற்பொரு
டந்தைபாலிற்றகவுறத்தேர்வுறீஇ
யந்தமின்றுணர்வெய்தியனைவரு
நந்தலில்சுகநண்ணினரென்பவே. (கூஉ)

வேறு.

ஒன்பானு முயர்சுதருண் முதல்வ னுன வுத்தால னட சித்த னெனும்பேர் பெற்றுன், பின்பாலான் சாலங்கன் கருமசித்தப் பெயர்பெற்றுன் சுமனக்கன் பத்தி சித்த, னென்பாக்கு நின்றனனுற் ககோள னென்போ னியல்வேத சித்தனெனு மிரும்பேர் வாய்ந்தா, னன்பார்ந்த வியல்புடைய சுசாந்த னென்போ னறைஞான சித்தனெனு மரும்பேர் கொண்டான். (கூங)

மேன்மைதிகழ் சந்திநன் ஞமசித்த வியன்பேரை மேவினனுல் வெகுளி தீர்ந்த, நோன்மைதிகழ் குலே ச்சூரன்ரு னிலயசித்த நுவல்பெயரைத் தரித்திட்டா ஞேற்றன் மிக்க, பான்மைதிகழ் பண்ணவனும் பாச கன்னன் பகர்காம சித்தனென்பேர் பரித்து நின் ருன், போன்மைதிக ழருநாடா யனனென் றுள்ளோ ன்புகழ்தார யோகியெனப் புகலப் பட்டான். (கூ௪)

சாற்றிடுமத் தனிப்புதல்வர் சாலவோர்ந்து தத்த மக்கு வேண்டுபவாஞ் சித்தி கட்கே, யேற்றபடி யட முதலாம் வகைமை பற்றி யியன்றுபெறுஞ் சித்தியினு லிப்பே ரெய்திப், பேற்றையுறு நவநாத ரென்னப் பெற்றுப் பெருங்குருமீ தன்பார்ந்து பெருகுஞ் சித் தி, ஞற்றலுறு முத்திரையோ டமர்ந்து தம்மி லாயநல னகலாமே யடைந்தா ரன்றே. (கூ௫)

இவ்வாறக் கேத்திரத்திற் சித்த சாமி யின்னருளா லிருஞ்சித்தி யெய்தி மேலாந், துவ்வாரு நவசித்தர் சித்த விஞ்சைத் தொன்மைதனின் மிக்கோராய்ச் சித் தர் கைக்கொண், டுய்வாரத் துயர்தீர்க்கு முறைக டம்மா லுடல்வலிபெற் றுயிர்வலித்த னிறுத்தன் மேலு, நைவார வடக்கலருள் செயவல் லோராய் நாடெங் குஞ் செலும்விறலோ ராகி யுற்ருர். (கூகூ)

தேவாதி தேவனெனுஞ் சித்த நாதன் றிருவருளாற் சுபத்திரனுந் தேவி தன்னே, டோவாமை யறிவின்ப வுருவா ஞனை யுள்ளத்தி னுள்ளூற்று மமுதா ஞனைப்,

பாவாத மனத்துறுத்தி மலத்தா ளுய பற்றகற்றி யோ
கிகட்குப் பதியாய் நின்று, மேவாத யோகநல மேவி
யென்றும் வீடாத வீடுற்றான் வீடுற்றானே. (சுஎ)

இன்னணமே சுபத்திரன்றான் புதல்வ ரோடு மிரு
ஞ்சித்தி யெய்துதலா லன்று தொட்டே, யன்னதட
முயர்சித்த தீர்த்த மென்னு மரும்பெயரை யடை
வுற்ற தனைய தீர்த்தந், தன்னையெதிர் காணுறினு நினை
ந்திட் டாலுந் தகவுபெற வெண்ணியவை தம்மை
யெல்லா, முன்னுமுன முதவிடுமா லுறுவீ ரன்ன து
யர்வினையா மெங்ஙனமோ வுரைத்து மம்மா. (சுஅ)

கயிலாய நாதனெனு மிலிங்கத் திற்குங் கருதரிய
சித்தேச னென்னு நாமம், பயில்வாய தவ்விலிங்கப்
பெருமை மிக்க பான்மையதா லினைத்தெனவே பகர
வொண்ணு, தெயிலாரு மப்பதிக்குஞ் சித்த கான மெ
னும்பெயருற் றதுமேலா முத்த மத்தி, னயிலாரு மத்
தலத்தி லாண்டு வாழ்வோர்க் கம்மைவரு மச்சமிலை
யாய வேண்டாம். (சுகூ)

தேளுடைய திங்கடனிற் றிங்கள் வாரந் தேடுசனிப்
பிரதோடஞ் சிவனி ராவா, நா*ளுடைய நாள்வியதி
பாதமேன்மை நண்ணும்விழா நாளென்று நவிலி வற்
றிற், றாளுடைய தாமரைசேர் சித்த தீர்த்தத் தனிநீரி
லளியினொடு மாடி னோர்க, ளாளுடைய நாயகன்றா
னம்மை தன்னோ டருளவகத் தெண்ணியவை யடை
ந்து வாழ்வார். (எ0)

* உடையநாள்—சென்மநக்ஷத்திரம்.

வே று.

இந்தநற்காதையையியம்புவோர்மன
முந்திடவொருவழிக்கேட்கலுற்றவ
ரந்தமில்சித்திகளடைந்துபின்னுற
முந்தியவுணர்வுசார்முத்தராவரே. (எக)

சுபத்திரன் சித்திபெறுபடல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சகூச.

## சூரன் றேவரைத் தேடவிட்டபடலம்.

இன்னவண்ணமவ்வகத்தியமுனிவரனியம்ப
மின்னுசெஞ்சடைமுடியுடைவிழுத்தவர்கேட்டு
மன்னுகின்றதோர்சித்தமாதீர்த்தத்தின்மாட்சி
சொன்னலம்பெறச்சொற்றனைமகிழ்ந்தனந்தூயோய்.

இளைசையாம்பெயரப்பதிக்கியாதுகாரணத்தால்
விளைவதாயதுதூய்மையான்மிக்கவந்நகரம்
வளமுலாம்புவிதன்னிடையாங்ஙனம்வதிந்த
துளமுறப்புகன்றருளெலாமுயர்கடத்துதித்தோய். ()

என்றுமாதவர்வினவியவின்சொலைக்கேட்டுக்
குன்றுபோன்றிடுந்தவமுடைக்குடமுனிநயந்து
துன்றுபல்வகைமேன்மைசேரத்தலத்தொன்மை
நன்றியாவையுமுரைப்பனுலென்னவேநவில்வான். ()

வே று.

தூயார்பெறவேதுயர்செய்தலுறுந்
தீயாரவுணத்தொகையோர்செறியும்

வீயாவுயர்வாழ்வுறமேவியதாள்
மாயாபுரமாம்வளமாநகரோ. (௪)

அம்மாநகருற்றரசாளுறுவோன்
மெய்ம்மாணுறுவச்சிரமெய்யுடையான்
செம்மாலுமயங்குதிறற்செயலா
னெம்மாயையுமிக்கியல்சூரனரோ. (௫)

வேறு.

சூரனெனப்படுதொல்லசுரேசன்
வீரமிகுந்ததன்மெய்ச்சுதனாலே
காரிபதந்தனைக்கட்டழிவித்தே
கோரமிகுந்தகொடுந்துயர்செய்தான். (௬)

செய்தலுமிந்திரனேமுதற்றேவர்
வெய்துறலோடவண்வெய்தெனநீங்கிப்
பைதிகழ்பாந்தள்பரித்திடுபாரி
னெய்தினர்யாருமிருந்துயர்மூழ்கி. (௭)

வெந்துயர்மாழ்கிவிறல்கெடும்விண்ணோர்
தந்தமுருக்கொடுசார்ந்திடலுற்று
லெந்தவிடத்தினுமாமிடமொன்றே
சிந்தையினெண்ணினரிவ்வகைசெய்வார். (௮)

சரகமெறும்பலவன்மயிறத்தை
யெருவைகுரங்குவியாக்கிரமேனங்
கரிமுதலாயகணிப்பிலவற்றி
னுருவவையெய்தியுறுந்துயர்கொண்டு. (௯)

சையமெனப்படுசையமளித்த
துய்யநதிக்கரைதோறுமியைந்து
வெய்யதொர்நோய்தொலைவித்திடுகின்ற
செய்யசிவத்தலஞ்சேர்ந்திருந்தரால். (௧௦)

அண்மையினேருமறிந்திடலொண்ணு
துண்மையுருக்கொளும்விண்ணவர்நொய்தா
மெண்மையொடவ்வழியோரிடையெய்தி
யுண்மைகளின்னவுரைத்திடுகின்றார். (௧௧)

முக்கணியைந்திடுமூர்த்தியைநீக்கித்
தக்கனியற்றியசத்திரந்தன்னிற்
புக்கவனேடுபொருந்திடலாலே
தொக்கபெரும்பவம்வந்ததுதுன்னி. (௧௨)

அப்பவமீந்தபயன்களனைத்து
மெப்படியுந்நுகர்வெய்திடல்வேண்டுஞ்
செப்பிடுமெத்தவஞ்செய்கையினனும்
துப்பினைநீக்கித்தொலைத்திடலாகா. (௧௩)

மெய்வகையோர்ந்துவிளம்புமிடத்தி
லுய்வகைதன்னையுணர்த்திடுநன்னூ
லெவ்வகையாகியியல்பவங்கட்குஞ்
செய்வகைதீர்வுகள்செப்பினவன்றே. (௧௪)

சிவனரிவிப்பிரரொன்றுதெரிக்கு
மிவர்தமக்காற்றுமிகழ்ச்சிதனக்குத்
தவறிலநூற்றொகைதீர்வதுதன்னை
நவிறலொழிந்தனநாமுறலாலே. (௧௫)

ஆடலினாலலதஞ்ஞதையாலே
வீடருமெய்யுணர்விப்பிரருக்கு
நீடவமானநிகழ்த்தினுமற்றுற்
கேடனேவோர்க்குங்கிடைத்திடலுண்மை. (௧௬)

இப்படியாயினெவ்வெவ்வுலகுக்கு
மொப்பினிதானமெனப்படுவோனு
மெய்ப்பருநற்குருவாயியலின்ப
முய்ப்பவனாகியுளோன்சிவனன்றே. (௧௭)

அச்சிவனுக்கவமானமதிந்த
முச்சகவைப்பிலியற்றியமூடர்
நிச்சயமாவிடர்மூடுறநிற்றன்
மெச்சிவிளம்பவும்வேண்டிடுங்கொல்லோ. (௧௮)

ஆதலினாமவற்காற்றியதீமை
யோதுபல்கோடியுயர்பெருங்கற்ப
பேதமுலப்பிலபேரினும்பேரா
தேதமிலின்பமதெய்தவுங்கில்லேம். (௧௯)

தேவர்கடேவன்றிகழ்பரமான்மா
வாவிகணன்றியடைந்திடவீவோன்
பாவருள்வந்துபதிந்திடுமாயின்
மேவுதுமின்புவிளம்பியதுண்மை. (௨0)

அப்பரமற்குயரன்பியலோடு
மொப்பகல்பூசனையெங்கணுமாற்றி
யெப்படியின்பருணல்லருளெய்தித்
துப்புறுமின்னதுயர்தனிற்றீர்தும். (௨௧)

என்றுவிலங்குமுதல்வடிவெய்தி
நின்றிடுதானவர்நோலசொல்லா
மொன்றுபுதம்முனுரைத்தனராகித்
துன்றியதஞ்சமிலாதுதுயர்ந்து. (உஉ)

இன்பமுயிர்க்கருளீசனிருந்த
துன்பமகற்றிடுதொல்பதிமேவி
யன்பொடுமெய்வழிபாடுகளாற்றி
மன்புனைநல்லருள்வேண்டிவதிந்தார். (உ௩)

வேறு.

செப்புமாறுசிலபக
லப்புத்தேளிரமர்தரத்
துப்புமிக்கசூரனென்
றுப்பில்பேரையுற்றுளான். (உச)

செம்மைசேர்ந்ததேவரை
மம்மர்செய்யும்வண்ணமா
வெம்மைமிக்கவேயினோர்
தம்மையாய்ந்துசாற்றுவான். (உரு)

இந்திராதியிமையவர்
சிந்துசூழ்ந்ததிண்புவி
வந்தொளித்துவைகினு
ரந்தவாற்றையறிதிரால். (உசா)

அறிதலுற்றிங்கடைமினென்
றுறுதியோடுமோதிட
விறலியைந்தவேயினோர்
பெறுநராணைபேர்குவார். (உஎ)

ஒத்தபான்மையோர்ந்திடாத்
தத்தமிற்பல்*சமிஞைசொற்
றெத்தலத்துமேகுருச்
சித்தமூக்கித்தேடுவார். (உஅ)

பாரிலுற்றபல்லிட
நேரலுற்றுநேடியே
யாருந்தோன்றலின்மையா
லோரிடத்தொருங்கினர். (உகூ)

ஒருங்குகூடுமொற்றுவர்
நெருங்குமாயநீணகர்
மருங்குசென்றுவாய்ந்தகூ
ரரங்குதன்னையண்மினர். (௩0)

வேறு.

அப்பொழு தணிகொண் டோங்கு மவைக்களந் தன்னிற் சூழ்ச்சி, வைப்பெனும் புகரு மற்றை மந் திரத் தோரும் வைக, வொப்பிரு ரகனே சிங்க முக த்தனென் றுரைக்க நின்ற, வெய்ப்பிலாத் தம்பிமார்க ளிருவரு மிருபான் மன்ன. (௩க)

பானுகோபனையேமுன்னுப்பகர்ந்திடுபுதல்வரொல்லா
தீனமதில்லாவாற்றூற்சேர்ந்தினிதிருப்பவாகைத் [ந்
தானையந்தலைவர்யாருஞ்சார்ந்தெதிர்பார்த்துச்சூழ
வேனையவ்வுணவீரரிடந்தொறுமியைந்துநிற்ப.(௩உ)

---

* சமிஞை—குறி.

மேருவை நிகர்த்துச் செம்பொன் மிளிர்தரு தவி
சின் மீதே, யேருறு மண்ட கோடி யிருக்குமிந் திரர்
க ளெல்லா, மோருரு வெய்தித் தேவ ரொருங்குற
வுறைந்தா லொப்பச், சூரனு மவுணர் கோமான் றல
ங்கிவீற் றிருந்தா னன்றே. (௬௩)

இன்னணஞ் சூர பன்ம னிருப்பவாங் கடைந்த சா
ரர், முன்னுறத் தலையாற் றாழ்ந்து முதன்மையின் வா
ழ்க வென்றே, சொன்னலம் பெறவே வாழ்த்தித்
தொடர்ந்திடும் விநயத் தோடு, மன்னவன் முகத்தை
நோக்கி யடைவினி லிசைக்க லுற்றார். (௬௪)

நங்குலவரசகேண்மோநாமிவண்விடைபெற்றேகி
யெங்கணுந்தணந்துசென்றேயிந்திரன்முதலாவுள்ள
புங்கவரானோர்யாண்டுப்பொருந்தினரென்றுவுள்ளந்
தங்கியவூக்கத்தோடுந்தளர்வறத்தேடலுற்றேம். ()

பல்வகையாயபொற்றைப்பரப்பெலாந்தேடினேமாற்
பல்வகைமரங்கள்வல்லிபல்கியுஞ்சனமின்றியும்
பல்வகைப்புதல்களார்ந்தும்பன்னகநிறைந்துநின்ற
பல்வகைவனங்கள்யாவும்படர்வுறத்தேடினேமே. ()

தேடினேமக்கட்கூட்டஞ்செறிந்திடூர்களெல்லாந்
தேடினேமவைகள்சூழ்ந்ததிகழ்ந்திடுநகரம்யாவுந்
தேடினேந்தவத்தின்மேலோர்சேருமாச்சிரமமுற்றுந்
தேடினேமுயர்வின்மிக்கசிவத்தலமனைத்துமன்றே.

மன்னவர்மன்னனுகிவயங்குநம்மிறைவயாங்க
ளின்னணந்தேடலுற்றுமிமையவர்க்கண்டிலேமா

லன்னதனுலேயன்னோரும்பசிதாகமிக்கு
மெய்ந்நலமகன்றுமாழ்கிவீடினர்போலுமென்றார். ()

என்றசொல் வினவி யங்க ணிரவியம் பகைஞன் சொல்வா, னன்றிது மொழிந்தா ரொற்றர் நாகர்கோ னாதி யோர்கள், பொன்றினர் தாமே யாவர் பொன்னக ரொன்னும் வைப்பை, யன்றடைந் தனமா லெந் தா யஃதினி நமக்கே திண்ணம். (ருகூ)

வசையகல்கின்றநீதிவல்லசாரணர்கடம்மாற்
சசிமுகக்கவின்கொண்டுள்ளசசிதனைக்கொணருவித்து
மிசைபெறுசூட்டிக்கோழிவிருத்தியதியல்பினாலே
நசையுறுபோகமெல்லாநாடியேதுய்த்தியென்றான்.()

சாரரும்புதல்வன்றானுஞ்சாற்றியமொழிகள்கேட்டுத்
தேருறுநீதிநன்னூற்றெளிவுடைப்புந்திவாய்ந்த
சூரர்கோனெடிதுசூழ்ந்துசுக்கிராசிரியன்றன்னைப்
பாருணரவையினோரைப்பார்த்திவைபகர்தலுற்றான்.

இந்திரனாதியாயவிமையவரெல்லாங்கூர்ந்த [தோர்
புந்தியர்நீதிவல்லோர்பொழுதியல்வகைமைதேர்ந்
நிந்தையில்குரவனாணைநெறியினினிற்குஞ்சீலர்
சிந்தையாலின்னதொன்றுதேறருமுண்மையுள்ளோர்.

நல்லவாங் கலைக ளெல்லா நாடிய பொருண்மை தன்னில், வல்லவ ரொண்ணில் கேள்வி வந்தவர் விபுத ரென்று, „சொல்லுறும் பெயர்கொண் டுள்ளோர் சூரராந் திறத்த ரன்னோர், செல்லரும் புலத்தில் யாண் டோ சேர்ந்தொளித் திருக்கின் றார்கள். (சரு)

செய்திடுமுபாயச்செய்கைதேற்றமதுருமோளும்
வெய்துறநமையடக்கும்வினைமுயன்றிடுவராய
மெய்திடலொழிகவின்னவேதுவாற்றேவரானோ
ருய்திறனேடுமெங்கணுறுகின்றுராய்மினென்றான்.()
தூங்குதலின்மைகல்விதுணிவினையுடைமைமூன்று
நீங்கலில்சூரபன்மனிகழ்த்தியமாற்றங்கேட்டுப்
பாங்குறுதகவுதேர்ந்தபரிசுமிக்குடையோனுகி
யாங்குறுமாசானிவ்வாறகத்தினின்மதிக்கலுற்றான்.()

விண்ணவர் நிலையி னுண்மை விளம்புத லாகா தே னு, மெண்ணுறு மவையி னுப்ப ணிறைவனு லேவப் பட்டோ, னுண்ணிகழ் புந்திக் கேற்ப வுரைத்திடல் வேண்டு மீது, மண்ணினிற் பண்டை தொட்டு வந்த தோர் தரும மாகும். (சகூ)

என்றுள மதித்துப் பின்ன ரிறைவனை நோக்கிச் சொல்வான், வன்றிற லரச வானோர் மற்றையர் போல வீயார், நன்றுறத் தெரிதற் கொண்ணுர் நாடுறுந் தேர்ச்சி மிக்கார், குன்றலி லுணர்ச்சி வாய்ந்தோர் கொற்றமார் திறத்தோ ரின்னும். (சஎ)

தேசவை நிறைந்தோர் கண்ணுற் சேரலர்த் தகிக் கத் தக்கோர், பேசுமன் னவர்கள் பூமேற் பெருமை சேர் தலங்க டம்மின், மாசறு பறவை மாக்கள் வடி வொடு மறைத லுற்றுக், கூசியே திரிவ ரென்று கொ ண்டதென் னுள்ள மென்றான். (சஅ)

புகரெனுங் குரவ னேன் புகன்றவா சகத்தைக் கேட்டு, நிகரறு சூர னென்ன நிகழ்த்திடு மன்னர்

மன்ன, னுகவையோ டறுபத் தாறு கோடியென் றுரைக்கு மெண்ணின், றகைபெறுங் கொற்ற வாய்மைத் தகுவர்தங் குழாத்தி னேடும். (சகூ)

வக்கிரதமிட்டிரன்னேமாதமிட்டிரன்கும்பாண்டன்
றக்கவித்தானைவீரர்தங்களைநோக்கிச்சொல்வான்
மிக்கதோர்புந்தியாற்றல்வெற்றிசேர்தகுவீர்கேண்மின்
ஞெருக்கநற்றுனையோடுந்தொல்புவியின்னேயேகி. ()

உத்தமதலங்கடம்மையுறுவர்கணிலைகடம்மை
யெத்தகையோருமஞ்சவிமைப்பினிலழிவுசெய்து
கொத்தழல்கொள்ளுமாறுகொளுவியேபறவைமாக்க
டத்தமதுருவங்கொண்டோர்தம்மைநீர்பற்றுமின்கள்.

அல்லதுகொன்மினல்லாலரியதோர்சூழ்ச்சிதன்னுன்
மெல்லவேசுடுமின்கூறும்வினையெதுவேனுமாற்றிச்
சொல்லினுற்சுகமேபோலுஞ்சுந்தரியிந்திராணி
நல்லியற்பெயராள்யாண்டுநண்ணிடுகின்றுளென்று.

உள்ளமா ருக்கத் தோடு முண்மையை யோர்ந்து கொண்டு, தள்ளரு வேக நின்று தள்ளிட வம்மி னென்றே, யள்ளலங் கடலே போலு மவுணர்தங் குழாத்தை யேவி, வள்ளுறை கொண்ட வாட்கை மன்னன் வீற் றிருந்தான் மாதோ. (ருங)

வே று.

அன்னகாலைதனிலன்னவொல்லா
மன்னர்முன்னனதுவார்கழறன்னைச்
சென்னிமேற்கொடுசெலல்விடைபெற்றே
யின்னபோரமைவிசைந்திடுகின்றார். (ருச)

ஏற்றுரிப்பறைகளெற்றிடவோர்ந்தே
யூற்றமிக்கவுழவோர்பலதேர்கள்
சீற்றவாசிகரிமற்றவுஞ்சேர
வாற்றலோடுகொடுவந்தனரம்மா. (ருரு)

வந்தகாலைதனில்வாம்பரிபண்ணு
மெந்திரத்திரதமேனுறுபாய்மா
சிந்துரத்தொகுதிசேனைகளின்ன
சுந்தரத்தியறொடார்ந்தணிகொண்ட. (ருசு)

மிக்கவாற்றல்கொளும்வீரர்கடாமு
நெக்கமுன்னணிகள்யாவையுநீக்கித்
தக்கபோரணிகள்சாலவுநன்றாத்
தொக்குறும்படிதொடர்ந்திதுசெய்வார். (ருஎ)

பன்னிறத்தொளிபடைத்தொளிர்கிற்ப
நன்னர்மைந்துடையயாணர்நலத்த
மின்னுசாலிகைகண்மெய்யுறயாத்தார்
துன்னுவாளியுறுதூணிபிணர்த்தார். (ருஅ)

பிறங்குகோதைகளையங்கைபிணித்தார்
திறங்குலாவுவிரற்புட்டில்கள்சேர்த்தார்
மறங்குயிற்றுவனமாணுறநீண்ட
கறங்குநற்றொடைகொள்கார்முகங்கொண்டார். ()

இற்றெலாம்மையவாற்றியவின்னோர்
செற்றமேதகையர்சீயவலத்தார்
வெற்றிமிக்குடையர்வெஞ்சமர்வல்லார்
நெற்றியம்படையினீணடுவந்தார். (சுO)

வரிகளேறினமணிப்பணிக்கோட்டுக்
கரிகளேறினர்கடுங்கதிகொண்ட
பரிகளேறினர்படர்ந்திடுநேமி
யரிகளேறினர்களேறினராண்மை. (சுக)

ஏறலுற்றபொழுதத்தவனெய்தே
வேறலுற்றிடுவியன்படையெல்லாஞ்
சேறலுற்றிடுதல்சிந்தைசெய்தாழி
போறலுற்றிடமுழங்கினபொங்கி. (சுஉ)

தேரொலித்தனதிறன்மிகுபூழ்க்கைக்
காரொலித்தனகடுங்கதிமாக்க
ணேரொலித்தனநிசாசரரானோர்
தாரொலித்தனவொலித்தனதண்ணம். (சுங)

இந்தவாறுயர்படைப்பொலிவெய்த
மைந்துசேரவுணமள்ளர்களெல்லா
மந்தரத்தினையாய்ந்திடவெங்குஞ்
சிந்தைகொண்டுபுவிசென்றிடுகின்றார். (சுச)

செல்லலோடுமவர்திண்ணியகால்கள்
புல்லியேயெழுதலுற்றிடுபூழி
மல்லல்வெம்பரிதிவெல்லொளிமாற்றிச்
சொல்லும்வானவர்கடொல்லுலகுற்ற. (சுரு)

இங்ஙனந்தகுவரோகிடலோடு
மங்ஙனந்திகழுமண்டர்களாசா
னுங்ஙனந்திகழ்வியாவையுமோர்ந்தே
யெங்ஙனஞ்சுரர்களுய்குவரொன்னா. (சுசு)

கருதியோங்குகயகானனமெய்தி
விருகமாதியுருவங்களைமேவித்
திரியும்வானவரைவல்லையிற்சேர்ந்தே
பரிவினன்னவர்பணிந்திடவோதும். (௬எ)

சிவனுறைந்துதிகழ்தெய்வதலங்க
ளவைகளூற்றுமறைநுங்களமர்ச்சி
கவியெனுங்குரவன்காட்சியினேத
வுவகையோடுமுறுசூரனுணர்ந்தான். (௬அ)

அசுரருக்கிறைவனன்னதறிந்தே
பசுவையாதிவடிவங்கள்படைத்த
வசையினுங்கடமைமாய்த்திடல்செய்ய
மிசைகொள்சேனையினைவெய்தெனவுய்த்தான். (௬௬)

உய்த்தகாலைதனிலொண்புவிதானு
மெய்த்திடும்படியிருங்கடலென்ன
மெத்துவன்மையொடுமேவுறுசேனை
யொத்தவாறிவணடைந்துறுகின்ற. (எO)

இன்னதாந்தலமிமைப்பினினீங்கிச்
சென்னிமேனதிசெறித்திடுமெங்கோ
னுன்னுநல்லருளையுற்றிடுகாறு
மன்னுமின்களெவணேனுமதித்து. (எக)

தேவதேவையுமைசேரிறையோனை
யாவிகட்கபயமாக்கிடுவோனை
மேவுமுள்ளமொழிமெய்களினாலே
யோவிலன்பினொடுமுற்றிடுமின்கள். (எஉ)

அவ்வியல்புடையிராகியகாலை
நைவியல்பகலநீக்கிடுநம்பன்
றெவ்வியல்பினுமையெய்தியதீதா
மூவ்வியல்பினையுளங்கொளுமன்றே. (எ௩)

கொண்டதோர்பொழுதுபார்ப்பதிகோமான்
பண்டைநீங்கள்செயும்பாவமதெல்லாம்
விண்டுபோகும்வகைமெய்யருள்செய்தே
தொண்டுகொண்டருளுந்தொல்லையினும்மை. (எச)

ஆதலாற்புகல்கொளவ்விறையோனை
நீதிசேர்நெறியினின்றடைவீரோ
லேதிலின்பநலமெவ்வகையானுந்
தீதிலாதபடிசேர்ந்திடறிண்ணம். (எரு)

நன்மையாயதனைநாளுமளிக்குந்
தன்மையாலுயர்சிவப்பெயர்சாலுந்
தொன்மைசேரிறையையெய்தியதொண்டர்
புன்மையாயதுபொருந்தினர்யாரோ. (எசு)

என்றுசீவனிமையோர்தமதின்னல்
பொன்றிடும்படிபுகன்றுமறைந்தான்
குன்றரிந்தவரியன்னதுகேட்டான்
றுன்றுமாற்றலர்கள்சும்மையுங்கேட்டான். (எஎ)

சூரனுணைகொடுதுன்றுபடைக்குட்
பேரியார்த்தலுறுபேரொலிதன்னை
நேரிலண்டர்பதிநீளிடைகேட்டுத்
தேரலின்றியிதுசெப்பிடுகின்றான். (எஅ)

யாதுசெய்துமெவனேகுதுமந்தோ
வேதமாப்பறவையாக்கையெடுத்தும்
பூதலத்திடைபொருந்திடுமாறு
தீதுறும்வகைமைசேர்ந்ததையன்றே. (எகூ)

சிவத்துரோகமதுசெய்திடலாலே
யவத்துயர்க்குவழியாகியமைந்த
பவத்தினல்வருபயன்னிதுவேயோ
தவத்தினருமிதுதாங்குவர்கொல்லோ. (அ0)

அத்தனேநமையளித்திடல்வேண்டு
மெத்துணைத்தலையினெண்ணலரெய்தா
ரொத்தவத்தலையினேடுவெம்யாங்கள்
சித்தமுற்றதொருதேற்றமிதேயாம். (அக)

என்னவேந்தனிமையோர்க்கிவைகூறி
யன்னதேவரொடுமக்கணமோடி
யுன்னருந்தகையகீரனதூர்போய்த்
தன்னருந்தலைவிதன்னையடைந்தான். (அஉ)

இசைகொளம்மையொடுமெப்பனையெண்ணி
வசையுறாதுவழிபட்டுவதிந்த
சசியையுங்கொடுதணந்துவிரைந்தே
மிசைகுலாவுதிருமெய்யமடைந்தான். (அங)

தலங்களிற்றுருவுதானவர்தன்மை
குலங்களுக்கொருகுருச்சொலுமாற்றுற்
புலங்கொளும்புலவன்பொள்ளெனவந்த
நிலங்கொளுந்நிலையினீங்கினனேடி. (அச)

நீங்கரும்படருளாழ்ந்தனனின்றன்
பாங்கரும்பருமயர்ந்துபரிந்தார்
கோங்கரும்பணிகொள்கொங்கைகுலாவுந்
தீங்கரும்பனையதேவியுநொந்தாள். (அரு)

அங்கணற்குநவையாற்றிடலாலே
புங்கவர்தமதுபொற்பியலெல்லா
மங்கலுற்றிடலின்மாந்தர்களேபோற்
சிங்கலார்சிறுமைசேர்ந்துகவன்றார். (அசு)

விழுத்தகுங்கதியின்விண்ணவரீசற்
பழித்தலாயபிழைபற்றுதலாலிவ்
விழித்ததன்மையினராயினரொன்றாற்
கழித்தமாந்தர்செயிற்காண்பதியாதோ. (அஎ)

ஐந்துபாதகமதாற்றினுமென்னை
யெந்தவன்பவமியற்றினுமென்னை
நிந்தையில்சிவனைநிந்தைநிகழ்த்தல்
சிந்தைசெய்தலொடுகேட்டலுந்தீதே. (அஅ)

சேணடந்துவருசெய்கையினாலே
மாணலந்தவிரும்வானவரெல்லா
மாணர்நீக்குமெலிவாற்றலராகி
நாணுமுள்ளமிசைநன்றுதெரிந்து. (அகூ)

தேசிகன்றனுபதேசநினைந்தே
யீசனேயலதிடர்ப்படுவோர்க்குத்
தேசுசேர்சரணமின்மைதெளிந்து
மாசிலாவகைவழுத்துதலுற்றார். (கூ0)

வே று.

மாவுயர் சிவனே போற்றி வன்றுய ரடைத லுற்ற, வாவிகட் குறவே போற்றி யடியர்துன் பொழிப்பாய் போற்றி, தேவருக் காதி யாய தேவெனுந் திறத்தாய் போற்றி, பாவுறும் பசுக்கட் கெல்லாம் பதியென நின்றுய் போற்றி. (கூக)

சுத்தமதாயமூலப்பகுதியிற்ரேன்றுகின்ற
சத்துவமுதலவாகிச்சார்ந்தமுக்குணங்களாலே
முத்திறப்பட்டமேலைமூர்த்திகளுதிக்கச்செய்து
நித்தமாய்மன்னிநின்றநிதானமாம்பொருளேபோற்றி.

நின்ளெருநாமமோர்கானினைந்திடலியற்றியாத
னின்ளெருவடிவையுள்ளநிறுத்திடலாற்றியாத[மாறு
னின்ளெருதொழும்புற்ரேர்கணெடுந்துயர்கடக்கு
நின்ளெருதகவாற்செய்யுநிமலைதன்றலைவாபோற்றி ()

அந்தகா சுரனைக் கீண்டா யந்தகன் றன்னை மாய்த் தாய், வெந்திடப் புரங்க ளட்டாய் வேழமா மவுணற் செற்றுய், நிந்தையி லடியார் துன்ப நீக்கலே செய லாக் கொண்டாய், முந்துநற் கருணை யென்னு மூரி மா கடலே போற்றி. (கூச)

இன்னலங் கடலாழ்ந் தேமை யெடுத்துயர் கரை யிற் சேர்ப்பாய், துன்னுமிவ் விளைப்பை யின்னே தொலைத்தருள் செய்யாய் நின்னை, நன்னர்சேர் புக லாக் கொண்ட நம்மையேன் சோதிக் கின்றுர், யன் னவா றருளா யாயி னுற்றிட வல்லே மல்லேம். ()

தற்பரனினதுபாததாமரைப்பெருமைதன்னைச்
சிற்பமுந்தேருத்தீயேஞ்செய்ததோரபராதந்தான்
கற்பமார்முடிவுகோடிகழியினுங்கழிவதன்று [பாய்.
லற்பினுற்பொறுத்துக்கோடியல்லதெம்முயிரைநீப்

பூமியை யகழுஞ் செய்கை புரிந்திட லுறுவோர்
கட்குக், காமுறும் பற்றுக் கோடு கருதுமப் பூமி தா
னே, யாமது போல நின்பா லாசினை யிழைத்தேங்
கட்குத், தோமிலாச் சரண நீயே தொன்மையாஞ்
சிவனே போற்றி. (கூள)

இன்னவாறேத்திநையுமிமையவர்யாருமோடி
நன்னிலவணிந்தோர்நோக்கானைமிசாரணியம்போல
மன்னியபறவைமாக்கண்மற்றவுமாறுகொள்ளும்
புன்னெறியின்றிவாழும்புராதனவனத்துட்புக்கார். ()

புக்கதோர் மாத்திரத்தே புரந்தர னெழுவா யான,
மிக்கவிண் ணுள்ளோர் தங்கள் வியன்பசி தாக மெய்
ப்பா, மிக்கொடுந் துயர்கண் முற்று மிரவியி னொளி
முற் பட்ட, தொக்கபே ரிருளே போலத் தொலைந்
தழிந் தொழிந்த வம்மா. (கூகூ)

சூரன் றேவரைத் தேடவிட்டபடல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௫கூ௩.

---

## அசுரர் புராதன வனம்புகுபடலம்.

இப்படியொழிதலோடுமிமையவர்தொகையோரெல்லா
மொப்பருந்தெளிவுமேவியுள்ளமார்ந்துலவாநிற்ப
மெய்ப்பெருமகிழ்ச்சிபொங்கவிம்மிதநீரராகிச்
செப்பிடலுற்றார்தத்தஞ்சிந்தையிற்றோன்றுமாறு. ()

எங்களுக் குற்ற வெய்ய விளைப்பெலா மேகற் கேது, துங்கமிக் குடைய விந்தத் தொல்வன மகிமை தானோ, திங்களஞ் சடையோன் மேலாந் திருவருடானோ வென்னப், புங்கவ ரின்ன வாறு பொருண்மையைப் புகன்று நின்றார். (௨)

நிற்றலுமவர்கள்சங்கைநீங்கிடுமாறுமென்று
மற்றமதுருதவாழ்வையடைந்திடுமாறுமன்னோர்
துற்றிடுமமுதினின்றுஞ்சுவையதாய்த்துழனித்தாகி
மற்றவர்மகிழவெம்மான்வாணிவானெழுந்துசெப்பும்

வாசவனாதியாயவானவர்யாருங்கேண்மி
னாசகல்பதிகடம்முளதிகமாயமர்ந்துதீய
யாசமதகற்றுமிந்தப்பழம்பதிதன்னினீவிர்
தேசுமீக்கொண்டுசிந்தைசிறிதுமில்லாதுவாழ்மின்.()

இத்தலந்தன்னினீங்களெய்துமாத்திரத்தேயுங்கண்
மெத்தியபழங்கணெல்லாம்விளிந்தனநீவிர்செய்த
பத்திசேர்துதியினாலேபரிந்துளமகிழ்ந்தநந்த
மெய்த்திருவருளேநும்மைமேவுவித்தருளிற்றிங்ஙன்.

சிலபக லிங்கு வைகிச் சேவைசெய் திடுமி னம்மை, யிலகுமித் தலைக்குச் சேய்மை யில்லதோர் தலத்

திற் சோதி, யலகிலா தனுதே ருத வற்புதத் தது தா னேயாக், குலவுவ தாமி லிங்கங் குறைவினம் மரு ளாற் காண்பீர். (கூ)

கண்டதோர் பொழுதே யன்ன காட்சியின் பெரு மை யாலே, யண்டர்கா ணீவிர் நீங்கற் கரியவெம் பா வ மெல்லாம், விண்டிடத் தூய ராகி மேவியே சில கா லத்திற், றண்டரு நிழற்கீழ் வாழுந் தலைமையை யடைவீர் மன்னோ. (எ)

தருவர்கடலைவணுகிச்சார்ந்திடுஞ்சூரபன்மன்
ஞெருகலொடுமேவிவிட்டதுப்புடையேவலாளர்
புகுவரோலீண்டுமன்னோர்பொருவலிபோக்குதும்யாம்
பகைவரானுமக்குச்சற்றும்பனிப்பினியுறுவதில்லை.()
நீவிர்செய்தோத்திரத்தானெகிழ்ந்திடுமுள்ளத்தோடு
மேவரோயெனினுமெம்மையேத்திடல்செய்வாராயிற்
பாவமிக்குடையராயபண்பினரோனுமன்னோர்
நோவினையகற்றுதும்யாநுவன்றதுவாய்மையாமே. ()
நாடினல்லமுதாமிந்தநாகமார்மொழியைக்கேட்டு
மூடினர்புளகப்போர்வைமுகிழ்கரமுடியின்மீது
சூடினர்பணிந்தார்பல்காற்சோகமேயாதியெல்லாம்
வீடினர்மேலாமின்பவேலையின்வீழ்ந்தார்விண்ணோர்

களையிலாப் பரமா னந்தக் கடலினு ளாழ்ந்த வா னோர், விரைவினி லெழுந்து செக்கர் விரிசடை யுடைய பெம்மான், பொருவிலா காய வாக்காற் புக ன்றரு ளிலிங்கந் தன்னை, வளைவிலாத் தருச்சூ ழந்த வனத்தினிற் றேட லுற்றார். (கக)

தேடுதலுற்றபோழ்துதிகழுமற்புதத்ததாகிக்
கோடலின்மதிகள்கோடிகுலவனேர்கொள்கைத்தாகி
நீடுளம்புந்திகண்கணெகிழுநற்காட்சித்தாகிப்
பீடுயரிலிங்கமொன்றுபெருவனத்திடையேகண்டார்

அச்சிவக் குறிக்கு முன்ன ரண்மையாஞ் சாரி லீச
ன், மெய்ச்செய லதனு லுண்டாய் மிகத்தெளி நீர தா
கி, நச்சலின் முனிவர் மேலோர் நண்ணுறுங் கைத்
தா யாரு, மிச்சைகொள் பெருமைத் தாகி யிலங்கு
நற் றடமுங் கண்டார். (கங)

கண்டுவந் திந்தி ராணி காதல ஞதி யாய, வண்டர்க
ளெவரு மேன்மை யமைந்தசங் கற்பஞ் செய்து,
தண்டுறை கெழுவுஞ் சால்பிற் றடத்தினில் விதிசொ
லாற்ருன், மண்டிய * பவங்க டேய்க்கு மனுமுதற்
சொற்றே யாடி. (கச)

விரித்திடும் விலங்கே யாதி மெய்களை யெல்லாம்
வல்லே, யிரித்துநல் வடிவங்கொண்டே யெழில்பெற
விபூதி யெங்குந், தரித்துயர் தூளி யாமுப் புண்டரந்
தாங்கி மேலா, முருத்திர மணிக ளாலே யுறுவட
முலவப் பூண்டு. (கரு)

பொருடிகழ் மறைகண் மூன்றுட் புகலுநள் ளெசுர்
வே தத்துட், டெருடிகழ் நாலாங் காண்டஞ் சிறந்த
மா வுருத்தி ரத்து, ளருடிகழ் நாப்ப ணோங்கு மைம்
பொறி மந்தி ரத்தை, யிருடிமுன் னியாச முற்கொ
ண் டியைபுளி யெண்ணி ஞரால். (கசு)

---

* பவங்கடேய்க்குமனு—அகமருடணமந்திரம்.

எண்ணியேதூயராகியெழுந்தரன்பூசைக்காகப்
பண்ணமைவேதஞ்சொற்றபணிப்படிதாமேசென்று
தண்ணியலாயவில்வதளங்களைப்பல்வேருன
கண்ணறுமலர்கடம்மைக்கனிகளைக்காணுட்கொண்டார்.

இவையெலாங் கொண்ட பின்ன ரேனவு மமைத்துக் கொண்டு, நவையெலா முயிர்க்கு ருமே நன்மைசெயிலிங்க நண்ணி, யவையெலாஞ் சிரமேற் கொள்ளு மாகமம் விதித்த வாறு, சுவையெலாங் கைக்கு மின்பச் சோதியைப் பூசித் திட்டார். (கஅ)

இன்னதோர் வகையே நாளு மிந்திரன் முதலா வுள்ள, பொன்னக ருடையா ரெல்லாம் பொருவிலவ் விலிங்கந் தன்னின், மன்னொளி வடிவா நின்ற வரதனை வழிபா டாற்றி, யுன்னுறு மச்ச மின்றி யுறைந்தனர் சிறிது காலம். (ககூ)

உறைந்திடுங்காலந்தன்னிலுன்னியேயும்பர்கோமான்
மறைந்திடுநுண்மைநூல்கள்வல்லவிச்சுவகன்மாவை
நிறைந்திடுமன்பாற்கூவிநிகரிலாநகருமீசற் [ன்ருன்.
கறைந்திடு விமானமாதி யனைத்துமீண் டமைத்திடெ

என்றலும் புனைவர் செம்ம லிமையவர் புரத்தைச் சூரன், வென்றிகொண் டிடலி னன்னோர் மேவிவாழ் வுறுமா றெங்கோன், மன்றன்மா நகரம் வேறு வகுத்திவ ணல்கி யென்னத், துன்றுபல் செல்வ மேய தொன்னகர் கோயில் காண்பான். (உக)

வேறு.

ஈசனதருள்விரிந்திருக்குமாறென
யோசனையிரண்டெனுமகலமுற்றதாய்க்
காசினிதனக்கணிகலனென்றோதிடுந்
தேசுடைத்திருநகர்சிறக்கக்கோலியே. (உஉ)

நம்பிரானருள்கொடுநண்ணுமாலய
மெம்பெருமாட்டிவீற்றிருக்குமாலயந்
தும்பிமாமுகன்குகன்றுலங்குமாலய
மும்பர்கண்மற்றையோருறையுமாலயம். (உங)

அணிபெறவண்மையாமருத்தமண்டபம்
பிணிபெறனீக்கிடும்பெரியமண்டப
மணிபெறவயங்கியநிருத்தமண்டபம்
பணிபெறப்பல்கியபன்மைமண்டபம். (உச)

யாகநற்சாலைவாலுவர்களேய்ந்திடும்
பாகநற்சாலைமேற்பயிலும்விண்ணுலாஞ்
சேகரம்பற்பலதிகழுங்கோபுர
மோகைகொணுஞ்சிலினேங்குமாமதில். (உரு)

மீளருமாவணவீதிநல்விழாக்
கோளிருளெள்ளல்கள்குலவுந்தெற்றிகள்
சூளிகையரமியஞ்சுடரும்பல்வகை
மாளிகைவரிசைகள்வயங்குமன்றுகள். (உசு)

நிறைபயிலருந்தவர்நிலவுஞ்சாலைக
ளுறைபயின்முத்தழல்யூபசாலைகண்
மறைபயிலாகமம்வழங்குசாலைக
ளறைபயில்பொறைதிகழன்னசாலைகள். (உஎ)

அந்தணரிருப்பிடமரசர்தொல்லிட
மந்தமில்செல்வநல்வணிகர்வாழிடந்
தந்தொழினின்றிடுஞ்சதுர்த்தர்சாரிடஞ்
சிந்தியமரபினர்செறிந்துசேரிடம். (உஅ)

வாவிகளோடைகண்மடுக்கள்கீழ்நிலைக்
கூவல்கள்குலவியகுளங்கள்பொய்கைகள்
காவுகடடவைகள்கவினப்பூத்திடு
மாவலர்நந்தனவனங்கள்பொற்பின. (உகூ)

இன்னவுமேனவுமிணையில்கம்மியன்
முன்னியேயெழில்பெறமுழுதுமாக்கலு
மன்னவைநோக்கியேயமரர்தம்பெரு
மன்னவன்றன்னுளமகிழ்வுமன்னினன். (௩0)

ஆரணநகரமோவகிலங்காத்திடு
நாரணநகரமோஞானமீந்திடுங்
காரணநகரமோகழறுமிந்நகர்
சீரணிநகர்கொலென்றையஞ்செய்யுமே. (௩க)

வேறு.

புரந்தரன்றனையுள்ளிட்டபுங்கவர்குழாங்கடம்மை
நிரந்தரமயரச்செய்யாநின்றிடுமிளையையெல்லா
முரந்தரலின்றியாற்றுமுண்மையாலந்நகர்க்கு
வரந்தரவிந்நீர்வைப்பினிளையாற்றங்குடிப்பேர்வந்த.

இந்தவா றமர ரெல்லா மிளைசைமா நகரந் தன்னி
ற், சிந்தையுண் மகிழ்ச்சி கொண்டு சிறப்பொடு மிரு
க்கு நாளின், முந்துசூர் முதல்வன் றன்னன் முன்ன

ரோ விடுக்கப் பட்ட, வெந்திற லவுணர் யாரும் விண்ணவர் தம்மைத் தேடி. (௩௩)

பதிகளென் றுரைக்கப் பட்ட பல்லிடங் களினும் பொன்னி, நதியினற் கரையிற் றூனு நாடிநற் றவத்தின் மேலோர், துதிகொளாச் சிரமந் தேய்த்துந் தொன்மறை யோரைக் கொன்றுங், கதிகெழு புள்ளை மாவைக் காதியுந் திரிந்தா ரன்றே. (௩௪)

இன்னணந்திரிந்துதேடியிமையவராயினோரைத் [று
துன்னுறக்காணுவாற்றூற்றுயர்ந்துளஞ்சோர்ந்துநின்
ரந்நிலைகலாம்விளைத்தேயவுணரையழிக்கவுள்ள
முன்னிவந்தவரைநோக்கிநாரதன்மொழிதலுற்றான்.

தானவவீரர்நீவிர்தளருவதென்னையீண்டு
வானவர்யாருமில்லைமாசிலாவுயிர்களெல்லா
மூனமதுறவேமிக்கவுறுகணேனியற்றுநின்றீர்
மானமாரண்டரின்னேவதிந்ததோர்தானங்கேண்மின்.

புராதன வனத்தி னுப்பட் புதுவதா நகர மொன்றைத், தராதலத் துள்ளோ ரெல்லாந் தளர்வையாற் றெயில தென்னப், பராவுறும் பெயர்த்தா மன்னப் பண்ணவர் வினைஞன் செய்தான், விராவுமந் நகரில் விண்ணோர் மேவினர் போமி னென்றான். (௩௭)

நாரத னின்ன வாறு நவின்றுமேற் போத லோடுஞ், சூரர்கோன் விடுத்த வாண்மைத் தொல்பெரு வீர ருள்ளஞ், சேருற மகிழ்ச்சி கொண்டு சிறந்திடுமிளைசை யென்னும், பேருறு நகர நோக்கிப் பெயர்ந்தனர் படர்த லுற்றார். (௩௮)

பொருதிறல் கொண்ட சீயப் போத்தெனத் திகழு
ம் வீரர், நிறைதரு சேனை யோடு நெருரோலெனப் பட
ர்ந்து மேலைப், புரியினுக் கண்மை யாகப் பொருந்தி
டும் புறத்தி லெய்திக், கருமுகிற் கான மென்னக் கா
ணுறு கானம் வந்தார். (நகூ)

வே று.

பற்பலதருக்களும்படரும்வல்லியும்
பொற்புறுபுதல்களும்பொலிந்துபல்கியே
யற்பகலறிந்திடலருமைத்தாகிமுன்
னிற்குமானகர்ப்புறநெடியகானகம். (சo)

தருவரையாவையுந்தம்பமாயுறக்
கரையகல்கவைகண்மேற்கழிகளாயுற
விரிதழைமூடுறமேவுமவ்வனம்
புரியினைச்சுற்றுகாவணத்தைப்போலுமால். (சக)

கானகவரைப்பினிற்களுலும்பாதப
நீனிறமுகிற்றலைநீங்கிச்செல்வன
வானுலகியறெரிந்தமரர்க்கோதிட
மேனெறிசெல்பவர்விரிவையொக்குமே. (சஉ)

காலுறவசைவனகவைகொடாவர
மாலுறழவுணர்தம்வகையைநோக்கிநீ
ரோலுறவிங்கணுமேகினீர்கொலென்
றூலுறத்தந்தலையசைக்குநீரபோல். (சந)

மரம்படர்கொடிவகைபெயர்ந்துமல்குத
லூரம்படருங்களுக்கொழிவுநேர்ந்ததிப்
புரம்படர்வீரெனப்பொருவில்வீரரைக்
கரம்படர்ந்தழைத்திடல்காட்டுமென்பவே. (சச)

தழைவுறுகின்றநன்மரங்கடங்களுட்
புதலினமிடையிடைபொருந்துகின்றன
துதிகொளும்வெறுக்கையர்சூழ்ந்தசூழலுள்
வதிதருவறிஞர்தம்வகைமைபோலவே. (சரு)

இருளொருபொருளலவென்றுகூறுவார்க்
கிருளொருபொருளெனவினிதுகாட்டுதற்
கிருளொருவடிவினையெடுத்தற்றுலெலன
விருளொருவடிவமாயியலும்வல்லையே. (சசு)

அரிகளினினங்களோவதிகமல்லதேற்
கரிகளினினங்களோகரடிச்சூழலோ
வரிகளினினங்களோமானமாக்களோ
விரிபுளினினங்களோவென்னமேவுமே. (சஎ)

வன்றிறலரிமுதல்வகையமாக்களுங்
குன்றலில்பேதமாம்பறவைக்கூட்டமுந்
துன்றியமகிழ்ச்சியிற்றுழனிகொள்வன
வொன்றினுக்கொன்றினுலுறுகணின்மையால். (சஅ)

பேசியவண்ணமாப்பிறங்குமிவ்வன
மாசகலரணமாவயங்கநள்ளிடை
யேசகன்றிலங்கிடுமிளைசைமாபுரத்
தாசறவிருந்திடுமமரராயினோர். (சகூ)

நஞ்சணிமிடறுடைநாதன்பூசனை
பஞ்சநல்லக்கரம்பன்னுருத்திர
வெஞ்சலிலேனவையிசைத்தலேத்திட
லஞ்சலித்திடலிவையாற்றிவைகினர். (ருo)

இப்படியிமையவரியற்றிவைகலுந்
துப்புமிக்கடைதருசூரமன்னவன்
மெய்ப்படவிடுத்திடும்விறல்கொள்வீரர்க
ளெப்படிநிலையினையறிதலுற்றனர். (ருக)

அறிந்திடலுற்றிடுமமையத்தேயவட்
செறிந்திடலுற்றிடுந்திறலரேவரு
மறிந்திடலுற்றிடமறங்கொண்டார்த்தன
ரெறிந்திடலுற்றனரிசைத்தகானகம். (ருஉ)

கானகமெறியொலிகறங்குதேரொலி
யானைகள்பிளிறொலியிவுளிமாவொலி
சேனைகளார்ப்பொலிதிறலர்பேரொலி
வானகமுடையுமாறியைந்துமன்னிய. (ருங)

இத்திறமாங்ஙனமெழுந்தபேரொலி
புத்தமுதருந்திடும்புலவர்கேட்டலுந்
தத்தமதுளங்குலைகுலைந்துதஞ்சமா
நித்தியமங்கலைநேசற்சேர்ந்தனர். (ருச)

ஆயிரங்கண்ணவனுதிப்பண்ணவ
ரேயதோர்பரசிவலிங்கந்தன்னெதிர்
போயுறநின்றிவைபோற்றன்மேயினர்
தாயினுமேம்படுதகவினன்றனை. (ருரு)

வேறு.

விண்டுமுதலாம்வியனுருக்களன்பருக்காக்
கொண்டுதுயரகற்றுங்கோமானேகாத்தருளாய்
மண்டுதொழின்மூன்றியற்றும்வள்ளலேவாள்சூலந்
தண்டமுதல்வாய்ந்த*சயமுடையாய்காத்தருளாய் ()

* சயம்—கை.

மங்கையொரு பங்குடையாய் வன்கணைச் செற்றுடையாய், துங்க மழவிடையாய் தோலுடையாய் காத்தருளாய், சங்க வடியர் தமக்குச் சரணுடையா, யெங்க டமையுடையா யின்புடையாய் காத்தருளாய்.

நானுவலத்தவுணர்தீமையினனண்ணியுறும்
வானர்துயர்மலைக்குவச்சிரமேகாத்தருளாய்
பூநாகவாரம்புனைந்துளாய்முச்சுடரா
மானுதசீர்விழிகொளண்ணலேகாத்தருளாய். (ருஅ)

சொன்னவகையாற்சுரரொல்லாந்துதித்திடலு
மன்னபொழுதேயவர்துதிக்குமகிழ்ந்தருளிச்
சென்னிமதிபுனைந்தசிவபெருமானன்னவருக்
கின்னலகற்றத்திருவுள்ளமிரங்கினனே. (ருகூ)

இன்பமருள்செய்யுமெம்பெருமானின்னேயாம்
வன்புமிகவாய்ந்தவயிரவநல்லுருவத்தாற்
கொன்புரியுஞ்செய்கைக்கொடுந்தகுவர்சேனையழித்
தன்புடையதேவரரந்தையினைத்தீர்த்தருள்வாம். ()

என்றுதிருவுள்ளத்தெண்ணியேயருள்செய்து
கன்றுமனமுடையகாரவுணக்கடலுண்ணும்
வென்றியழலாம்வித்தகப்பேர்மேதகையோ
னென்றமுருவதனையுற்றருள்வானும்பர்பிரான். (சுக)

வேறு.

ஆரழற்சிகையணைந்தொளியவிர்ந்ததெனவே
சீரணிந்தமுடிசெஞ்சடைபுனைந்துதிகழ
யாருமஞ்சவருமெஞ்சலின்முகத்தினிடையே
கோரமிக்குடையகோலவிழிமூன்றுகுலவ. (சுஉ)

திங்களம்பிறையின்வாளெயிறிரண்டுசினவித்
துங்கமுற்றவிதழின்புடைதுலங்கியுறவே
பொங்குமின்னலதுபோன்றதொருநாவுகடைவா
யங்குமிங்குமுறநக்கியளைவுற்றுநிலவ. (சுங)

திருச்செவித்துணைகள்குண்டலமணிந்துதிகழப்
பொருப்புநேர்ந்தபுயமங்கதமமைந்துபொலிய
வுருச்செயுங்கழுமுளொள்வசிகபாலமுடனே
விரித்தயோகவுயர்தண்டமிவைக்கைகண்மிளிர. (சுச)

வச்சிரப்படையின்வல்லவுகிர்மாட்சிபெறவே
நச்சுவாளரவினண்ணியிடுமுப்புரியினு
லெச்சமின்மணிகொளாரமொடுமார்பிலகவே
விச்சைஞாளியெனுமூர்திவிறன்மேவியுறவே. (சுரு)

கையுளார்கள்புனையாதமைகலன்கள்பலவுந்
துய்யமெய்யிலணிபெற்றுமிகவுஞ்சுடர்தர
வையமெங்குமுடிவெய்துபகல்வன்னிபொருவும்
வெய்யமேனியொளிவிண்ணொளிவிழுங்கிமிகவே. ()

கழுதுபூதமுதலாயினகடுங்கிரகமுந்
தொழுதுநோக்குமளவேயறவகன்றுதொலையப்
பழுதிலூதையினுமோங்குவிசையான்றுபயிலக்
குழுவுகொண்டுடையசெல்லினுமதிர்ச்சிகுலவ. (சுஎ)

பொம்மல்சேர்பகைவர்யாரையுமொருங்குபொடியா
வெம்மைசெய்யுமொருவென்றியியன்மேவிவிளையச்
செம்மைநாரடியர்சேரலுறுசேமநிலையாய்
மம்மர்நீக்கியருள்பேரருள்வயங்கிமருவ. (சுஅ)

முன்னமோர்பகலின்முண்டகன்முகுந்தன்முரணிப்
பன்னருங்கடவுள்யாமெனவுடன்றுபடரு
மன்னபோழ்தவணமைந்தவடிவின்றுமமையாப்
பொன்னகர்க்கிறைவனுதியரைநோக்குபுசொலும். ()

தஞ்சமென்னநமைநண்ணியதவத்தினிமையீ
ரொஞ்சலில்பகைவரால்வருமிடுக்கண்வெருவைப்
பஞ்சதென்னவெரிதன்னிடையிற்பாற்றியருள்வா
மஞ்சலின்றியொருசில்பகலினீண்டையமர்திர். (எ0)

கந்தவேணமதுமைந்தனருள்கண்ணியுலகின்
வந்துதோன்றியுறுகின்றனன்மதிக்குமனையான்
முந்துசூரனெனுமுன்னவனைமேவலர்தமைச்
சிந்துகின்றவொருசிங்கமுகனென்னும்வலனே. (எக)

யானையின்முகமியைந்துடையதாரகனெனுந்
தீனமில்லிளவறன்னையும்விரைந்துசெருவின்
மானமோடுவதைசெய்துமைமகிழ்ச்சிபுரிவா
னனதோர்திரொனவந்தரர்தமக்கருளினுன். (எஉ)

செம்மையாவினைபான்மையருள்செய்துமுறையே
யெம்மையாளுடையவைரவனெனுஞ்சிவபிரான்
பொய்ம்மையாரவுணர்பொன்றியுறவென்றியமரர்
தம்மையாரமுயல்கின்றனனுயர்ந்ததகையான். (எ௩)

ஞாளியூர்தியுடைநாயகன்விநாயகனெடுங்
கோளுறும்புரமகன்றுகுலவானவரொலா
மீளருந்தகையின்மேவியயல்சாரவிரையா
வாளுறும்படிவவன்னிதிசைநோக்கிநடவா. (எச)

பாதமூன்றலினதிர்ந்துதிகழ்பாரசையவே
தீதிஞேசைதனிஞசைகள்செவிட்டினிசையக்
கோதிலாவிருகுரோசமெனுமெல்லேகுறுகி
மோதகங்கொளருண்மூன்னவனேநோக்கிமொழிவான்.

தீயவல்லவுணர்சேனேயையழித்திடுதியாற்
றூயநம்புதல்வவென்னவருடோன்முகமுளா
ஞயிரங்கணுடையாஞெடுமழன்றுசெலவே
மேயசேனேயொடுமெஞ்சமரமுற்றதையரே. (எசு)

கண்டுளார்மயிர்பொடித்துடலயர்ந்துகவலா
விண்டுபோகவரும்வெய்யதொருபோரினிடையே
தொண்டர்தந்துயர்தொலேத்தருளுமானேமுகவன்
மண்டுசேனேயைவதைத்தருள்புரிந்தனனரோ. (எஎ)

நன்பெரும்பகவர்நாடலுறுமுண்மையறிவா
ரின்பமாமுருவவீசன்வடுகப்படிவனுய்
வன்புறுந்தகுவர்வாகினியைநோக்கியழியா
வன்பினுர்கடமையன்பினினளித்தருளினுன். (எஅ)

இந்தநற்கதையியம்புபவர்கேட்பவரடர்
வெந்துயர்ப்பிணிகள்வெந்துமிகுசெந்திருவுடன்
சிந்தைசெய்தவைகள்சேர்ந்தெகினனூர்தியருளா
லந்தமார்பொழுதருங்கதியையேய்வர்சரதம். (எகூ)

அசுரர் புராதனவனம்புகுபடல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கூசஉ.

---

# அசுரசங்காரப்படலம்.



என்று கும்பமுனி யோத லோடுமகிழ் வெய்து மா தவர் கணத்தினோ, ரன்ற வன்றன்முக நோக்கி யேயி வைக ளன்பி னேடுமுனா செய்குவார், மன்ற யாவுமு ணர் மாண்பு ளோய்நினது வாக்கெ னும்பொருவி ல முதினை, நன்று நச்செவிகண் மாந்தி யும்பெருக நாந் தெ விட்டுத லடைந்திலேம். (க)

மாணு நல்லடியர் பத்தி யின்கணுறும் வைரவக் கடவு ளாகவத், தேணு றுந்தகுவர் தம்மை யெங்ஙன மிறுத்தல் செய்தன னெயிற்றணி, பூணு றுங்களப முகவ னெவ்வகைமை போற்ற லார்குழுவை மாற்றி னன், பேணி யிங்கிவைகள் யாவை யுஞ்செறியும் பேர ருண்முறைமை பேசுவாய். (உ)

என்ன வேவிரத மாத வத்தரிவை யிற்றை யோது தலு மாகடன், முன்ன முண்டருளு முனிவ னேதுறு வன் முனிவர் நல்வதன நோக்கியே, தன்னி கர்த்த பொரு ளீவ தாய்ச்சுசிகொள் சாலும் வைரவ சரி தையைப், பன்னு வாமதனை நன்னர் சேர்முனிவிர் பற்று முள்ளமொடு கேண்மினோ. (ங)

ஆய காதையுட னங்கு சம்புவையு மங்கை கொண்ட ருளு மண்ணல்விண், மேய வாசவனை யாதி யாவுடை ய விண்ணு ளோர்கள்புடை நண்ணுறத், தீய வல்ல வுணர் சேரு றும்பெரிய சேனை யாகிய திரைக்கடற்,

போய ஞர்வலியை நீக்கி யட்டதொரு பொருவி லா வகையு மறைகுவாம். (ச)

தும்பி மாமுகவ னும்பர் தம்மொடு தொடர்ந்து சென்றவுணர் சேனைமேல், வெம்பி யேகுதலு மன்ன நோக்கிமிகு வெம்மை கொண்டுலவு தானவர், தம் படைத்திறம தணி படுத்திலகு தாரை வாண்முதல தாங்கியே, யம்பு ராசியென வார்த்து வந்தெதி ரடைந்து ளார்பொர மிடைந்துளார். (ரு)

வேலை வீசினர்கள் சூலம் வீசினர்கண் மேலை மங்குலென வில்லுமிழ், கோலை வீசினர்க ளாகி யேபொரலுங் கோட்டு மாமுக விநாயக, ஞலை வீசியடு கன்ன லங்குவையி ஞயி ரங்கொள்பதி ஞயிரஞ், சாலை வீசியதொர் தருவர் தந்தொகுதி தாக்கி ஞனுயிரை நீக்கிஞன். (சா)

விண்டி னுற்றமுடி யன்ன தண்டமொடு விண்டிடாமுசல முற்கரங், கொண்டு நின்றவுணர் கூட்டழிக்குமொரு கோட்டு மாமுகன் குலாவுரு, வண்டரண்டமொடு பூதம் யாவையு மழிக்கு மொள்ளழலுருத்திரன், மண்டு கத்திறுதி வாய்க்கும் வெவ்வுருவு மானு மென்னவுரை பன்னலாம். (எ)

வீர மிக்குடைய வேழ மாமுகவன் மேவி யிங்ஙனமு லாவலும், போரி யல்புணர் புரந்த ரன்பொருவில் புங்க வப்புயல் பொழிந்தவட், கோர வல்லவுணர் தம்மை நாற்புறமுங் கோலி நின்றெதிர் தடுத்த

னன், பேரு டற்றகுவ ராயி ரத்தர்பலர் பேரு ருது பொரு திட்டனர். (அ)

இந்த வாறிவர்கள் வெய்ய போர்புரிய விந்தி ரத் தலைவன் பன்முறை, நந்தை வாயினிடை வைத்தி சைத்துமிகு ஞாட்பி யற்றியவர் யாரையுஞ், சிந்தி யேயடலின் மிக்க வெம்மையுட நீர்ந்த ழிந்தொழிய வாற்றியே, யந்த மார்பொழுதி னங்கி யென்னவவ ணடுக ளந்தனி னிலங்கினன். (கூ)

ஆய போர்முனையி லத்தி மாமுகவ னம்பு மாமழை சொரிந்துநின், றேயு மாறுபொரு கின்ற வேலையினி லெண்ப தாயிரமி பங்களும், பாயு மாப்புரவி பண் ணு தேர்த்தொகுதி பத்தெ னப்பகரு மயுதமு, மேய வன்னதொகை கொண்ட வாசிகண் மிகுங்கு ழுக்க ளும் விளிந்தவே. (க0)

பாடு றுந்தகுவ ரர்ப்பு தத்தொகை படைத்து ளா ர்படி படைத்துளார், வாட லுற்றயரு மெஞ்ச லுற் றபடை மாழ்கி யோடுதலை யுற்றன, வாடு றுந்தொழி லின் வன்மை யாயின வகன்றி ரிந்திடு பதாகினி, நா டி யங்குறுகும் பாண்ட னும்பொருந னவிலு வா னனி தடுத்தரோ. (கக)

தான வர்குல முதித்து ளீர்மிகுதி சாலு நல்வலி படைத்துளீ, ரான நீவிரிது போழ்தி னிச்சமரி னஞ்சி யேகவச மெறும்வசி, யீன மில்பரிச தோம ரம்பரசு வென்னு மாப்படைகள் விட்டுவிட், டினே

மோடுமெவ ஞேடு கின்றனி ருலைந்து பையுளினை யெய்தியே. (கஉ)

தள்ள ருந்தகைய மான முள்ளவர் தணப்ப ரோவு யிர் தணப்பினும், கொள்ளு மின்களக மீது யான்வ ருவல் கூரு மின்சமரி னென்றிடா, வள்ளு றும்படை கொள் வாகி னித்தலைவன் மற்ற வாகினி தடுத்துநி ன், றுள்ள மாருநனி யூக்க மோடவ னுருத்து மொ ய்யம ரியற்றுவான். (கந)

கார் முகம்பொருவு கார் முகத்தையிரு காலி ஞே டுபல கால்வளைத், தோர் முகம்புணர நாணி பூட்டி நனி யொளிர்வ நற்குறி யியலுவ, கூர் முகம்பொலிவ வெண்ணி லாக்கணைகள் கொளுவி யேயழன மாடுறு ம், போர் முகம்பொலிவி நாய கன்மிசை பொழிந்து ளான்மிக விழிந்துளான். (கச)

இழிந்த வன்பொழித லுற்ற தீக்கணைக ளேக நோ க்கிய வுயர்ந்தவன், கழிந்தி டாமுறுவல் காய்க டுஞ் செயிர் கலந்து கூர்சர மளப்பில, பொழிந்து வல்லை யவன் மெய்த்தெ றும்படி புரிந்து பின்னவன் பொருந் துதே, ரொழிந்த பாகுகொடி யூழி யாம்படி யுஞற்றி னுன்சுர ருவப்பவே. (கரு)

தேர ழிந்திடலு மாயை வன்மைமிகு தீய வன்சி னமதெய்தியே, கூர ழிந்திடலில் வண்மை சேர்பர சு கோதி லாவசி கதைப்படை, சூர ழிந்திடலை யாற் று வோன்றனது துணைவ னேறியரு டேர்மிசைக், கா

ர ழிந்திடைய வார்த்து வீசினன் கவன்று விண்ண
வர் கலங்கவே. (கசு)

விட்ட வெம்படைகள் வேக மோடுவர வேத மூ
லவுரு வெய்தினேன், மட்டி லாதகணை மாரி சிந்திய
வை மாய்ந்து போம்வகை யியற்றியே, சிட்டர் தங்
குழுவை வாட்டு றுங்கொடியன் சிதைய வேதிரு வு
ளங்கொளா, வொட்டு போரினிடை யங்கு சப்படை
யுழற்றி விட்டன னழற்றியே. (கஎ)

அங்கு சப்படைய தொல்லெ னக்கடிதி னுன்று
போயவனை யட்டபின், றுங்க மோடுமெவண் மீண்டு
வந்தெவருந் தொல்வி யப்புறவி நாயகன், செங்கை
தன்மிசையி னுற்ற தன்னதெரி சித்தர் கந்தருவ ரிரு
டிகள், புங்க வர்களிவ ருள்ள மாமகிழ்வு பூத்த வன்
றனை வழுத்தினர். (கஅ)

தீமை மேவியகும் பாண்ட னின்னவகை தீர்ந்து
லத்தலு மருங்குசூழ், தோமு றுந்தகுவ ரோவ ருங்
கடிது துன்னி யோடுபவ ராயினு, ராம வேலைதனில்
வக்கி ரத்தசன னுன்ற தந்தனெனு மிருவருந், தாம
வற்றையுற நோக்கியே யிரியுந் தான வப்படை திரு
ப்பியே. (கசு)

மிக்க சீற்றமொடு கண்டு ளோர்வெருவ வெய்ய
தேரின்மிசை யேறியே, பக்க நின்றறுபத் தாறு கோ
டியெனும் பாடி யோரவுணர் பரவுறத், தக்க வன்
மையொடு தந்தி மாமுகவன் சார்ந்து நிற்புறு மடுங்க

ளம், புக்கு நோக்கியெரி கால வேவிழிகள் புகலு வா ர்மலையை யிகலுவார். (உ0)

ஏவு முள்ளறிவி லாயு ளைத்திடுதி யாளை நீவலியி லாளையின், றேவல் செய்துநமை யெண்ணு ருதுமி கை யுற்று நின்றனையென் றேதிடா, மேவி மீயுயரு ம் வெஞ்சி னத்தினெடு வில்லி னுளெலி விளக்கி யே, பாவி கட்கனுக லில்ல வன்றன்மிசை பகழி மா ரிகள் பொழிந்தனர். (உக)

அன்ன காலகரி மாமுகத் தவனே யண்மி நாற்புற முஞ் சூழ்வுறு, மன்னி நின்றடல்கொ ளவுணர் சூல முதன் மாப்பெ ரும்படைகள் விட்டனர், கன்னெ ருங்கிவிழ வோச்சி னுர்தருவின் கானி னெற்றினர்க ள் கைகளால், வின்னெ டுங்கணைகள் வண்ண லத்த வைகள் வீசி னுர்முறைமை வீசினுர். (உஉ)

வேலை யென்னவருள் வேழ மாமுகனே வெய்யர் சுற்றியம ராற்றலுஞ், சூல மேந்தியரு டோன்றல் பார்த்திதழ் துடிக்க வேசினவி யொல்லையி, னுல கா லனெடு சோம கன்பொருவி லங்கி மாமுகவ னடுதி றற், கால வேகன்முத லாய பூதரையுங் காவ லோர்த மையு முதவினுன். (உங)

உதவ லோடுமவர் யாவ ருந்தொழுத லுற்று நாற் றிசையுஞ் சுற்றுறக், கதியை நல்லுயிர்க டங்களுக் கருளுங் கால வைரவ னெனும்பிரான், றுதிகொ ண ம்புதல்வ தான வப்படைஞர் தொல்லு யிர்த்தொகை

யை வல்லையின், வதைசெ யாமலிவ ணிற்ப தென்
னென வருத்து நின்றமரி யற்றுவான். (உச)

ஞாளி யூர்தியொரு முத்த லைப்படையின் ஞாட்பி
ல் வந்துட னெதிர்த்திகன், மூளு மாற்றலர்த மெய்க
ள் போழ்ந்துபுவி முற்றும் வீட்டியுறு போழ்தினிற்,
ருளும் வக்கிரத மிட்டி ரன்கவுரி தனய னேடுசமர்
செய்தன, னீளு டற்பெரிய பல்லி னேன்வடுக நிமல
னேடுமம ராற்றினன். (உரு)

தொண்ட லங்கொடயு தத்தின் மிக்கவர்தஞ் சூழ
லைக்கடிது பற்றியே, கொண்ட கோடுகொடு குத்தி
வீழ்த்தலுறு கோட்டு மாமுகனை யண்மியே, மண்டு
வக்கிரத மிட்டி ரன்சினவி வல்லை யோர்கிரி பிடுங்கி
யே, விண்டு போயினையென் றேதி யேயதனை விட்
டு ளான்பெருமை விட்டுளான். (உசா)

விட்ட பேரசல மிக்க வேகமொடு மேவ லோடும
து நோக்கியே, யிட்ட ளக்கிரியை நூறு மாக்குலிச
மென்னு நற்புகழ் படைத்துளான், மட்டி லாவலி
கொ ளங்கு சப்படையை வல்லை யிற்செல விடுத்தன
ன், கிட்டு மாமலையை யட்ட தாலனைய கேடிலாப் ப
டை யுடைத்தரோ. (உஎ)

அங்கு சப்படையு டைத்த கோணமுடை யப்பெ
ருஞ்சயில மனைவரும், பொங்கு மற்புதம தெய்த வே
கிழல்செய் பொருவின் மண்டப வடிவமா, யெங்க
ளையன்மிசை மெல்ல நண்ணியுள தேய தன்புரிவு

வறிதுறப், பங்க முற்றபொரு நன்சி னங்கொடு ப ருத்த வெங்கதையொ டண்மினுன். (உஅ)

அண்மியேவிரைவி னவ்வெ றுழ்ப்படையை யாற்ற லோடுமிசை வீசலுந், திண்மை மிக்ககண நாயகத் தகைமை சேரு நம்மிறைவ ஞேக்கியே, வண்மை மிக்கவிளை யாட லாலதனை வண்பு ழைக்கைகொடு பற்றிநின், றுண்மை யில்லவனை யன்ன தேபடை கொ டோச்சி வல்லுயிரை நீக்கினுன். (உகூ)

வே று.

செய்ய வார்சடை சேர்ந்து லாவிய சென்னி கொ ண்டுள சித்தனும், வெய்ய செய்கையை யென்றுமே செயும் வெய்ய னும்பெருந் தந்தனை, மையன் மார்பினை தூடழுந்த வடிக் கழுக்கொடு கொந்தியே, கையி னேந்தி மிகுந்த வார்ப்பது காட்டி யங்ஙன நின்றனன்.

இன்ன வாறிவர் மூவர் தாமு மிறந்து மன்னுயி ரோ கலு, மங்நிலைப்படு தானை யாவையு மால காலனை யாதியாத், துன்னு பாரிடர் தாக்க வோய்ந்து தொட ர்ந்து விண்ணவ ரொங்கணு, மன்னி யோட்டிட வோ டி யேபெரு மன்னன் மன்னுழி மன்னிய. (ஙக)

பின்பு வானவர் யாரு நின்று பெருங் களிப்பொடு போற்றிடத், துன்பு நீக்கிடும் வைர வத்தனித் தோ ன்ற லும்மவன் ருேன்றலும், வன்பு றுஞ்சமர் நாம்ப நீரிய மாண்பு சேருறு தீர்த்தநல், லின்பு றும்படி த ம்பெ யர்கொடி யற்றி னாருள் பற்றினுர். (ஙஉ)

தீர்த்த மாயின செய்த வற்றுறு தீரமேனிகழ் பல்வகை, கூர்த்த மானவர் கூட்ட மேபயில் கோல மாரிரு மாநகர், கீர்த்தி மிக்குற வாக்கி யேவலி கிளர்கணத்தொடு மூலமா, மூர்த்தி யாகிய தாமு முன்னமை முந்து நீர்நிலை மூழ்கியே. (௩௩)

கணங்கள் வானவர் வேண்ட வின்ன கயங்க ணீரிடை மூழ்குவோ, ரணங்கு செய்பெரும் பாவ நீக்கமடங்க லார்வகை போக்குற, லிணங்கு நன்மகப்பேறு முற்பல வெய்து வாரென் றருள்செயாத், தணங்கொ டம்பெயர் பெற்ற மாநகர் தம்மி லேற்றமொடுற்றனர். (௩௪)

எய்ப்பி னுக்கொரு வைப்ப தாகிய வீசன் மெய்யருளாணையான், மைப்ப டிந்தெனு மூர்க்க னுய்த்தமலைப்பெ ருங்குகை மந்திரத், தொப்பி நீர்த்தம தற்கு நண்ணிடை யுற்று மேலைவி நாயகன், றப்பி லன்பருக் கென்று நல்வரஞ் சாரு வித்தருள் கின்றனன்.

அன்ப ரானவர் தங்க ளுக்கிட ராற்று மாற்றல ராற்றலை, வன்பு செய்தடும் வைர வத்தனி வள்ள லுந்தன தீர்த்தமுன், றென்பெ ருந்திசை நோக்கி யேதிருக் கோயில் கொண்டருள் கொண்டினுந், துன்பில் வானவர் மான வர்தொழத் தொல் வரம்புரி கின்றனன். (௩௬)

அசுரசங்காரப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூஎஅ.

## மயூரகிரிப்படலம்.



சேனை காவல ரோனை யோர்கள் சிறந்த கைலையி
னுயகன், மேன நல்லரு ளா லழிந்திட விண்ணுளோ
ர்க ளியாவரு, மூன மார்மெலி வாற்று மீசனை யுற்று
வந்து வணங்கியே, யான தோத்திர மெண்ணி லா
தன வங்கு நின்று நிகழ்த்தினர். (க)

இன்ன நீர்ந்தவ ரான வானவ ரீறி னற்றுதி செய்த
லுந், தன்னி ருஞ்செவி சாத்தி யேயுயர் தாணு வாகி
ய தற்பர, னுன்ன ருந்திரு வுள்ள மீதி னுவந்து மற்
றவர் காணுற, மன்னு நித்திய மங்கலைப் பெயர் மா
தொ டும்வெளி வந்திடும். (உ)

வேறு.

வெள்ளியங் கிரிபோன் மிக்க வெள்ளிய முரிப்பும்
வேங்கைப், புள்ளிமென் றேல்சேர் வெந்நும் பொ
ன்மணி வற்க வாயு, மள்ளுகிங் கிணிப்பே ரோசை
யார்த்திடுங் கழுத்துஞ் * சூலங், கொள்ளுறும் வல
முற் காலுங் கொண்டமால் விடையின் மீதே. ()

வீற்றிருந் தருளிக் கற்றை வேணியிற் கங்கை யா
றுங், கீற்றுவெண் பிறையாஞ் சென்னிக் களரணி
தானு மேவ, நாற்றிருக் கரங்க டம்மி னவ்விய மழு
வு மச்ச, மாற்றலும் வரமுஞ் சேர மணியொளி மிட
று மன்ன. (ச)

---

* சூலம்—சூலக்குறி.

தெய்வவான் கங்கை யாற்றைச் சேர்ந்தகா ளிந்தி யென்னச், செவ்விய கூதிர்க் காலந் திகழ்மதி கோடி போலு, மெய்வரு மிடப்பான் மேவி வியன்கிளி போலும் பச்சை, மைவரு மேனி வாய்ந்த வன்னை யாந் தேவி யோங்க. (ரு)

வாக்குள மகன்ற மேனி மாணலங் காண்போர் தங்க, ணோக்கினைக் கவர நான்கு நுவன்மறை யுருவ ந் தாங்கி, நீக்கற நின்று மேன்மை நிகழ்த்திட வடி யார் தம்மைக், காக்குறுங் கயிலை நாதன் காட்சிவிண் ணவருக் கீந்தான். (சு)

ஈதலு மன்னோர் நோக்கி யீறிலா விழைவால் வைய, மீதிணு யிரங்காற் ருழ்ந்தார் மேலுற வெழுந்தார் துள்ளிப், பாதமோ டாடா நின்ருர் பாடினர் பரவிச் செங்கை, கோதறு முடிமேற் கூப்பிக் கொண்டிவை யன்பிற் சொல்வார். (எ)

அறுகுணச் செல்வ நின்பே ரருளினு லவுணர் தம் மைக், கறுவுகொள் வடுகப் புத்தேள் கயமுகக் கட வுள் போரிற், றெறுகணத் தோடு நின்று சிதைத்த னர் சிதைத்த லால்யாம், பெறுமிகு மச்சந் தீர்ந்தேம் பேறெலா மின்னே பெற்றேம். (அ)

இந்தநற்கேத்திரத்தினிணையிலாப்பிரபாவத்தா
னந்தமதகங்களெல்லாநசித்தனபெருகவாதி
யந்தமில்பெருமவல்லையமருலகெங்கட்கீவாய் [லை.
வெந்திறற்பகையின்றேனும்விசும்புறைவிருப்பேயில்

தேருநல்லழகுவாய்ந்துசிறந்திடும்வளங்கண்மேவி
யாருமீக்கூறுநிற்குமிப்பதிமீதியாங்கள்
பேருறுதிருந்தியார்க்கும்பேரிறையானநின்னே
யேருறவழிபட்டெல்லையில்லதோராண்டுவாழ்தும்.

ஆயினற் சேனை மாண்ட தாற்றலின் றாகி யோடிப், போயதா னவராற் கேட்டுப் பொருவினல் வரங்கொ ண் டுற்ற, தீயனுஞ் சூர பன்மன் சினவியே தானே யின்று, மேயதோர் பகைமேற் கொண்டு விரைந்து வந் திடுவான் றிண்ணம். (கக)

அன்னவ னரிய வாற்ற லடக்குத லெவர்க ளாலு, முன்னரி ததனல் யாங்கண் முடிவிலாப் பனிப்புக் கொண்டே, மன்னிய கருணைக் கொப்பில் வைப்பெ னும் பகவ வன்னுன், றன்னுயி ரொழியச் சூழ்ச்சி சமைத் தெமைக் காத்தி யென்றார். (கஉ)

என்றுவிண் ணப்பஞ் செய்தே யிமையவர் குழா ங்க ளெல்லா, நின்றிட வடியார் மீது நீடருள் புரியும் பெம்மா, னென்றிய வமுதந் தன்னை யுறுசெவி வாக் கு மாபோ, னன்றவர் தம்மை நோக்கி நயந்திவை யரு ளிச் செய்யும். (கங)

அஞ்சலிர் வான நாட்ட ரடைந்திடு மமக்கு நன் மை, தஞ்சமா நம்மைச் சார்ந்தார் சார்வரோ சிறிது மச்ச, நஞ்செய றன்னை யெண்ணு னம்மிடைச் சரண முற்ற, நுஞ்செயி ரில்லா வாழ்வு நூறிட முயன்றான் றீயோன். (கச)

அன்னவன் றன்னைக் கோறற் கமைந்ததோ ருபாயஞ் செய்தா, மென்னையோ வென்று நீர்கேட் டிடினுரை செய்துங் கேண்மின், றன்னிகரில்லா வாற்றற் சண்முகத் தனய னுலம், மன்னவன் றுணைவ ரோடு மற்றைய ரோடும் வீவான். (கரு)

அனையவனன்றிச்சூரமவுணனையடவல்லார்யா
ரினையனுநங்கணுற்றவிணையிலாத்தேசினின்றும்
பனிவரையென்னுஞ்சீர்சால்பருப்பதச்சாரல்சார்ந்த
நனிதிகழ்சரவணத்தினள்ளுறத்தோன்றியுற்ருன். ()

சரணுறுமடியார்கட்குச்சார்பகைநீக்கவல்ல [மி
முருகவேடன்னைச்சேனைமுதல்வனுவரித்துக்கொண்
னருமைசாலனையனம்பேராணையாற்றனைவேந்தா
மருவுவனவனுல்வல்லைமருவலார்தம்மைவென்மின்.()

என்னவேயருளிவேளையெரித்தவன்வேளையுள்ளத்
துன்னினனுன்னலோடுமுயர்சரவணத்திற்ருேன்றி
மன்னுநல்வேளுமன்னவகையினையறிந்துதாதை
யன்னையாமிருவர்க்காணவாசைமீதூரக்கொண்டு. ()

பயிலுறுநீலவெற்பிற்பரிதியொன்றுதித்தாலென்ன
மயிலுயரூர்திமீதுவனப்பொடுமிவர்ந்துதன்றற்
குயிறருகணங்கள்சூழக்கோலநல்லுமையாள்வந்து
புயறவழ்பொருப்பினின்றும்பொருக்கெனவந்தானம்மா

மருவுறு மாரன் மாதர் வளர்த்தலாற் பார்த்தி கேயப், பொருவிலாத் திருப்பேர் கொண்ட பொருவலி

க் குமரப் புத்தே, ளளையெனும் * புகைக்கு மேலே யடைந்திடுந் தகைமை யன்பின், கரையிலன் கயிலை நாதன் கண்டனன் கவுரி யோடும். (உ0)

கண்டிடுங் கயிலை நாதன் கணிப்பிலா மகிழ்ச்சி யுள்ளங், கொண்டனனன் பினற்பால் கொங்கைகள் சொரிந்து விம்மும், வண்டலர் குழலி யோடு மால்விடை மேல்கொண் டேகி, யண்டர்க ளெவருஞ் சூழ வண்மினன் குமர வேளை. (உக)

தாதையு மன்னை தானுந் தன்னுழை யேகல் காணூஉ, மேதகு கந்த வேளும் வியன்பெரு மகிழ்ச்சி யெய்திக், கோதிலா மஞ்ஞை நின்று கொம்மென விழிந்தே யன்னர், பேதுற வகற்றி யின்பம் பெருக்கும்பே ரடிக டாழ்ந்தான். (உஉ)

திண்ணிலந் தாழுஞ் சேயைத் திருக்கையா லெடுத்துப் புல்லி, யண்ணலு மம்மை தானு மார்வமோடுச்சி மோந்து, தண்ணிய மடிமேல் வைத்துத் தனித்தனி மகிழ்ந்தி யாரு, மெண்ணுறத் தமக்கு நாப்பணிருத்தினர் கருணை மெய்யார். (உங)

பகலிரவினுக்குநாளும் † பகலுறுமாலையென்ன
விகபரமீவார்தங்கட்கிடையின்வீற்றிருக்கும்வேளை
மகபதியாதியாயவானவரானோர்யாரு
முகவையிற்பணிந்துபோற்றியுயர்திருமுன்னர்நின்றார்.

* புகை - யோசனைதூரம். † பகல் - நடு.

அவ்வழிச் சிவனு மெங்கோ னருமைசால் சேயை நோக்கிச், செவ்விதா மன்பி னேடுஞ் செப்பியே யருள்வான் மைந்த,வெவ்வமி லிந்தி ராதி யிவ்விமை யவர்கள் சூரால், வெவ்விய வெருவு கொண்டு மெய்ப் புகல் சார்ந்தார் நம்மை. (உரு)

ஆதலி னவர்கட் கன்பா லடுபடைத் தலைமை பெற்றுத், தீதுறுஞ் சூரை மற்றைத் தகுவரை விரைவிற் செற்று, மாதுய ரொழிப்பா யீண்டே வன்படைத் தலைமைக் காவிப், போதிவர் நீரா லாட்டப் பொருந் துதி யைய வென்ருன். (உசு)

என்றுகை லாயநாத னியம்பியே யருளக் கேட்டுத், துன்றிய வலிமை மிக்க சுப்பிர மணியப் பெம்மா, னன்றது செய்வ னென்னு நவின்றன னதனை யோர்ந்து, மன்றவே மகிழ்ந்து வானோர் மாண்டன னினிச்சூ ரென்ருர். (உஎ)

பின்புநல்லின்பநல்கும்பிரானருளாணைதாங்கி
மின்பயின்மயூரமீதுமேவியகார்த்திகேய
னென்பெருவீரன்றன்னையிந்திரன்முதலாந்தேவர்
வன்படைத்தலைவனுகமதித்துநீராட்டினுர்கள். (உஅ)

ஆட்டிநல் விசாகற் போற்றி யறுமுகம் படைத்த மேலோ, யீட்டுபல் பாவஞ் செய்யு மிழிந்தசூ ரொம்மைச் சால, வாட்டுறு கின்ரு னெந்தாய் மைந்தர்நற் றுணைவர் சூழ்வோர், கூட்டமோ டவனைவீட்டிக் கோதற வருடி யென்ருர். (உகூ)

என்றுநின் றிரந்து வேண்டு மிமையவர் தமக்குச் செவ்வேண், மன்றநல் லருளைச் செய்ய மாயனு மய னுந் தேட, வன்றுநின் றருளு மூர்த்தி யயிற்படை யொன்று நல்கி, வன்றிறற் சூராக்காதி வருகென வருளைச் செய்தான். (௩௦)

செய்தலும்வீரவீரன்றிருவடிவேலைவாங்கி
யுய்தரவுயிரையோம்புமொருதனித்தந்தைதாயர்
மெய்தருசரணந்தாழ்ந்துவிடைகொடுவீரவாகுக்
கைதருபடையோனுதிக்கணத்தவர்சூழநீங்கி. (௩௧)

பண்ணவர்பரவியார்ப்பப்பல்லியந்துவன்றியார்ப்பத்
திண்ணியவீரரார்ப்பச்சேனைகள்பிறவுமார்ப்ப
விண்ணியலாறுயார்க்குமேவரும்வேலோன்சென்று
கண்ணியதரங்கமார்க்குங்கருங்கடல்கடந்துபோந்து.

போரியல் பகைசூழ் மாயா புரந்தனிற் புகுந்து நே ருந், தாரகன் றன்னை யேனைத் தகுவரைத் திறல்கொ ள் சீயக், கோரவத் திரனைக் கொன்று கொளற்கரு வரமேற் கொண்ட, சூரபன் மாவை யட்டுத் தொ லைவிலா வாகை சூடி. (௩௩)

இயந்தலை தோறும் விம்ம விமையவர் குழாங்க ளெல்லாம், வியந்துபோற் றெடுப்ப வுள்போய் மே வலன் சிறையி னீக்கிச், சயந்தனைக் கொண்டு மீண்டு தண்புன லருத மேன்மைக், கயந்தலை சூழும் பூமேற் கயிலையை யடைந்தான் மன்னே. (௩௪)

தன்னைமுன் விடுத்துத் தாமுந் தணந்தவண் வந்து மேலா, மின்னிய நிலையோ டுற்ற விருமுது குரவர் பாதஞ், சென்னியிற் கொண்டே யுள்ளந் திகழ்தரு மகிழ்ச்சி யோடு, முன்னுற நின்றான் றேவர் மொய்த் தனை வோருஞ் சூழ. (௩௫)

தந்தையுந்தாயுமில்லாச்சங்கரன்றேவியோடு
முந்துறநிற்குஞ்சேயைமுதத்தொடுமெடுத்துப்புல்லி
மைந்தநீசூரன்றன்னைமாய்த்துவந்தனையோவென்னக்
கந்தனின்னருளாலட்டேனென்றலுங்கருணைபூத்தான்.

அப்பொழு தமர ராஞே ரண்ணலை வேண்ட லுற் றூ, ரிப்புவி மீதே யெங்க ணிகற்படைத் தலைமை பூண்டான், மெய்ப்படு மங்க னேயிவ் வியனறு முகங் கொ டேவன், வைப்பின்வீற் றிருக்க வுள்ளம் வைத் தரு ளென்று தாழ்ந்தார். (௩௭)

மண்ணுறு கைலை யண்ணன் மற்றது செவியிற் கொ ண்டே,யுண்ணிறை கருணை யோடு முரைத்தவத் தல த்துச் செவ்வே, ணண்ணிவீற் றிருக்க வானை நல்கி வான் செல்வ மெல்லாம், விண்ணவர் வேந்தற் காக்கி வியனருள் செய்தான் மேலோன். (௩௮)

மாவுயர் செல்வம் பெற்ற வலாரிவா னவர்க ளோ டுந், தேவர்தந் தேவைத் தாழ்ந்து சீர்தகப் போற்றச் செவ்வே, ளாவயி னப்பனம்மை யடிதொழூஉ விடை பெற் றெண்பூத், தூவுபண் ணவர்கள் சூழத் தூவி மா மயின்மேற் கொண்டான். (௩௯)

தெய்வதயானையம்மைசீர்கெழுவள்ளியம்மை
மைவருகண்ணார்தம்மைவனப்பினிற்கொண்டியாங்க
ளுய்வரமுகங்களாறுமுற்றருள்வள்ளறென்கீழ்க்
கைவருதிசையின்மூன்றுகுரோசமேற்கலந்துவந்து()

சரவணப் பொய்கை யென்னுந் தன்னிகர் தடமொ
ன் ருக்கிச், சுரரொடு மன்ன தீர்த்த தோயத்தின்
மூழ்கி யாங்கண், மருவியே படிவோ ரெண்ணில் வர
ம்பெற வருளி மேலாங், கிரிமிசைக் கோயில் கொண்
டு கிளர்ந்துவீற் றிருந்தான் மாதோ. (சக)

திருமலர்மலர்ந்ததன்னதிருமுகமாறுந்தெய்வக்
குருமணிமகுடமாறுங்கோதினல்லடியார்தங்கட்
கருளூறுவிழிமூவாறுமணிக்குழைக்குழையீராறு
மருவொளிச்சத்தியாதிவான்படைக்கரமீராறும். ()

கனகவுத் தரியத் தோளுங் கண்டிகை முந்நூன்
மார்பும், புனைதுகி லரையும் பொன்போற் பொலிதி
ரு வடியும் பொற்ப, வனைதரு மயின்மேற் கொண்டு
வனிதைய ரிருபான் மன்ன, நனிதரி சிப்போர்க்
கென்று நல்வர நல்கி வைகும். (சஙு)

கிளத்துறுதலமயூரகிரியெனவென்றுமுள்ள
துளத்திடரொழிவுற்றுய்ந்தவுயர்நிலத்தரசனேனை
வளத்தகுவானேரோடுமெகிழ்சிறந்தறிஞருள்ளங்
கொளத்தகுங்குகனைத்தாழ்ந்துகோதறவழுத்தலுற்றான்.

வீரருள்வீரபோற்றிவிழுத்தகும்பெரியோய்போற்றி
காருறுகண்டத்தெந்தைகளித்திடும்வடிவாய்போற்றி

நேரினற்சுடரேபோற்றிநிகழ்த்தருவலியாய்போற்றி
யேருறுமறுமுகங்கொளிறைவனேபோற்றிபோற்றி.

தேறுநல் லடியார் துன்பந் தீர்த்தருள் செய்வாய் போற்றி, யேறுடைப் பகவன் பெற்ற வெந்தையே போற்றி கங்கை, யாறுற வந்தாய் போற்றி யெழின் மயின் மலையாய் போற்றி, யாறுமா முகங்கொண் டுற் ற வண்ணலே போற்றி போற்றி. (சசு)

செம்மைநல் லருள்வாய்ந் துள்ள திருவுரு வுடையாய் போற்றி, நம்மிரு கண்களூடு நண்ணுமா மணியே போற்றி, யம்மைய ரிருவர் நீங்கா வருட்பெருங் கடலே போற்றி, யிம்மயின் மலையிற் றோன்று மெம்பிரான் போற்றி போற்றி. (சஎ)

என்னநின் றன்பி னேத்தி யிந்திரன் விடைபெற் றேகித், துன்னுமச் சுரர்கள் சூழத் தொன்மைசேர் துறக்கம் புக்கு, மின்னிடை வல்லார் கொங்கை மெல்லிதழ் முருந்து மூர, லன்னமென் னடையா ளின்பத் தமர்ந்துவந் திருந்தா னன்றே. (சஅ)

பொன்னடிப்பூசைசெய்தபுலவர்க்குப்பேறுநல்கி
மன்னியகயிலைநாதன்மகிமையுமனையவள்ள
னன்னிலைகொண்டுமேவுநகரினுக்கிளைசையாம்பேர்
துன்னியவழியுமெல்லைத்தொடர்புநற்குறியுமெய்யீர்.

வயிரவபுரியுமற்றைவிநாயகபுரியுமாட்சி
யுயருநன்மயூரவெற்புமுதித்ததுமுரைத்தாமிந்த
வியனுறுசரிதம்யார்க்குமிக்கதோர்தூய்மைநல்கும்
பயிலுறுபாவமெல்லாம்பாறவேசெய்யுமன்றே. ()

சித்தநற் றீர்த்த மாடித் திருக்கயி லாய நாதன்,
மெய்த்திரு வடிக டாழ்ந்து வியன்பரு வத்து மென்
று, மித்தகுஞ் சரிதங் கேட்போர்க் கெய்திடுஞ் செல்
வ மென்ன, முத்திற வுலகு மேத்து முத்தமிழ் முனி
வன் சொற்றான். (ருக)

மயூரகிரிப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எஉகூ.

## கண்ணுவமுனிப்படலம்.

மொழிதரல் கேட்டு லோபா முத்திரை கொழுந
கும்பத், துழிதரு முனிவ நின்சீ ரொருமுக மதியி
னின்றும், பொழிதரு சரிதை யென்னும் புரிசுதைப்
பெயலை யாங்கள், கழிதரப் பருகி யின்னுங் கருத்
துறத் தெவிட்டி லேமால். (க)

பருகிய வேண்டுங் காதல் பற்றியுள் ளேவு மாற்றா,
லொரு பெருங் கயிலைநாத னுயர்தரு மகிமை யின்னு,
மருளுதி யென்று தூயோ ரஞ்சலித் தறைத லோடு,
மிருடிகண் முதல்வன் கேட்டே யின்னண மருளிச்
செய்வான். (உ)

வேதநன்குணர்ந்தமெய்யீர்வியன்கயிலாயநாத
ஞேதருமகிமைகேட்கவுளத்திடைமுயலலுற்றீ
ராதலினீரோபேற்றையடைந்துளீரிளைசைப்பேருக்
கேதுமற்றொன்றுமுண்டாலியம்புதுமதுவுங்கேண்மின்.

வே று.

மங்கை யுடைய பெருமானை மனத்து ணிறுவி மங்குனிகர், செங்கை யுடைய பகீரதமன் செய்த லரிய தவஞ்செய்யக், கொங்கை யுடைய கொன்றை மலர்க் குழகன் புவியிற் செலவுய்த்த, கங்கை யுடைய கரையினொரு காலமுறைந்தா னன்ன வன்றான். (ச)

பெருமை திகழுங் கண்ணுவப்பேர் பெற்றோ னோதிப் புருகுற்சற்; கருமை திகழ மொருமைந்த னமையுந் திரிடு தச்சியுவுக், கொருமை திகழும் பின்னுனோன் யோக வலிமை யுடல்கொண்டோ, னிருமை திகழுங் கருமமவை யாவு மொழுகும் வன்மையுளான்.()

விதியி னெவரும் போற்றவரு மேலாந் தரும நிலையுடையோன், முதலும் வழியுஞ் சார்புமெனு மூந்நூன் முழுது முணர்ந்துடையோன், றுதிகொள் வேத சிரங்களிடைத் தொடரும் பொருள்க டேர்ந்துடையோன், றதையுஞ் சடைமண் டலமாதித் தவஞ்செய் கோலச் சால்புடையோன். (கூ)

எல்லா வியலு மியைந்தாடன் னியலு மறனுக் கேற்றநிலை, நில்லா வியலு நியதியினு ணிகரி னிறைகொள் பரானந்தை, வெல்லா வியலிற் றுணைவியொடு மேவியனைய மாதவர்கோன், பொல்லா வியலிற் புனைபோக்கும் பொருவில் கொடிய தவம்புரிவான். (எ)

உணவை யொருவி யைம்பெறிவா யுதிக்கும் புலனை யடக்கிவர, மணவு மோன முத்திரையோ டான்

ற சின்முத் திரையையுங்கொண், டிணையு மூக்கு நு தியினிடை யிரண்டு விழியு முறக்கிடத்தித், தணிவி ன் மேலைக் கீழைவளி தடுத்து மனமாம் வாரிசமேல்.

சோதி யாகி யற்புதமாய்த் தூய பரம வெளியாகி, யோதி யாகி யானந்த வுருவா யுயிருக் குயிராகிப், பேதி யாத பரம்பொருளாய்ப் பிறங்கும் பரம சிவந் தன்னைப், பாதி யாது பதித்துநெடும் பருவ மொழி யாத் தவத்திருந்தான். (கூ)

இந்த வாறு கந்தினசை யின்றி யிருப்பக் கடமை முத, லந்த மில்லா விலங்குகள்வந் தணுகி மெய்யை யுரைத்திடுமாற், பந்த வேணிக் கற்றைமிசைப் பல வாம் பறவை வெருவின்றி, முந்த வமைத்துக் கூண் டீனு முட்டை யோடு முவந்துறைந்த. (க௦)

யோக நாடுங் கண்ணுவனு ரோங்கும் வளியை யிரு வழியிற், போக நாடி நடத்தாது புகரி னடுவா நாடி யினு, ளேக நாடித் தடுத்தூக்க வெழிலிற் றலையி னழ ரேன்றி, நாக நாடு விரைந்தணுகி நாகர் குழுவை வ ருத்தியதே. (கக)

வருத்த லோடும் வானுளு மன்ன னுய மகவேந்த, னுருத்த தவத்தி னழற்கிளர்ச்சி யூற்ற நோக்கி யுள மாழ்கிப், பெருத்த மகிமைக் கண்ணுவனூர் பேணுந் தவத்திற் கிடையூறு, பொருத்த மதித்துப் பலவாறு பொள்ளென் றினைய துணிகின்றான். (கஉ)

முனிவன் படிவத் தமரிருக்கை முன்னம் வாளொ ன் றுறச்செய்து, பனவன் வடிவ மொன்றுமவற் படு க்க விரைந்து படர்கின்ற, சினவும் வேங்கை வடி வொன்றுந் திறத்தி னிரண்டுங் கடிதெய்தி, யுனவு ம ரிய மாயையினு லுற்றே யாங்க ணியன்றிடுவென். ()

பார்ப்பா னவனைப் படுக்கவரல் பார்த்தும் வேங் கை தனைக்கொல்லக், கூர்ப்பா னலனு யம்முனிவன் கொன்னே யிருப்ப னதுபோழ்தின், வேர்ப்பா னவ னை வெம்புலியால் விளிவித் துறினவ் வருபழியா, ஞர்ப்பா னவனு நலிந்துதவ மகல்வா னமது நசை முற்றும். (கச)

அன்றே னமது பதந்தன்னை யரிய தவஞ்செய் மா தவர்கோ, னன்றே பெறுவ னமதுயர்வு நலியு மீது திண்ணமதா, மென்றே யுளத்திற் றுணிந்தவன்மு னிலங்கு மொருவா ளுறச்செய்தே, யொன்றேய் பன வன் புலியுமென வுயரு மாயை கொடுவருமால். (கரு)

பம்பு மொளிகொள் பூதியனுப் பரவு மக்க மாலை யனுய்ச், சம்பு சிவமா தேவவெனச் சாற்று மொலியு முடையவனுய்க், கம்ப மடைந்து நரைமிக்கே கனை யி றிரையாற் றோல்சுருங்கி, வெம்பொ னனைய பற் கழன்று விழிகண் மயங்கு முருவினனுய். (கசு)

தளர்ந்து தளர்ந்து தள்ளாடித் தகையுந் தாள்க ளு டையவனுய்க், கிளர்ந்து புலிபின் றொடர்வதையோ கிடைத்தே னின்னைப் புகலாக, வளர்ந்த கருணை மா

தவத்தோய் வலிந்து காத்தி காத்தியென, வுளர்ந்த மனமோ டுரைத்தணுகி யுற்றான் மாய மறையோனே.

காயு மழல்போற் றறுகண்ணார் கண்க ளிரண்டும் பொறிகாலப், பேயு மருளு முருமிடியிற் பேழ்வாய் நின்றுங் குமுறலெழச், சேயு ளடிசேர் வள்ளுகிர்கள் செறியும் படையிற் கூர்ந்தொளிரப், பாயு மாய வுழுவைகிழப் பார்ப்பான் றன்னைத் தொடர்ந்தன்றே. ()

மறையோன் சரணம் புகுந்ததுவும் வயமாக் கொல்ல வந்ததுவு, முறையோ வுற்ற வொருவாண்முன் னுற்ற வாறும் பார்த்தறவோர்க், கிறையோன் வேங்கை தொடருமிவ னெம்மை வந்து புகலடைந்தான், குறையோ தாத புலிக்கொலையுங் கொடிதென் றுன்னி நின்றனனே. (கக)

நின்ற காலை பொய்ம்மறையோ னோர்ந்து நின்று கைவிதிர்த்தே, யொன்று முயிர்ப்பு மிக்கவனு யுணர்த்து கின்றா னருணிதியே, யின்று நின்னைச் சரண்புக்கே னென்னை யுயிர்தந் தளிப்பதற்கு, மன்ற வலிய புலிதனையிவ் வாளி னாலே வதைத்தருடி. (உ0)

இந்த வகையி னுயிர்தந்தே யென்னை யளிக்கி னறனுண்டா, மந்த வகையின் வறிதுறுத லாகா தின்னே யகங்கோடி, யெந்த வகையு முயிர்க்கோற லேனு மெனினு மெனைப்புரக்கு, முந்த வகையிற் பாவமிலை யுண்மை யீதென் றுரைத்தனனால். (உக)

விருத்த னிசைக்கு மொழியெல்லா மேலோன் கேட்டு வறிதுற்ரு, னுருத்து வந்த குயவரியு மோடி வந்த தவற்காதத், திருத்த முனிவன் புலேநோக்கிச் சிறந்த விந்த வந்தணனைப், பெருத்த பாவங் கோற லினிப் பெட்கா திவனை விடுகென்ருன். (உஉ)

என்ற மொழியைக் கேட்டவரி யேறு நகையா வி வையுரைக்குந், தின்றி யாகவிவன் கிடைத்தான் றெ ய்வத் தாறே யந்தணனே, யன்றி யெவனே யாயினு மென் னவனைக் கொல்லிற் பெரும்பாவ, மொன்று மென்ருய் முனிவவஃ துண்மை நூலின் கருத்தன் ருல். (உங)

பெரியா யுயிரின் கொலையேதும் பெருக்கும் பாவ நினக்கென்று, மரியா மறஞ்செ யெனக்கென்று மது வே யறமா மறிகவெனப், பரியா மனமோ டிவையு ரைத்துப் பாணி யாது தொடர்ந்துபுயல், சொரியா நிற்கு மடங்கலெனுந் துழனி யோடும் பற்றியதே. ()

அறவோ யறவோய் காத்தருளென் றரற்றுங் கரவி ன் மறையோனைத், துறவோர் தலைவன் கொல்லலெ னத் தொடர்ந்து பலகாற் கூறியுளம், பிறவோர் செ யலு மறியாது பேதுற் றிருப்ப வீர்த்தோடிப், புற வோ ரிடையின் விரைந்துகொடு போந்த தந்த வரிப் புலியே. (உரு)

கண்டா னதனைக் கண்ணுவப்பேர்க் காட்சிமுனி வன் கருத்தி னிடைக், கொண்டா னவலம் பெரிது

முறக் கோதி லமிழ்த நெடுங்கால, முண்டான் கடு வை யுண்டெனவே யுயங்கி மயங்கி யீதென்னே, ம ண்டா னிகழ வந்ததெனு வகுத்து மேலு மிவைமதி ப்பான். (உசு)

புகலா நம்பாற் புகுந்தோனைப் புலிதான் கொல்ல விட்டமையாற், றுகலா நெடும்போ துழந்த தவத் தொன்மை தன்னுன் மருவுற்றே, யகலா திருந்த பய னெல்லா மகன்று போயிற் றென்செய்கே, னிகலா லுயிரைச் செகுக்கைபழு தென்னு நூலைக் கடைப்பி டித்தேன். (உஎ)

சரணம் புகுந்தோன் றனைவிடற்க சார்ந்த வவனை த் தாங்கும்வழி, மரணம் புகினு மறுலென்ன வகுக் கு நூலின் வாக்கினுக்கோர், முரணம் புகவே முடிந் தமையாண் முந்து மிந்தத் தீவினையான், விரணம் பு கவே விளைந்துளது விளம்பி னினியிங் கென்னுகும்.

எங்கே யெங்கே யெதுவெதுவந் தெய்த வேண்டு மது வதுவந், தங்கே யங்கே நேர்ந்தெய்து மையமில் லை யென் மாட்டுத், தங்கே னத்த பெருந்தீங்கைத் தவிர்க்கத் தூரஞ் செல்வனெனு, வெங்கே தத்து ம னத்துன்னி வெறுத்தே யுயிரைத் துணிந்தெழுந்து.

தந்தை தன்னை முன்னவனைத் தாழ்ந்து தன்னோர் பன்னியொடுஞ், சிந்தை சேர்ந்த துயரினொடுஞ் செ ல்ல முயன்று கங்கைமுத, லெந்தை மகிழுந் தீர்த்தங்க

ளீறில் காசி முதற்பதிக, ணிந்தை யகலு மையாண்டு நிறையும் வரையுஞ் சஞ்சரித்து. (௩௦)

நிகழூந் தவள நாவலின்கீழ் நீர்மேன் முளைத்த பெருமானுர், புகழும் படியே யடியவர்க்குப் புகலா விருந்து நல்லருளிற், றிகழு மானைக் காவதனிற் றெய்வ வயத்தால் வந்தடைந்தா, னிகழும் படிசே ரின்னவினை யெய்தி மாழ்கு மிருந்தவனே. (௩௧)

வேறு.

அன்னபதி முன்னுளதா யன்னமொடு காரண்டந், துன்னுவதாய்ப் புண்ணியமாய்த் தூய்மைமிகு நீருடைத்தாய், மன்னுமிரு கரைமாலுஞ் சங்கரனும் வயங்குவதாய்க், கன்னிமதி கழிமதியிற் கங்கைமுத னதிக்குயர்வாய். (௩௨)

நடுத்திகழு மரங்கத்து நாயகனை மாலிகைபோற், றொடுத்துலவுந் தொடர்பினதாய்த் தொன்மையதாய்ச் சையகிரி, யிடத்துதித்துப் பெருகுவதா யீறில்கடல் சேருவதாய்த், திடத்தமரர் கணமெல்லாஞ் சேவைசெயுங் காவிரியை. (௩௩)

கண்டுபெரு மகிழ்வோடுங் கலந்தாடித் தன்வயமாப், பண்டுதொடர் பாவமெலாம் பாவித்து நாவலடி, கொண்டருளு மகிலாண்ட நாயகிதன் கோமானைத், தொண்டமையத் தொழுதேத்தித் தொன்னிகழ்வு சொலிநின்றுன். (௩௪)

அங்கதற்குத் தென்றிசைவா யடைந்துதிரு முடிமீது, செங்கதிரா யணிந்தருளித் திகழ்சுகந்த குந்தளையா, மங்கையொடும் வீற்றிருந்து மனைத்தாயு மாகியருள், சங்கரனைப் பணிந்தேத்தித் தனதுளத்தி லிவையுன்னும். (௩௫)

இப்பதிக்குத்தென்றிசைபுக்கிராமேசஞ்சென்றுபெரு
விப்பிரகத்தியைநீக்கும்வியன்புனிதவிற்கோடித்
துப்புலவும் * புட்கரத்துஞ்சுரர்முனிவர்பிறரோத்து
மொப்பரியசேதுவினுமுழுவலொடும்படிந்தாடி. ()

பத்துநிரைச் சென்னியனைப் படுத்தபழி பாற்றிடமுன், மெய்த்திருமால் பதிட்டைசெயு மேன்மைதிகழ் பரம்பொருளா, முத்தமனைத் தரிசித்தே யுயர்தேவர் கந்தருவர், சித்தரொடு கின்னரர்கள் சிறப்புடைய திருமுனிவர். (௩௭)

அனைவோரும்போற்றுவதாயளவிலருந்தீர்த்தங்கள்
வனைகந்தமாதனமாம்வரையினைக்கண்டிருந்தீர்த்த
மெனையவுமேபார்த்தாடியிருமைநலம்பெறுவனென
மனமுறமற்றிவையுன்னிவழிக்கொண்டுவந்திடுவான்.

தென்றிசைசார் வழிச்செல்லுந் திருமுனிவன் கோகன்ன, மென்றுபுகழ் திருப்பதிசென் றேற்றபெருநாயகியைத், தன்றலைமை யறியாத தன்மையனைக் கண்டிறைஞ்சி, மென்றழைய பொழில்சூழுமெய்ய மெனும் வெற்படைந்தான். (௩௯)

* புட்கரம்—தீர்த்தம்.

சத்தியபுட் கரிணியெனுந் தடத்தாடிச் சத்திய வெற், புத்தமனேத் தரிசனஞ்செய் துறவணங்கிப் போற்றெடுத்தே, யத்திசைக்குத் தென்றிசையி னடைந்துபுரா தனகான, மெய்த்தலத்து வந்தனனுன் மேலாய புண்ணியத்தால். (சo)

கண்ணுவமுனிப்படல முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - எகூகூ.

## கண்ணுவமுனிபேறுபெற்றபடலம்.

சொல்லரியவியப்பினதாய்த்தொன்மைமிகுமேன்மை
புல்லரியவக்கானம்புகுந்தமுனியுறநோக்கி [யதாய்ப்
யொல்லரியவுளத்தெளிவுற்றெருப்பிலிறும்பூதடைந்து
வெல்லரியகற்பினளைவிழித்தின்னவிளம்புறுவான். ()

நங்காயிவ்வனத்தினிடைநண்ணியதோர்மாத்திரத்தே
யெங்காயத்தெழுந்தமிகுமிளையெல்லாமிகந்துற்ற
வங்காயுந்தகைசேர்ந்தவகந்தெளிவுபெற்றுளதா
லுங்காயகாரணமென்னுணர்கிலனுலெனக்கூறி. (உ)

சிந்தித்துநின்றிடலுஞ்சிவபெருமான்றீஞ்சுவைமிக்
கந்தித்தபேரொலிகொளாகாயவாணியினுற்
சந்தித்தகண்ணுவப்பேர்த்தவத்தனுளமகிழ்பூப்பப்
பந்தித்தமலமகற்றும்பரமனிவையருள்செய்வான். ()

வே று.

கண்ணுவச்செல்வநீகருத்துட்கோடியிப்
புண்ணியவனத்திடைப்புகுந்தமாத்திரத்

துண்ணிகழ்பவமெலாமொழிந்தவின்னினிப்
பண்ணுவதினைத்தெனப்பணித்துங்கேட்டியால். (ச)

இவ்வனத்தணித்துறவிலிங்கமொன்றுநற்
றிவ்வியசுயம்புவாய்த்தேசினேங்கிடு
மவ்வொருகுறிக்குமுன்னனகசித்தநீர்
வெவ்வியபவநலம்விளிவித்தீந்துறும். (ரு)

அத்தகுதடத்துநீராடிநங்குறி
மெய்த்திருப்பூசனைவிதியினூற்றியே
பத்தியிற்றரிசனம்பண்ணும்பான்மையாற்
சுத்தனையாகுதிதுகளில்சிந்தையோய். (சா)

என்னவேவிண்ணிடையெழுந்தவாக்கினைத்
தன்னிருசெவிகளுந்தளிர்ப்பகேட்டவன்
றுன்னிடவிழியினீர்பொடிப்புத்தோன்றிட
வுன்னருமகிழ்வெனுமுததியாழ்ந்துளான். (எ)

ஆழ்ந்திடுமருந்தவனவனிமீதுற
வீழ்ந்தனனிறையருள்விண்ணின்வாக்கினைத்
தாழ்ந்தனன்பன்முறைசென்றுசான்றவர்
வாழ்ந்திடுமிளசைமாநகரம்வந்தனன். (அ)

வந்திடுமருந்தவயோகமாதவ
னந்தமிலற்புதமாயவப்பதி
தந்திடுஞ்சீரினைச்சார்ந்துநோக்கிநல்
ளிந்திரனியற்றியவேமக்கோயின்முன். (கூ)

சுத்தமதாகியேதுலங்கிவைகிய
சித்தமாதடத்தினைச்சேர்ந்துசித்தமேன்

மெய்த்தெளிவெய்தியேவிளங்குநூன்முறை
யொத்திடும்பன்னியோடொருங்குதோய்ந்தனன். ()

தோய்ந்தபின்கரைபுகுந்திரண்டுதூசுடுத்
தாய்ந்தநன் * மறைமுடிவங்கியாதியா
வேய்ந்திடுபொருளெலாம்பற்பமேயென
வாய்ந்திடும்பூதியைவயங்கப்பூசியே. (கக)

பெருத்திடும்புங்கவர்பீழைகண்டிறை
திருத்திகழ்முக்கணுமலர்த்திச்சேர்வுற
விருத்தியொண்ணீர்வரவிளைந்தமேன்மைகொ
ளுருத்திரமணிவடமுடலிற்றுங்கியே. (கஉ)

காலையிற்புரிகடன்கழித்துநண்பகல்
வேலையிற்செயன்முடித்துறுவர்விண்ணவர்
கோலநற்பிதிர்கணங்கொள்ளவெட்குசை
சாலவக்கதமொடுதெருப்பித்தானரோ. (கங)

பின்பவனெழுந்துபோய்ப்பெயர்ந்துகானிடை
மின்பயில்கோமளவில்லுவங்களைப்
பொன்பயில்பல்வகைப்பூக்கடங்களைக்
கொன்பயில்பழங்களைக்கொணர்ந்துசார்ந்தனன். ()

ஐந்தமுதானுறுமைந்துசெம்மதுச்
சந்தனநறும்புகைதழல்கொடீபிகை
முந்துறுமமுதமேமுதலவான்பொரு
ளந்தமில்பூசனைக்கமைத்துக்கொண்டபின். (கரு)

---

* மறைமுடிவு — சாபாலோபநிடதம்.

வந்தனைபுரிந்திடவந்துமெய்ம்மொழி
சிந்தனைகடந்திடுஞ்சிவன்மெய்யைந்தினுட்
டந்தனைவோருமுய்தகச்செய்மெய்யதாய்ப்
பந்தனையகற்றுநல்லிலிங்கப்பாற்செலா. (கசு)

பாதலமுளைத்துமேற்படர்ந்துபாயநீர்ப்
பூதலமீதுறப்பொலிந்துதோன்றிநற்
சீதலவடிவினிற்றிகழுஞ்சோதியைக்
காதலங்கிறைகொளக்கண்டுவந்துபின். (கஎ)

நற்றிருமஞ்சனநலங்கொடாட்டியே
பொற்றுகில்கோட்டிமென்போதுசூட்டியே
கற்றைகொணறும்புகைதீபங்காட்டியே
யற்றமிறிருவமுதன்பினூட்டியே. (கஅ)

பின்னுறவியற்றிடும்பெற்றிமுற்றியே
முன்னவனருளியமுதன்மையாகம
நன்னெறியெண்ணிருநலங்கொள்பூசனை
யின்னணமியற்றினனியாவுந்தேர்ந்துளான். (ககூ)

பேசியவண்ணமேபிரமனேமுதன்
மாசறுகீடமேவரையுயிர்க்கெலா
மாசறுமம்மையாயருளுந்தேவியைப்
பூசனைபுரிந்தனன்பொருவிலன்பினேன். (உ0)

சந்நிதியிருந்துபின்னகிலநாயகன்
மன்னுருமனுவினையயுதம்வாழ்வரு
ளன்னைதன்மனுவினையயுதஞ்சால்புறப்
பன்னியேசெபித்தனன்பசுத்துவங்கெட. (உக)

நமகமாம்பெயரினைநாட்டுருத்திர
மெமகமுள்பொருள்பெறவேத்தத்தக்கதோர்
சமகமொண்புருடநற்சூத்தஞ்சம்புபாற்
கமகமாமேனையகவின்கொண்மந்திரம். (உஉ)

செபித்திடுநியமமுட்கொண்டுதீவிய
கபித்தமதுகந்திடுங்கடவுள்வானுளோர்
தபித்தலின்றாகவேதந்ததற்பரன்
* கெபித்திறநீத்தருள்பதிகள்கிட்டியே. (உங)

அனையவர்திருப்பெயர்த்தீர்த்தமாடியப்
புனையருளாளரைப்பூசையாற்றியெத்
தினமுமிவ்வகைபுரிசெயலனுய்ப்பழந்
தனையுணவருடமொன்றினைசைதங்கினன். (உச)

இன்னணமின்னியவிளைசைமாதலந்
துன்னியங்கிருந்தவன்றேகைதன்னொடும்
பன்னிருமதியமும்பரவியீற்றினின்
மன்னுறவருவதோர்வைகறன்னிடை. (உரு)

வேலையெல்லெழுமுனமெழுந்துவீசியின்
மாலைகொள்சித்தநீர்படிந்துமாணுறுங்
காலைமுற்கடன்களைக்கழித்துக்கண்களாற்
சேலைநேர்சிவைக்கிறைகோயில்சேர்ந்திடா. (உசு)

மூவரின்முதன்மைசேர்முக்கண்மூர்த்தியைத்
தேவியாஞ்செல்வியைச்சிறப்பவென்றும்போ
லோவறப்பூசைசெய்துயர்ந்தசந்நிதி
மேவியைந்தெழுத்தினைச்செபித்துமேயினன். (உஎ)

* கெபி—மலம்.

வேறு.

அந்தவேலையினருளினுக்குறையுளாமம்மை
முந்துசேர்முனிக்கருளவேதிருவுளமுன்னிச்
சந்தமார்நகிலிரதிகளெண்ணிலார்சார்ந்து
வந்துதோன்றியதோற்றமார்வடிவுகண்கவர. (உஅ)

செம்பொன்மாமணிப்பணிகண்மெய்திகழ்ந்தொளி
வம்புராசிநேர்கருணைகூர்திருமுகமலர [கால
விம்பநின்றுமேவெளிவராவியந்திடுமுனிகை
பைம்பொன்வண்டணிகாந்தளந்திருக்கரம்பற்றி. ()

சிவபரஞ்சுடர்திருமுனாருட்பெருஞ்செல்வி
யுவமையில்பெருநாயகியுயிர்க்குயிராகிப்
பவமகற்றுவாள்வேண்டுவாளுலகருள்பகவ
வவமிலின்னவற்சோதனைபுரிந்திடலழகோ. (௩0)

கல்லியாணநன்கருளுககாரணசிவனே
கல்லியாணநன்கருளுககண்ணுவன்றனக்குக்
கல்லியாணநன்கருளுககண்ணுவனினது
கல்லியாணநன்கருளடிக்கன்புளான்காத்தி. (௩க)

என்றுநம்பெருமாட்டியங்கியம்பியவாய்மை [தே
சென்றுதன்றிருச்செவியிடைச்சேர்ந்ததோர்பொழு
வன்றுயர்க்கொடும்பிறவிநின்றெடுத்தெமைவாழ்விற்
றுன்றுவித்தருளருட்கடற்றோன்றியேயருளும். (௩உ)

கங்கைவான்பிறைகலந்திடுந்திருச்சடைக்கவினு
மெங்கும்பூசியபுண்ணியநீற்றினதெழிலு
மங்கண்பாமணியணிகளாலடைந்திடுமழகும்
பொங்குநன்மணிப்புயங்கமாம்பூணநூற்பொலிவும்.()

புலியின்றோலுடைவயக்கமுங்கோடியெண்பொருந்து
மலரிநேர்தருகாந்தியுமளவிலாவனங்கர்
மலியுங்காமருமுடையதோர்வடிவொடுந்தோன்றித்
திலகவாணுதறிருக்கரம்பற்றிமுன்றிகழ்ந்தான். (ருச)

திகழ்ந்தகாலையிற்கண்டனன்கண்ணுவன்றெளிகண்
ணிகழ்ந்திடும்பயனடைந்தனனீடுயர்க்கிடனு
யிகழ்ந்தபாசமதிகந்தனனிகப்பறமகிழ்ந்தான் [டோ.
புகழ்ந்துசொல்வதென்னினியொருபுரையவற்குண்

கரையிலாப்பெருமகிழ்வெனுங்கடலினின்றெழுந்து
பரையினற்றிருக்கரம்படுபொணிமேற்கூப்பி
யுரைகடள்ளூறவென்பெலாநெக்குநெக்குருகப்
புரையிலாததோரன்பொடும்போற்றுதலுற்றான். ()

வேறு.

பரவரிய நித்தியமாய்ப் பராபரமாய் நான்மறை கொள் பயன தாகிப், பிரிவரிய சுசிப்பொருளாய்ப் பரம்பொருளாய்ப் பிரம மாகித், தரவரிய வுலகினுக்குக் கருத்தாவாய்ப் பரிப்பவனுய்த் தந்தை யாய, பொருவரிய சித்தவன நாயகநின் றிருவடிகள் போற்றி போற்றி. (ருஎ)

உயிரொவைக்குங் கரியாகி யுண்மைபெறு முயர்வினுக்கு முயர்வா யின்பச், சயமருவுந் தனிமுத்தி தருபவனு யளவாத சத்தி மானு, யயிரகலு மாகமங்கள் புகழ்கின்ற பாதுகைய னுகி நின்ற, புயறவழுஞ் சித்தவன நாயகநின் றிருவடிகள் போற்றி போற்றி. (ருஅ)

ஞேயமுமாய் ஞானமுமாய் ஞாதிருவாய் நிரஞ்சன மாய் நீர சத்தே, மேயவிதி நாடரிய வொளியாகி விளையாடல் விளக்குங் கோவாய்த், தூயசனந் தனரா தித் துறவுடையோர் தொழுமின்பச் சோதி யாகிப், போயநிகர்ச் சித்தவன நாயகநின் றிருவடிகள் போற் றி போற்றி. (ஙசு)

காலமெலாங் கடந்தபொரு ளாய்ப்புரங்க ளூற்ற வர்க்குக் கால ஞகிச், சாலமுனி யந்தகனுக் கந்தகனு ய்க் கலைமிலையுந் தலைவ ஞகிச், சீலமுறு மங்கலநல் லியல்பினனுய்க் கதியருளுஞ் செல்வ ஞகிப், போலு தலில் சித்தவன நாயகநின் றிருவடிகள் போற்றி போற்றி. (சo)

உரைகடந்த சுயம்பாகி யுணர்பெரியர் வழிபடுத லுற்ற தேவாய், வரமெல்லாம் வேண்டுவார் வேண்டு முறை யீந்தருளும் வள்ள லாகித், தெரிசத்தி மயமா கி யாமயத்தைத் தீர்த்தருளுந் தீர்த்த ஞகிப், புரைய கற்றுஞ் சித்தவன நாயகநின் றிருவடிகள் போற்றி போற்றி. (சக)

எவலையுய ரொருத்தியெனப் பகுதியெனப் புரா ணியென வீறில் வித்தை, விவிதமென விசுத்தையெ ன விபுதர்தொழும் பதத்தியென வீறு மூன்று, நவை மலங்கள் கடந்தசிவ பரஞ்சுடருக் குருவமென நவில் வார் நல்லோ, ரவளாய பரமபத நிலையுடைய பராப ராநின் னடிகள் போற்றி. (சஉ)

உண்மையறி வானந்த வுருவினளாய்ப் பரவித்தை யுணருந் தானுய்த், தண்மையரு ணிருமலையாய்ப் பரமான்ம வடிவினளாய்ச் சரா சரங்கொ, ளெண்மையகல் சகமனைத்து மிடையீடின் ருகியெவ ளிலங்கி நின்ரு, ளண்மையரு மவளாய வளவில்சுக மெய்யாய் நின் னடிகள் போற்றி. (சங)

எண்ணரிய கற்பமெலா மெவளிருளின் பாசமுறு மெல்லா வைப்பும், பண்ணிடுதல் பரித்திடுதல் படுத்திடுத லிவைமூன்றும் பயின்று வேருய், வண்ணமிகும் பரமசிவ னருள்வடிவே தனக்குரிய வடிவ மாகி, யண்ணலொளி யாய்நின்ரு ளவளாய பரசிவைநின் னடிகள் போற்றி. (சச)

எவளுடைய விதியாகி யிருமைபெறு முலகமெலா மீண்ட லுற்ற, வெவளுடைய வெல்லையக லருளதனு லவையாவு மிலங்க லுற்ற, வெவளுடைய வாதாரந் தலைக்கொண்டே யவைமுழுது மிருக்க லுற்ற, வவளாகி யருள்பரம சிவையாய தேவிநின தடிகள் போற்றி. (சரு)

பெருமையளும் பேரிறைமை பெற்றவளு மனைத்தும்வல பெற்றி யாளு, மிருமையுறு முயிர்வகையைப் புரப்பவளு மன்னையுமா யியைந்து நின்ற, வொருமையுறு மெவடனக்கு முனிவரர்கள் வந்தனைக ளுளுற்று வாரோ, வருமையுறு மவளாகும் பரசிவையாந் தேவிநின தடிகள் போற்றி. (சகா)

என்றுமுறு மின்பநிலை யுடையவளே யடியவருக் கின்ப நல்கு, மொன்றருளை யுடையவளே கயிலாய நாதனெனு முயிர்க ணாதன், றன்றுணைவி யானவளே விழைந்தபொருட் பேறளிக்குந் தயாவி னாளே, வன் றகைய மனத்தடியேற் கமைந்தவருளேநின்னை வண ங்கா நின்றேன். (சஎ)

இந்தவகை கண்ணுவனு மிருந் தகையோன் பன்னி யொடு மிறைவி யோடு, முந்துறுநல் லிறையவனை முன்னின்று போற்றெடுத்து முதிர்ந்த வன்பு, சிந்தை நிறைந் திருகண்ணின் வழிவதென வானந்தத் தெண் ணீர் வார, வந்தமிலா மகிழ்வினொடு மாடுற்று நின்ற னனு லந்த வேலை. (சஅ)

வே று.

வேதநாயகன்வேதியர்நாயகன்
மாதினாயகன்மாதவர்நாயக
னாதிநாயகனாருயிர்நாயக
னேதுவானவனுள்ளமுவந்திட. (சகூ)

கண்ணுவப்பெயர்க்காதலநின்னுளத்
துண்ணிறைந்திடுமன்பினதுண்மையை
யெண்ணிமாமகிழ்வெய்தினமாலினித்
திண்ணமஞ்சலைசெப்புதுங்கேட்டிநீ. (ருo)

நற்றவச்செயனண்ணிநடாத்திநீ
யுற்றகாலையிலும்பர்தங்கோமகன்
பெற்றநாகம்பிழைத்திடுமென்றுளம்
பற்றியேநடுக்குற்றுப்பரிந்துபின். (ருக)

பாயும்வேங்கையின்கோலமும்பார்ப்பனத்
தூயகோலமுங்கொண்டுதுறும்புலி
யாயவந்தணற்பற்றுதலாதியா
மாயையாவையும்வல்லையியற்றினுன். (ருஉ)

அறனெனப்படுகின்றவனைத்தினு
மறனிலாமையொன்றேசெறிமன்னுயிர்க்
குறுதியாயதுமற்றதற்கொத்தது
பெறுவதில்லைபிறிதொருநன்னெறி. (ருங)

அந்தவண்ணமறிந்தனையாதலின்
முந்துவாளினுயிர்க்கொலைமுற்றிடா
திந்தநல்லறம்பேணினையின்னதால்
வந்ததொன்றிலைமாதவகுற்றமே. (ருச)

பனவன்றன்னுயிர்பாற்றிடல்பொய்மையே
யெனினுங்கண்களிற்கண்டனையின்னல்கூர்
துணிவினுக்கதுதோற்றுவாயாதலின்
முனையும்பாவமதாகிமுடிந்ததால். (ருரு)

அத்திறப்பழிவன்மையழிந்ததா
லித்தலந்தனையெய்துதலானுமிச்
சித்ததீர்த்தந்திளைத்திடலானுநம்
மெய்த்திருக்குறிமெச்சிடலானுமே. (ருசு)

மங்கலந்தனைவாய்ப்பவடைதிநின்
பங்கமில்லுளம்பற்றியநல்வர
மிங்குவேண்டுதியென்னக்கலைதிகழ்
திங்களஞ்சடைத்தேவருள்செய்யவே. (ருஎ)

கேட்டுமாதவன்கேழிலில்லாளொடுஞ்
சேட்டிளந்திமிற்செங்கண்விடைப்பெரு
நாட்டமூன்றுடைநாயகன்முன்றலை
கோட்டியேதொழுதின்னனகூறுவான். (ருஅ)

தேவதேவநினைத்தெரிசித்தலான்
மேவினேனிவண்மேவருமாண்பயன்
கூவிவேண்டுவதில்லையொர்கூறது
மோவினல்லருட்கோர்கடலொத்துளாய். (ருகூ)

ஆயினும்முலகுக்குயரப்பனுய்த்
தாயினோடுந்தயையுரிதற்பர
வேயுமாறுசில்லின்வரம்வேண்டினேன்
றேயுமாறுசுரந்தருள்செய்கவே. (சூ0)

மன்னுமங்கலமெற்குவழங்கிட
வன்னையாஞ்சிவைவேண்டலினன்னவ
ளுன்னுநித்தகல்யாணியென்றோர்பெயர்
தன்னையெய்துகசங்கரநாயக. (சூக)

இத்தலந்தனையெய்துறுமென்னிளை
யத்தநீங்கியகன்றதையாதலான்
மெய்த்திருப்பெயர்வீறுமிளைசைமா
பத்தனம்மெனப்பாடுகவெங்கணும். (சூஉ)

முந்தைநாளின்முறைப்படிநித்தலும்
வெந்துயர்ப்பவம்போக்கிவினைப்பகை
சிந்திடப்புரிதிவ்வியகங்கையி
னந்தலில்லதொர்நானஞ்செய்துற்றனன். (சூ௩)

அன்னகங்கையகன்கரைசார்ந்திட
முன்னுகாதலெழுகிலமுன்னவ
வின்னதோர்பொழுதேர்மிகுசேதுவி
னன்னர்யாத்திரைக்காகவேநண்ணினேன். (சு௪)

அங்குமெய்திடவார்வமெழுந்தில
தெங்கணுயகதீர்த்தங்களேத்திடுங்
கங்கைதன்னைக்கரைபொருசேதுவைத்
தங்கவிவ்வழித்தந்தருள்செய்தியால். (சு௫)

இந்தமெய்வரமீந்திடினிங்கினிச்
சிந்தைவேறிலையென்றவன்செப்பலு
மந்திவான்பிறையண்ணலவையெலாந்
தந்தனம்மெனச்சாற்றியருளினன். (சுசு)

தேவதேவதன்பின்னுயர்சித்தமா
வாவிமேற்றிசைவந்துபொருந்துறக்
கூவிச்சேதுவைக்கூறருங்கங்கையை
யாவியாவுறவங்கணிருத்தினன். (சுஎ)

ஓதுமன்னவையொண்கயமாகியே
மாதுபாகனருட்பெருவண்மையாற்
சேதுகங்கையெனப்படுதீர்த்தமாய்
மீதுசேர்வவெஞ்ஞான்றினுமேதையீர். (சுஅ)

அன்னதீர்த்தமதனிடைநானமே
தன்னைநேர்செபந்தானமிவையெலா
முன்னியாற்றிடினென்றேயனந்தமா
நன்னர்தந்திடுநற்றவவேதியீர். (சுக)

சேதுகங்கைவந்துற்றதிறத்தினைப்
போதநோக்கிப்புகழ்ந்துமகிழ்ந்துபின்
வேதவேதியன்வேதவிதிப்படி
மோதசங்கற்பமுன்னுறமூழ்கினன். (எo)

எண்ணருந்தடமூழ்கியெழுந்திடுங்
கண்ணுவன்றனைக்கண்ணுதல்கண்ணுறீஇப்
பண்ணிறைந்தபயின்மறைவாயினு
லுண்ணிறைந்தவருளொடுமோதுறும். (எக)

அன்பகண்ணுவகேட்டியறைகுது
மின்பிறங்கிடைமெல்லியலாளொடும்
பொன்பயின்றவிப்புண்ணியவைப்புறு
மின்பமாதலத்தென்றுமமர்தியால். (எஉ)

பத்திமார்க்கம்பதிந்துணருள்ளொளி
மெத்துமெம்மியலன்புருமேவியே
வைத்தவுண்மைதெரிந்துமகிழ்ந்துநன்
முத்தனுகிமுதத்தொடுவாழுதி. (எங)

ஒன்றையுற்றிடலுற்றிடலின்மைதா
னென்றிசைக்குமிரண்டினுமோர்படி
சென்றுசாருந்துவந்துவச்செல்லலை
யன்றியேயகத்தவ்வியமின்றியே. (எச)

ஆகம்பாவுமுயிர்க்குயிராம்பொரு
ளேகம்பாவுறுநாமெனவெண்ணியே
சோகம்பாவனைத்தொன்மையொடுந்தொடர்
மோகம்பாவுதலின்றிமுயலுதி. (எரு)

புண்ணியப்பதிபோற்றிநின்ளூரறம்
பண்ணினன்னதுகோடிபயன்றருங்
கண்ணில்பாவமுங்காட்டியவாறுபோ
லெண்ணுங்கோடிமடங்குறுமென்பவே. (எசு)

ஆதலின்வரகங்கையகன்கரை
மீதுநீபெறும்வெம்பவங்கோடியாப்
போதரும்மதுபொக்கமதாயினு
மோதரும்பிறப்புண்ணப்படுவதே. (எஎ)

இத்நவந்தனிலென்றுமிருந்துவான்
சித்ததீர்த்தமுஞ்சேதுநற்கங்கையு
மொத்துமூழ்கியுமையையுநம்மையும்
பத்திபண்ணிப்படுத்தியப்பாவமே. (எஅ)

இம்மையாள்வினையால்வருமின்பமும்
வெம்மைசார்தருதுன்பமுமேவுறீஇக்
கொம்மையம்புலக்கொற்றமகன்றுயர்
செம்மையாற்றொலைவித்திருசெய்கையும். (எகூ)

பொத்துமும்மலப்பொய்யுடல்பொன்றுநா
ளுய்த்துநின்றிடுமொண்பொறியாதிய
தத்தமார்கரணங்களிற்றுமுற
வைத்துபாதிவயந்தனைநீங்கியே.' (அ0)

எங்குமாகியியைந்தமெய்ப்போதமாந்
துங்கமேனிதொடர்ந்தனைத்திற்குநல்
லங்கரித்திறமாயழிவற்றுயர்
நங்கதிப்படுநன்னிலைநண்ணுதி. (அக)

பிரமன்மான்முதற்பேசருந்தேவரு
மருவிவாழ்ந்திடமாதவமற்றிரண்
டரியவின்பவகண்டவுருவினை
யுருகுமுள்ளூறுத்தொப்பறவர்ழுதி. (அஉ)

என்னவேயருளீந்துமகேசனு
நன்னிலைப்படுகைலைநன்னயகன்
மன்னுநித்தியமங்கலைதன்னொடு
தன்னுருக்கரந்துற்றனன்றுனரோ. (அங)

நம்மையாளுடைநாயகனுயகி
தம்முருக்கரந்தெய்தலுந்தாயதன்
விம்மிதந்துயரன்புமிகுங்களி
செம்மையாளொடுஞ்சேர்ந்துநின்றுனரோ. (அச)

வே று.

ஓதுமந்தவுயர்முனி
சேதுகங்கைசெறிகனா
மீதுபன்னம்வேய்ந்திடுங்
கோதில்சாலைகோலியே. (அரு)

அங்குமேவியன்றுதொட்
டெங்கணுதனிணையடி
தங்குமன்பின்சால்பொடு
பொங்குநோன்பூண்டரோ. (அசு)

துணைகொள்வைகறேறுமவ்
வணைகொள்கங்கையாடியே
யிணைகொளாதவெழின்மறைப்
பணிகொள்கோயிற்பாலுற. (அஎ)

பன்னுமாதிபகவனை
மின்னுசோதிமெய்யனை
மன்னுநித்தமங்கலை
தன்னுயர்ந்ததலைவனை. (அஅ)

பூசைசெய்துபுண்ணியன்
மாசில்போற்றல்வலமுறல்
கூசிநின்றுகும்பிட
லாசிலின்னவாற்றியே. (அகூ)

சுவைகளாறுதொடர்வுறு
மவிநிவேதமாக்கியே
சிவனதன்பர்சீருள
முவகைபொங்கவூட்டியே. (கூ0)

தானுமுண்டுதகவொடு
மேனயாவுமெய்ச்சிவ
மேனியென்னவீறியங்
கூனநீங்கியுற்றனன். (கூக)

காதலின்னகாதையைக்
கோதிலாதகுறுமுனி
தீதிலோர்கள்செவியுற
வோதிவேறென்றோதுமே. (கூஉ)

கண்ணுவமுனி பேறுபெற்றபடல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - அகூக.

---

## பூம்புகார்ப்படலம்.

திருந்ததி சயத்த தேவர் செவிக்குநல் லுணவா யுள்ள, திருந்தனிச் சிவன்பா லன்பை யீந்திடுந் தகைய தேற்றம், பொருந்துநல் வணிகர் நாம்பல் போக்கிய சரிதஞ் சொல்வா, மருந்தவ முனிவீர் நீவி ரகமொருப் படுத்துக் கேண்மின். (க)

பாவிரி திருவெண் காட்டுப் பதியினுக் கணித்தாத் தெய்வக், காவிரி கடலிற் சென்று கலந்திடு முகத்தே கான்கொள், பூவிரி பொழில்சூழ் கின்ற பூம்புகார் பொலிந்த தந்தத், தூவிரி நகரின் சால்பு சொற்றிடுந் தகைய தாமோ. (உ)

அருமக மறையோ ரெங்கு மரசுரி முறையோ ரெங்குந், திரவிய வணிக ரெங்குந் திரிபகல் களம ரெங்கும், பிரமமா ரறத்தா ரெங்கும் பெருகுமில் லறத்தா ரெங்கும், பரவருந் துறவோ ரெங்கும் பரவுமன் பதைக ளெங்கும். (௩)

மலைவிலா வுள்ளா ரெங்கு மலைவிலா வுள்ளா ரெங்கு, மிலைபயில் வேலா ரெங்கு மிலைபயில் வேலா ரெங்கு, மலைவரும் பொறியா ரெங்கு மலைவரும் பொறியா ரெங்குங், கலைமதி முகத்தா ரெங்குங் கலைமதி முகத்தா ரெங்கும். (ச)

நல்குவதானமெங்குநலந்தருவிதானமெங்கு
மல்குவமானமெங்குமலிகுவவிமானமெங்கும்

புல்குவஞானமெங்கும்பொலிவவிஞ்ஞானமெங்கும்
பல்குவகானமெங்கும்பலமலர்க்கானமெங்கும். (ரு)

வழங்குமெல் வாத மெங்கு மாணுநூல் வாத மெங்கு, முழங்குவ சங்க மெங்கு முனிவரர் சங்க மெங்கு, மொழுங்குறு விபணி யெங்கு மொருவுரு விபணி யெங்குஞ், செழுங்கவுட் கயங்க ளெங்குந் தெளிந்தநீர்க் கயங்க ளெங்கும். (சா)

கருதுகந் துகங்க ளெங்குங் கடுகுகந் துகங்க ளெங்கும், வருசயந் தனங்க ளெங்கும் வண்சயந் தனங்க ளெங்கும், திருநிகே தனங்க ளெங்குந் தெள்ளுநிகே தனங்க ளெங்கும், பரவுசந் தனங்க ளெங்கும் பழியில்சந் தனங்க ளெங்கும். (எ)

மன்மத னுட லெங்கு மாதர்த மாட லெங்கு, மென்மைசேர் சுகங்க ளெங்கு மேவரு சுகங்க ளெங்கும், பன்மைமங் கலங்க ளெங்கும் படருமங் கலங்க ளெங்கு, நன்மைசால் பூதி யெங்கு நவிலரும் பூதி யெங்கும். (அ)

விருந்துப சரிக்கு மோசை விழவினைப் புரியு மோசை, மருந்துறழ் கீத வோசை மந்திர வேத வோசை, திருந்துபல் லியங்க ளோசை திரைக்கட லோசை தன்னை, யருந்திமே லெழுந்து கேள்விக் கருவிருந் தாக வோங்கும். (கூ)

சொன்னிகழ் பொய்யே வஞ்சந் துயர்தரு மழுக்காறுதிக், கொன்னுறு குணங்க ளாய கோதினி லிய

ல்வோர் நாளுந், தன்னிடைப் புகாரோ யாய தன்மை யி னுலே போலு, மந்நகர் தனக்கு வாய்ப்ப வமைந் தது புகாரொன் ருேர்பேர். (க0)

மலரய னுதி யாய வானவர் தமையு மெல்லா, வுல கையும் பெற்ற தொன்மை யொப்பிலா மருத வா ணர், நிலவுறு மகன்மை யாக நின்றன ரடிமை கொ ண்ட, குலமிகு திருவெண் காடர் குலவிய பதியு மஃதே. (கக)

ஓதுபல்வளத்ததாகியுற்றவப்பதியின்கண்ணே
யேதமின்றிருந்துவாழ்தலியைந்திடுமரபுதம்முண்
மீதுசேர்மிகுதியாகிமேவியதியாதோவென்னிற்
றீதறுகுணத்தின்மிக்கதேசிகர்மரபாமன்றே. (க௨)

அத்தகு சிறப்பி னேங்கு மரும்பெறன் மரபு வாய் ந்தோர், மெய்த்தன பதியோ வொன்பான் மேவிய நிதிக ளுள்ளான், வைத்திடு நிதிக ளெண்ணில் வகை யுளோம் யாங்க ளென்னச், சித்தமீ தூர நின்ற செ ருக்கொடும் வாழு கின்ருேர். (கங)

சிவபெரு மானே மேலாத் தெளிந்தநல் லுள்ள மு ள்ளோர், சிவபெரு மானுக் கென்றுஞ் செய்வழி பா டு பூண்டோர், சிவபெரு மானுக் கன்பர் திருத்தொ ண்டு புரியு நீரார், சிவபெரு மானுக் கேற்ற சீரறஞ் சிறக்கச் செய்வோர். (கச)

கொடைபொறை யடக்கம் வாய்மை குறைவிலா விரக்க மாதி, வடுவறு குணங்கள் யாவும் வாழ்வதற்

குறையு ளானோர், படவரா வணியுஞ் சோதி பகர்ந் தரு ளாத்த வாய்மைக், கிடருரு வண்ணந் தங்கட் கேற்றநல் லொழுக்க நின்றோர். (கரு)

சீரொடுமினையரன்னதிருநகர்மேவியாண்டு
மேரிசைபரவவாழ்வுற்றிருந்திடுங்காலத்தூழின்
வீரமததனுற்றங்கண்மெய்யறம்விடுத்தார்தேரிற்
பேருருத்தொல்லையூழிற்பெருவலியாவையுள்ள(கசு)

பொருளினை யாதி யான பொலிவினுக் கெல்லாந் தானே, தெருளுறு மேது வாகிச் சிறந்தநல் லறத் தை விட்டு, மருளுடல் வளர்த்த லாலே வறுமை நோய் துயர முற்ற, வருளுய ரறத்தை முன்னு வறை ந்தன ரிதனு லன்றே. (களஎ)

தனமெலா மிழந்தார் மல்லற் றுனிய மிழந்தார் சேதப், புனல்வய லிழந்தார் கற்றுப் பொலிநிரை யிழ ந்தார் புன்கட், டுனியினை யடைந்தார் கள்வர் தொட ரவும் பெற்று ரீசன், பனிமலர்ப் பாதம் பற்றுர் பழ ங்கணுக் கிதோர் சான்றும். (கஅ)

மல்லன்மா வளங்க ளெல்லா மடிதலும் வருந்தி மாழ்கி, யொல்லென வனைவோர் தாமு மோரிடத் தொருங்கு கூடிப், புல்லுற வெங்கட் கிதென் பொரு ந்திய தென்றே யாய்வா, ரல்லலென் பதனை முன்ன ரறிந்திடா வணிக மாக்கள். (ககூ)

ஐயகோ தனமும் பைங்கூ ழாக்கமுந் தொறுவு மாண்ட, வுய்யுமா வாணி கப்பே ெறுழிந்தன யாது

யாது, செய்யினும் பயனென் றில்லை சிறிதுவீட் டுள துஞ் சோரர், கையகப் படுத்துக் கொண்டார் கடிய வித் துயர்க்கென் செய்வேம். (உ0)

பசியினுற் சிறுவர் வாடிப் பரிவொடுந் தாயர்ப் பார்த்து, மிசைமிசை யென்ன விம்மி வேண்டுவ ரினிமே லிந்த, விசைநகர் கணப்போ தேனு மிருந்திடலாகா தெந்தத், திசையிலே யெனினுஞ் சென்று திரவியந் தேடி வாழ்வாம். (உக)

ஈதியாஞ்செய்தற்பாலதென்றிளங்கோக்கள்யாரு
மோதியேயுறுதியெய்தியுற்றவப்பதியைநீங்கி
யாதுலர்க்கன்னையாகுமங்கணரருட்கணேக்காற்
றீதகல்பத்திசேரச்சேணுயர்சையஞ்சேர்ந்தார்.(உஉ)

சையமால் வரையிற் போந்த தகவின ரந்த வெற்பிற், பெய்யுறு நீத்த மான பெருமைசால் பொன்னி தன்னின், மெய்யுற மூழ்கி யந்த விபனதிக் கரையினெங்குஞ், செய்யகேத் திரங்கள் சென்று சிவனருள் சிரமேற் கொண்டே. (உ௩)

விரைந்துவந் துயர்மா தேவி மெய்த்திருப் பெயரா ளோடு, மிருந்தருள் சீகண் டேச னிணையடி தரிசித் தேகித், திருந்திய கபிலை பூசை தெரிந்தருள் கபிலை யம்மைக், கருந்துணை கபிலே சான னடிதரி சித்துப் போற்றி. (உச)

சங்கமமுகத்திற்சார்ந்துசத்திதன்றவத்தால்வந்த
பங்கமில்பராசரப்பேர்படைத்திடுமுனிவன்பூசைக்

கங்குவந்தருளியாண்டேயாதிகேசவனோடுற்ற
துங்கவேதாம்பிகைக்குத்துணைவனைவழிபாடாற்றி. ()

கண்ணனும் விசயன் றானுங் கருதிமுன் னருச்சித் திட்ட, புண்ணிய வசல தீபப் புங்கவன் படிவம் போ ற்றித், திண்ணிய வாலி முன்னர்ச் செய்ததோர் பூசை கொண்டே, யண்ணிய வருளோ டுற்ற வகத்தியேச் சுரனை யேத்தி. (உசு)

பேதமிலன்பனுனபிரகலாதனன்பூசித்த
வேத்நாராயணப்பேர்விண்ணவன்றன்னைவாழ்த்தித்
தீதுறுப்புகலுற்றோர்க்குத்திருவுளமிரங்காநின்ற
வோதுசீநிகேதமேவுமொருவனைப்பணிதல்செய்யா.

தொழுதகை யிராமன் போற்றுஞ் சோதிநா யக னைப் போற்றி, வழுவிலாக் கதம்ப கான வள்ளலை வழுத்தி யன்பின், செழுமை கொள் வலையிற் சாருந் திருப்பிர யாணநாதன், பழவடி பணிந்து நீலிப் பழு வமார் பகவற் றாழ்ந்து. (உஅ)

அரங்கமா நகரம் வாழு மண்ணலை யமுதத் தீம் பாற், றரங்கமா கடலை நேருந் தடவுவெண் மலையி லுள்ள, வரங்குலாம் புருட வேந்தை வான்பொரு ணல்கும் வண்மை, நெருங்குபுண் டரிகக் கண்ணார் நெடியனைப் பரவ லாற்றி. (உகூ)

அட்டரு வானைக் காவி லண்டங்க ளவைக்கு மன்னை, பெட்டுறுஞ் சம்பு கேசப் பெரும்பிரான் றன்னை வாழ்த்தி, மட்டுவார் குழலி யோடு மகிழ்சி

ராப் பள்ளி மேவித், தட்டிலா பத்தைத் தீர்க்குந் தாயுமா னவரைத் தாழ்ந்து. (௩௦)

அப்பதி யகன்று பொன்னி யகன்கரை வழியாக் கீழ்பால், வைப்புறு திசையிற் போந்து மருங்குறு திருமால் கோயி, லொப்பிலா வரனுர் கோயி லுற்று று தீர்த்த மாடி, மெய்ப்பரி வோடும் போற்றி மெலி வினை யகங்கொண் டேகி. (௩௧)

திருவிடை மருதூ ரெய்திச் சிறப்பெலா மளிக்க வல்ல, முரிவில்கல் யாண தீர்த்த மூழ்கிநே ரியர்கள் பூசைக், குருகுமா விலிங்க மாகி யுயர்வர குணப்பே ர் மாறன், பிரமமாப் பழிதீர்த் தாண்ட பெறலரும் பிரானை யேத்தி. (௩௨)

மாயிருஞ் சிவஞா னத்தை வள்ளன்மந் திரமாச் செய்ய, வாயன்மெய் புகுந்தோர்க் கீந்த வாவடு து றையை வாழ்த்தி, மூயமுக் கோடி யான முனிவரர் பத்தி செய்த, தேயமா நின்ற சீர்த்தித் திரிகோடி காவைப் போற்றி. (௩௩)

போன்னியி னடுவு தன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றுந், துன்னிய துருத்தி யென்னுந் தொல்பதி தொழுது வெற்பின், கன்னியாங் கவுரி யையன் கழ லிணை மயூர மாகி, யுன்னியே வழிபா டாற்று முயர் பதி வணங்கி நீங்கி. (௩௪)

புள்ளிருக் குயர்வே ளூராம் பொற்பதி போற்றி யம்மை, வள்ளமேன் முலைப்பா லேந்தி மைந்தனுக்

கூட்ட வப்ப, னுள்ளூறுங் கருணை பூத்த வுயர்தல மிறைஞ்சல் செய்து, தெள்ளுகட் டழகு வாய்ந்த திரிபுராம் பிகையைத் தாழ்ந்து. (௩௫)

புளினமும் பொழிலும் பொங்கப் புள்ளெலா மலம்ப வாழ்ந்த, தெளிதரு சுழிநீர் மீது சேலினங் துள்ள வார்த்துக், களிகொள்கந் தருவர் தேவர் கலந்துளமுவப்பச் செல்லுங், கொளவரு நலத்த தான கொள்ளிட நதியைக் கண்டார். (௩௬)

கண்டுமெய் விதியாற் றோய்ந்து கண்ணுத லருணின் றுய்ப்பப், புண்டரி காக்கன் முன்னோர் போற்றிட வண்டப் புத்தேண், மண்டுளப் புண்ட ரீக மாபுரம் வைகுங் தேவைத், தொண்டுளப் புண்ட ரீகந் தொடர்வுறத் தியானஞ் செய்து. (௩௭)

கொள்ளிட நதியை நீங்கிக் குலப்பெரு வணிகரெல்லா, முள்ளுறு மிளைப்பி னுலே யுயங்கியே மெல்லச் சென்று, தெள்ளுறு மறைக ளேத்துங் திருப்புலி யூர்வங் தெய்தி, வெள்ளமார் சிவநற் கங்கை விரிபுனல் குடைந்து போந்து. (௩௮)

தெண்ணிலா வெறிக்குஞ் சென்னித் தேவுசிற் றம்ப லத்தே, பண்ணுறு பரமா னந்த பரநடந் தரிசித்தேகித், தண்ணுறும் பசிநீர்த் தாகந் தாக்கிட வுடைந்து சாம்பி, யுண்ணுற வன்னந் தேடி யொருங்குற வீதி சென்றார். (௩௯)

வே று.

பொன்னம் பலமார் பெரும்பற்றப் புலியூ ரென்னு மந்நகர், தன்னி லுறையு மகோரசிவ வாசாரியனுந் தனி மறையோன், முன்னே மறைகண் முழுதுணர்ந் தோன் முன்னு மகமும் புறமுமெனத், துன்னு கரண மடக்குற்றோன் றூன்மை நிலையா மொழுக்க முளோன். (ச0)

சிவனு ரடிகொள் சிந்தையினன் சிவனூ லெல்லாந் தேர்ந்துணர்ந்து, தவமா நெறியி னின்றிடுவோன் சௌத மார்த்த நிலைவல்லோன், நவமார் பிரம சரிய த்தோ னவையில் சிவனும் பாவனையோ, னெவரே யெனினு மிரங்குறுவோன் பொன்க லோடென் றெண்ணுறுவோன். (சக)

இந்த வகையிற் றேசுதிக ழிறைமை யுடைய வாசானே, மைந்தர் மனையார் தம்மோடும் வாட்டும் பசியா லுடல்சோர்ந்து, சிந்தை மாழ்கும் வணிக ரெல்லாஞ் சேர்ந்து முன்னின் றெம்மானே, வெந்த வழ னேர் கொடும்பசியால் வெதும்பி வந்தோம் யாமென்றூர். (சஉ)

என்ற மொழிகேட் டவ்வாசா னிரங்கி யவருக் கருள்கூர்ந்து, தன்றன் சீடர் தமைநோக்கித் தகைசா லரிசி பருப்புமுதற், றுன்றும் பாகப் பொருள் கடமைத் தொடரக் கொணராப் பாகஞ்செய், தொன்றும் பாதிக் கணப்பொழுதி னுதவு மன்ன மிவர்க் கென்றுன். (சங)

அந்த வாக்கு மிசைக்கொண்டே யவரு மகிழ்வி னவைசெய்ய, முந்தும் பசிநோய் தீர்ந்திடவே மூன்ரு மரபின் வழிவந்தோர், புந்தி மகிழ வனைவோரும் பொலிவோ டன்ன மருந்தியபின், சிந்தை தெளிந்து தேசிகனைத் திருந்தத் தொழுது முன்னின்றே. (சச)

பட்டினந்தாம் வைகியதும் பரமன் பத்தி விட்ட துவும், கட்ட மதனுல் வந்ததுவுங் கருது மிவையே முதலாகச், செட்டி மாக்க டங்கிழ்வு சேர வுரைத் து வேண்டிடலு, மட்டில் கருணைக் குரவனினி மா ழ்க லொழிமி னெனவருளி. (சரு)

பழிசெய் வறுமை வெந்துயர்தீர்ப் பதுவாய்ப் பாவ மறுப்பதுவா, யொழிவில் சிவனுர் திருவருளுக் கே துவாகி யுயர்மனுக்கட், கழிவி லரசா யின்புருவா யமருந் திருவைந் தெழுத்தீந்து, கழியு மலநீக் கமு மெண்ணுங் கருத்து முதவு நீறுதவி. (சசு)

இவைக ணீவிர் கரங்கொள்ளா வேற்ற செய்மி னெனவோதி, நவையி றனமே முதலசில நல்கி யவ ருக் கதன்பின்ன, ருவமை யகலுஞ் சூக்குமமா முய ர்ந்த சைவ தருமமவை, சிவமென் பொருளே பெரு கவுளந் தெருள வருளி ஞேடருளி. (சஎ)

முன்பு போல நுங்களது முதுமா நகர மெய்தி மிகு, மின்ப மோடு வாழ்திரென வியம்ப லோடு மவ ரெல்லா, மன்பி னேடு மவைகேட்டங் கானு மகிழ் வுக் கடன்மூழ்கிப், பின்பு தமக்கு வாழ்வாய பெரு மை தந்த தேசிகனை. (சஅ)

மீட்டு மீட்டும் வலஞ்செய்து மெய்யா ரொட்டு விய னுறுப்புங், கூட்டி வணங்கி யெங்கள் பெருங் குறைகள்யாவுந் தவிர்த்தமையா, லாட்டுந் தேவு நீயேயென் றறைந்து விடைபெற் றவணீங்கிப், பாட்டிற் கிசைதம் பதிசார்ந்தார் பரிவி னீங்கு மவ்வணிகர். ()

ஆசானீந்த பொருளாலே யமையும் பலவாம் வாணிகங்கள், கூசா தியற்றி வைகிடலுங் குலவைந் தெழுத்தின் வியனாலுந், தேசார் நீற்றி னுயர்வாலுந் திகழ்முற் பக்கப் பான்மதியின், மாசா ராத செல்வமெலாம் வைக ரேறும் வளர்வுற்ற. (ருo)

பசுவி னிரைக ணிறைவுற்ற பயிரின் வகைகள் பயன்மிக்க, நசைகொள் பதும ராகமுத லவமா மணியு மாடகமுன், னிசையு நான்கு பொன்வகையும் வெள்ளி முதலா வேனையவு, மசைவில் கோசத் தடங்குற்ற வடிமை யிருமை யளவற்ற. (ருக)

தூங்கு கரமாப் பொலிந்தனவே துரக நெடுமா மலிந்தனவே, யோங்கு சிவிகை தக்கனவே யுயருஞ் சீர்கண் மிக்கனவே, பாங்கி னேழெண் மாடநிலைப் பவனம் பலவு மான்மனேகோ, லாங்க தன்றே னிதிக் கிழவ னகமோ வென்ன மன்னினவே. (ருஉ)

நிரைசெய் குன்று நீண்மறுகு நிலவு குலவு மரமியமும், வரைசெய் சிகரி வான்மதிலு மற்று முளவும் வயங்கினவே, கரைசெ யின்ன சிறப்புலவுங் கடிமா நகர மளகையினும், விரைசெய் தாருப் பதிதனினும் விளங்கி மேர்பெற் றோங்கியதே. (ருங)

பரம சிவனர் திருவடியிற் பத்தி விளைவின் வணிக ரொலாம், பரம சிவனர் திருவடியைப் பழுதி லுளத் திற் றரிப்பாராய்ப், பரம சிவனர் திருவடிக்குப் பணி கள் பண்பிற் புரிவாராய்ப், பரம சிவனர் திருவடி சொல் பலபுராணங் கேட்பவராய். (ருச)

வேதா கமங்கள் விதியொழுகு மெய்யா மறிவி னந் தணருக், கோதா நின்ற வோதனமோ டொலிய லா வே பூமிமுதற், றீதா காத பொருளெல்லாஞ் சிறக்க த் தானஞ் செய்வாராய், கோதா மியலி றிரிகரணங் கொண்டு பூசை முயல்வாராய். (ருரு)

தென்சார் புலத்தார் தெய்வம்விருந் தொக்க ருமா ச் செப்பியிடு, மின்சா ரைந்து புலத்தாறு விழைவி னேம்புந் தலையினராய்ப், பின்சார் துணைவர் பிள்ளை யொடு பிள்ளை மனைமுற் குழுவினராய்ப், பொன்சார் தனதன் புலங்கொள்ளின் வெள்கும் போகப் பொலி வினராய். (ருசு)

உள்ள மோடு முடலமுமே யுவகை பூரிப் புடைய வராய்த், தள்ளு நோயிற் றளர்விலராய்த் தாபமே துந் தமக்கிலராய்த், தெள்ளுஞ் சீர்த்தி தனைவிண் மேற் றெரிவை மார்க ணனிபாடக், கொள்ளும் வா ழ்வின் சீரினராய்க் குலவி னர்கண் மிகமன்னே. ()

இன்னோர் செல்வ மீதென்னே வென்னே வென்ன விரும்போகப், பொன்னே ருலகப் புங்கவரும் புகழ நாய்கர் நல் லாசான், றன்னே ரருளிற் றியங்கினராற்

றவத்தீர் சிவனு ருருவெய்தி, மன்னோர் குருவி னருள் சிறிது வாய்க்கின் யாதோ மற்றரிதே. (ருஅ)

பூம்புகார்ப்படல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கூகக.

---

## அகோரசிவாசாரியப்படலம்.

என்னவியம்பியவேலையின்வேலையினிகல்போக்கி
முன்னுறமாந்தியமுத்தமிழ்மாமுனிமுனிவேந்த
ரன்னதுகேட்டுளமற்புதமுற்றனராகிப்பின்
றன்னிகர்மாதவனுக்கிவைதாமுறைதருகிற்பார். (க)

அருடரு மாமுனி வேந்தநின் வாய்மொழி யமுதத்தைப், பொருடரு நஞ்செவி யாங்கல மீது புகப்பெய்துந், தெருடரு நெஞ்சு தெவிட்டில முற்பகர் சிவவாசான், மருடரு நாயகர் துயர்த்தெறு மாட்சி மதிக்கொண்ணு. (உ)

அத்தகு தேசிகன் யார்சுதன் மேன்மை யடைந்ததுதா, னெத்தகை யாது பொருட்டினி னீண்ட விசைத் தொன்மை, யுத்தம மெய்க்குரு வாயது சைவ வொழுக்கத்தின், வைத்திடு மெய்யர் தமக்கு முதன்மைகொண் மாண்பென்னே. (ந)

இங்குவினவியபான்மைகள்யாவையுமெங்கட்குப்
பங்கமினற்றவன்மையகத்தியபரபோதா

வங்கவனம்புவிதோன்றியவண்ணமடிக்கொண்டே
செங்கையினெல்லியினேதுதியென்றுதெரித்துற்ருர்

அவ்வுரைகேட்டரிமெய்யினையங்கணருமெய்யாஞ்
செவ்வுருவாக்கியசெந்தமிழந்தணன்செம்மைத்தா
முய்வியல்சாலுமுயர்ச்சியிருள்ளமொருங்காகி
யிவ்வுரைகேண்மினெனத்தவருக்குரையீகுற்ருன். ()

வேறு.

போகமாருருக்கொடுபோகநல்கியும்
வேகமாருருக்கொடுவினைகள்வீட்டியும்
யோகமாருருக்கொடுயோகமாக்கியும்
பாகமாருருவுயிர்க்கருளும்பண்ணவன். (சு)

இன்னுயிர்த்துணையெனவிருந்துமன்னுயிர்க்
கன்னைபாவருளுறுமன்னைதன்னெடு
முன்னமோர்வைகலின்முறைகொள்கைலையிற்
றன்னரியணையினுந்தணந்துபோந்தனன். (எ)

போந்தருள்புண்ணியன்பொருப்பின்மீமிசை
யாய்ந்திடுபல்வகைமாக்களற்புதம்
வாய்ந்திடுங்குவடுகள்வாழநோக்கினை
யீந்தருள்கின்றதோரினையவெல்லைவாய். (அ)

அகவிநின்றென்றுமேயாடுமஞ்ஞைக
டகைபெறமொழிதருசுகங்கள்சாரிகை
பிகமுதற்புட்குலம்பிறங்கும்பொற்பது
வகைமிகுந்தாதுசேர்ந்தொளிருமாண்டது. (கூ)

நிறந்தருபொன்னியற்கமலநீடியே
வறந்திடலென்றுமில்வாவியேயசும்
புறைந்தநீர்க்கயந்தலையுலவுமொள்ளிது
செறிந்திடுதேனுகர்தேன்கொள்சீரது. (க0)

கானுறுகற்பகக்கானுங்காமநற்
றேனுவினிரைகளுஞ்சிறந்துசேர்குவ
தானியமாறினுமலரும்போதளாய்
வானிமிர்சிறுவளியசையுமாணது. (கக)

பூண்டகுசிந்தைசான்மணிகள்பொற்பது
மாண்டகுமங்கலவடிவமாயது
காண்டொறுங்காண்டொறுங்கண்களோடுள
மீண்டிடாவகைமையின்மேவச்செய்வது. (கஉ)

உரைதருஞ்சிறப்பினையுடையதாயுய
ரரதனமயமதாயமருமோர்குவ
டிரதநன்மொழியொடுமெம்மையாளுடை
வரதனங்கெய்தியம்மாதைநோக்குறா. (கங)

மேம்படுவாமமார்மங்கைமேதக
வோம்பியபொம்மலினுயர்வதாய்மனக்
காம்பெருமகிழ்தருமிந்தவுற்புதத்
தேம்பயில்கோட்டினைத்தெரிந்துகாண்டிநீ. (கச)

என்னவேயெம்பெருமாட்டிக்கெம்பிரான்
முன்னுறுமணிமயமுடியைக்காட்டியவ்
வன்னமோடருள்விளையாடலாற்றுபு
மன்னெடும்பொழுதவட்பயிலலுற்றுழி. (கரு)

பொன்றிகழ்புரிசடைப்புனிதநாயகன்
றென்றிசைசிறந்திடுமகோரச்சீர்முகத்
தொன்றொருவேர்வையின்றிவலையுற்றதா
லன்றதுதனைமுழுதருளுநாயகி. (கசு)

திருக்கையின்வாங்கியேதிகழுங்கங்கையிற்
பொருக்கெனவிடுத்தருள்செய்யப்பொற்புறு
முருக்கிளர்மதலையாயுதித்ததாலஃ
திருக்கினெண்பொருளனுமேகனுணையால். (கஎ)

வேறு.

இங்கிதன் முன்ன ராக வெம்பிரான் முடிவோர் காதிற், றுங்கமார் குடிலை பேசுந் தொல்பதிக் கணித்தாவுற்ற, கங்கைமா நதிக்கு மேல்பாற் கரையினிற் கஞுலா நின்ற, வங்கொராச் சிரமத் துற்றோ னங்கணரருள்வாய்ந் துள்ளோன். (கஅ)

சிவதரு மங்க ளாய்ந்தோன் றிருந்துநற் பொருள்கடேர்ந்தொ, னவமில்கோ விந்த சாமி நாமமார் மறையோர் வேந்த, னுவமையி லொளியான் மிக்கோ னுயர்மக விலாமை யாலே, தவமுழந் தனனுற் பன்னுடன்மனை சுசீலை யோடும். (ககூ)

இவ்வகை தவஞ்செய் துற்றோ னேழ்பரித் தேரோன் முந்நீர்ப், பவ்வமே லெழுமு னன்னீர் படிந்திடப் பன்னி யோடு, மெவ்வம தகல மாற்றி யிகபர முதவா நின்ற, தெய்வத கங்கை யென்னுந் திருநதி சேர்ந்தான் மன்னோ. (உ0)

அப்பொழு ததன்கூ லத்தி லணிகெழும் புளின மொன்றின், மைப்பெரு மிடற்றுப் புத்தேள் வதனம் வந் துதித்த மைந்தன், மெய்ப்படுஞ் சுதைகொள் சோம விம்பநேர் முகமு மீன, மொப்புறும் விழியுங் குந்த முறழ்ந்திடு நகையின் பொற்பும். (உக)

தொண்டையங் கனிச்செவ் வாயுஞ் சுரிமுகக் களமுங் கஞ்சத், தண்டிளங் தோளுஞ் சாம்பூ நதமெனத் தயங்கு மெய்யுங், கொண்டுகால் விரல்வாய் வைத்துக் குரனல்யா ழினிமை வெல்லும், பண்டர வாய் விட் டாரப் பன்முறை யழுதுற் றுனல். (உஉ)

ஆங்குவந் தடைந்த வந்த வந்தண னுளமுங் கண்ணும், வாங்கிள மதலை தன்னை மகிழ்ந்துகண் டீதென் கொல்லென், றேங்கதி சயத்த னாகி யுயிர்த்துணை யாகித் தன்னோர், பாங்குற நின்ற தொன்மைப் பன்னிக்குக் காட்டி னானே. (உங)

காட்டலுங் கந்த வேள்போற் கட்டழ குடைய சேயை, வீட்டருந் தவமீ தூர மெய்ப்பதி யோடுஞ் செய்தா, ணட்டம தாரக் கண்டா ணனுகினு ளெடுத்தாள் புல்லி, மாட்டுறு மடிமேல் வைத்தாள் வதனம்பன் முறையும் பார்த்தாள். (உச)

உச்சியை மோந்தாண் மெய்யி னுற்றதோர் பூழி தன்னைக், கச்சணி கொங்கை யாடன் கலையினுற் றுடைத்தாள் பின்னர்ப், பச்சிளங் குதலைப் பிள்ளை பசியினுற் கலுழ்த னோக்கி, யிச்செல லகலு மாறு யாதென வல்லங் கூர்ந்தாள். (உரு)

மதலைபாற் ருன்வைத் துள்ள மறுவறு மன்பி
னாலே, பதலைபோற் பருத்த கொங்கை பால்சுரந்
திட்ட வாற்ருற், றிதலைசேர் மெய்யா ளுள்ளந் திகழ்
ந்துவிம் மிதத்த ளாகிக், குதலைசேர் மகவு கொள்ளக்
குருக்கட்பா லருத்தி னாளே. (உசு)

பாலினையருந்தாநின்றபாலனுக்குவந்துநல்குஞ்
சேலினைநேருங்கண்ணாட்கியம்புவான்றேர்ந்தமெய்ய
னூலினைநேரக்கட்டாயாரதுசேயோவின்னே
ஞலினையுடையசாதிநடுவினுள்யாதோவின்னும். ()

குலத்திற னேதோ வின்ன கூறுபா டுணரா திந்த
ப், புலத்துறு மகவைப் போற்றல் புரையதாம் விடுத்
தி யென்னச், சொலத்தகு மொழியைக் கேட்டுத்
தொல்லழ குடைய சேயை, நிலத்திடை விடுக்க லா
ற்ரு ணெஞ்சிடைத் துயரங் கொண்டாள். (உஅ)

வே று.

அனையபொழுதருமறையுமயனரியுங்காணரிய
புனிதனருளாலருளும்பொற்புறுமோரசரீரி
பனவர்சிகாமணியிந்தப்பாலனமதிடத்துதித்தோன்
றனயனுக்காத்தவஞ்செய்தநினக்கிவனைத்தந்தனமால்.

இப்பொழுதேபன்னியொடுமிருங்கங்கைநீர்படிந்து
மெய்ப்பதிசார்ந்தையரொடுஞ்சாதமுதல்வினைமுடித்
செப்பியிடும்பத்தாநாளகோரசிவனெனவோது [தி
மப்பெயரையிடுதியிவனுலனக்குமேன்மையதாம். ()

என்னவிரு விசும்புகிழித் தெழுந்ததொரு திருவாக்கைத், தன்னுடைய விருசெவியுந் தளிர்ப்பெய்தியுறக்கேட்டுப், பன்னரிய வானந்தப் பரவையிடைப் படிந்தாழ்ந்து, சென்னிமிசைத் திருமொழியைச் சேர்த்துமனைக் கிவைபேசும். (ருக)

துடியிடைகேண் மகவின்றித் துயருமெமக் கருள்கூர்ந்து, விடைமருவும் பெருமானேர் வியன்மகவையருளினனாற், கடலுலகு தனிற்காணுங் கணிப்பரியபாக்கியத்துட், படியரிய நாம்பெற்ற பாக்கியமே,பாக்கியமாம். (ருஉ)

என்னுவம்மறையாளனிசைத்துமகிழ்பன்னியொடும்
பொன்னுரும்வரகங்கைப்புண்ணியநீர்புகுந்தாடி
மின்னுருமெழின்மகவைவிரிகரங்கொண்டெடுத்தே
தன்னுருமனைபுகுந்துசங்கரனூர்பணிவழியே. [ந்தித்

சாதவினைமுதனிரப்பித்தகுதியொடும்ந்தணர்க்குப்
பீதமுதற்பலவாயபெருந்தானமுவந்தீந்து
கோதகலத்திருந்துவிழாக்கொண்டாடிச்சிவம்பெருக
மோதமிகுநாமவினைமுடித்துமனமகிழ்பூத்தான். ()

இவ்வகையதிருச்சேயையெய்திமலர்மறையோர்க
ளுய்வகையதாதையினுலுற்றதெலாமுணர்ந்துள்ள
மெய்வகையகளிதூங்கிவேளெனவேவியந்தெண்ணி
செய்வகையவாசிகளாற்சிறப்பித்துச்சென்றனரால்.

மறைதெளியு மந்தணனு மைந்தனுக்கவ் வப்பொழுதே, யணிகொளுப நிட்டான மன்னவினை கேச

வினை, முறைதிகழ நிகழ்வித்து முப்புரிநூற் பெருஞ்
சடங்கைக், குறைவகலு மெட்டாண்டிற் குணம்பெ
ருகப் புரிந்தனனே. (ருசு)

சொன்ன தொரு காலத்திற் றூன் மறைகள் கற்
பிக்க, வன்னி யெனு மொழுக் குடையோன் மறை
களைநன் கோதுறுவா, னின்னு மறை யங்க மொடுமு
பாங்கமவை யிதிகாசம், பின்ன மிலாப் புராணங்கள்
பிறநூலுங் கற்றனனுல். (ருஎ)

குருவழியாக் கொள்க வெனுங் கொள்கை யினு
லங்நிலைநின், றூரு வழியா நூல்களெலா முளங்கொ
ண்டான் பத்தாண்டு, வருவழியே வளர்த்தபிதா வது
வைசெய மனை யோடும், பெருவழியிற் பிறந்த வொ
ரு பெண் ணரசைத் தெரிந் துற்றூன். (ருஅ)

வே று.

ஆனவேலையினலரின்மேயினேன்
மானதத்தினின்வந்தமாண்பினேன்
ஞானபோதகத்தலைமைநண்ணினேன்
மானமார்சனற்குமரமாமுனி. (ருகூ)

காமிகம்முதற்கழறநின்றிடுங்
தோமிலாகமத்தொகைகள்யாவையுங்
காமனைப்பொடிகண்டநாயனுர்
தாமுணாத்திடத்தானடைந்தரோ. (சo)

அனையநாயனுராணைமேற்கொடே
துனையவந்துநற்காசித்தொன்னகர்
தனையடைந்துசேர்தங்கவாழ்ந்திடும்
பனவர்மேலவன்பவனம்புக்கனன். (சக)

புக்கதொன்முனிபுங்கவன்பொலிந்
தொக்கவாரழகொழுகுஞ்சேயினைப்
பக்கமேவியேபார்த்துத்தன்னுள
மிக்கதோர்பெருவியப்புமேவியே. (௪௨)

அந்தமில்லொளியமையவந்திடு
மிந்தமைந்தனையெய்தப்பெற்றது
பந்தநீங்கிடும்பனவர்மேலவன்
சிந்தைவாக்ககல்செல்வமேயெனு. (௪௩)

எண்ணியேபெரும்புகழையெய்தியோ
னண்ணனல்கியவாகமங்களை
மண்ணின்வந்திடுமைந்தன்றேர்வுறப்
பண்ணியேயிதுபரிவினூற்றுவான். (௪௪)

அம்மையோடுறுமப்பனைத்தனோர்
செம்மையாகியசிந்தையிற்கொளீஇ
மெய்ம்மைமந்திரமிடலின்பூதியைக்
கொம்மைமெய்யினேன்கொள்ளநல்கியே. (௪௫)

ஆகுமாசிகளருளிநற்சிவ
யோகியாகெனவோதியேநம
தேகநாயகனிணையிலாணைசெய்
யோகைமாமுனியொல்லைபோயினன். (௪௬)

பிரமசாரியாம்பெரியனும்மவ
னுரைசெயுற்றநல்லுண்மைநூலெலாங்
கருதியோர்முறைதன்னிற்கண்டனன்
விரவுஞானமாவேலையாயினன். (௪௭)

இத்துணைப்பெருஞ்சிறப்பையெய்திய
வித்தகன்பினேமேவுமாறெலாஞ்
சித்தமேற்கொடுதேர்ந்துதந்தைதாய்
வைத்தசேவடிவணங்கிப்பன்முறை. (சஅ)

அன்னர்தம்மொடுமனையதொல்பதி
தன்னைநீங்கியேதவங்கள்சித்திக
ளென்னுமின்னவையியலுந்தில்லையா
நன்னர்மாநகர்நண்ணினரோ. (சகூ)

வேறு.

அத்தலை வந்தடை. சிவனுமணி பெருகு மிருக்கை யதொன் றமைத்துக் கொண்டு, நித்தவினை நிமித்த வினை நிகழ்ச்சி யெனும் பூசைசெப நியதி யாதி, பைத்ததழ லோம மொடு தருப்பணமே வைகனுறும் பரிவிற் செய்யு, மெய்த் தகைய பார்ப்பனமா வுண்டி யிவை விதியோடும் விளங்க வாற்றி. (ருo)

மந்திரமோ டடந் தார நாதமில யத்தினொடு வகுக்க நின்ற, பந்தமிலா விராசநிலை யோகமெனு மிவற்றினையும் பயிலத் தக்க, நிந்தை யகல் பிறநிலையு நிகரறநன் முயல்வினொடு நிகழ முற்றி, யந்த மிலாப் பெரும்புகழை யடைவுற்றான் பெருஞ் சித்த னாகி மன்னோ. (ருக)

சிவனடிக ளுளத் திருத்தித் திருத்தகைய சிவயோகந் திருந்த முற்றி, யுவமை யகல் சிவயோகி யாய மறை வள்ளலுய ரொழுக்கங் கூறி, னவி ரொளிய முக்குறிகொள் பூதியொடு மக்கமணி யணியு மெய்

யா, னவை யகலுஞ் சிவலிங்க பூசையினை நியதியுற நடத்துந் தூயோன். (ருஉ)

பரவரிய சிவோக மெனும் பாவனையின் வழுவா தோன் பரனுர்க் கன்ப, ருருவமதி லன் புடையான் மந்திரமுந் தந்திரமு முயரும் வேத, வரமுடிவுஞ் சோதிடமு மற்றையவும் வடித்த பெரு வன்மை யுள் ளான், றெரி வரிய தன்மையவாந் திரிகால நிகழ்வெ ல்லாந் தெரிய வல்லோன். (ருங)

நிக்கிரக மனுக்கிரக நிகழ்விப்போ னிக ரகல்சீர் நிறைய நின்றோ, னெக்கதிய வுயிர்மீது மிரக்கமுளோ னெவர்க்குநல மீயுநீரா, னக்குரவன் மனிதர் தமக் கரியதொரு பெருமையினி னமைதல் கண்டு, மிக்க திருத் தில்லைநகர் மேவியுளா ரனைவோரும் வியந்தே யுற்றார். (ருச)

பொறிவாயி லைந்த வித்தீர் புகலும்வினைத் தனக்கு விடை போதும் வண்ணம், பிறைவாழுந் திருச்சடை யார் பெரு முகத்திற் பிறந்தகுருப் பெருமை சொன் னுஞ், செறிவாய செல்வமிகு தேசிகர்கள் சேர்வுற்ற சிரம நீங்கி, மறைவாழு மிளைசை தனின் மன்னிய தோர் செய்தியினி வகுக்க லுற்றும். (ருரு)

வே று.

அயன்றுடை வந்தோராகிய வணிகரணி பெறு பூம்புகார் நகரிற், பயன்றரு திருவின் வாழ்ந்திடு நா ளிற் பனிமலர்த் தாதகிப் படலை, முயன்றிசை வண் டர் மொய்த்திட வணிந்த மூரிமா நேரிவெற் பரசன்,

வியன்றகு குடை வாழ்விரி புனனாட்டின் விளைந்தது குறுவிலை வெம்மை. (ருசு)

வான்முகில் பொய்த்து நதியெலாம் வருநீர் வறந்திட வந்தமை யாலே, தான்மரு வுயர்பேர் தவறவு மெங்குந் தன்னிடைச் சார்ந்திடுங் குடிக, ளூன்மறை யுடல்சோர்ந் துடல்பசி யுடற்ற வுறுதலாற் சோறுடைத் தென்னு, மேன்மைகொள் பழைய மொழிவழூ விடவு மேயது தண்புன னாடு. (ருஎ)

இவ்வகை குடிக ளிரங்குத னோக்கி யிரங்கினான் பொன்னியந் துறைவ, னவ்வகை யாயு மருங்குருவருளு மங்கண ரன்புமஞ் செழுத்தின், செவ்வகை விளைவு நீற்றொடு கண்டிச் செல்வமுஞ் சிறந்தசீர் வணிகர்க், குவ்வகை யுறுக ணுறுகில சேய்மை யுள்ளதீ வுயர்பொரு ணிறைந்த. (ருஅ)

இப்பெரு வணிக ரெல்லையில் செல்வ ரென்பது செவிப்புலப் படவே, நெய்ப்படு வேல்கொ ணேரிய னிவரை நெருக்கியே பன்முறை பொருள்கள், கைப்படுத் திடலும் பெருந்தொகை யீந்தார் காவலன் கடுந்துயர் பின்னு, மெய்ப்படப் புரிந்தான் குடிக்கருள் வேந்தன் மிடல்செயின் யாரது தவிர்ப்பார். (ருகூ)

பகல்வரு படிற ராமெனக் கொள்ளை பயிலுறும் பார்த்திவன் பண்ணு, மிகல்வரு துயருக் காற்றல ராகி யிடரினுண் மூழ்கிப வணிகர், மிகல்வரு கிளையோ டுங்நகர்த் தொடர்பை மெல்லவே நீக்கிமுன் றமக்

குப், புகல்வரு கோமான் புகழொடு மிருக்கும் பொற்புறு தில்லைவந் தடைந்தார். (சுo)

அடைந்துளார் யாருந் தங்குரு விருந்த வருநிலை புக்குமுன் ருழ்ந்து, மிடைந்ததம் பொருளின் செலவொடு வேந்தன் வெம்மையு முறைப்பட விளம்பிக், கொடுந்தகை யரச னுட்டிடை வாழ்தல் கொடியது கொடியதா மெங்கட், கிடந்தரு வேறு தலத்தினைக் குறிக்கொண் டெம்பிரான் விடுத்தரு ளென்முர். ()

என்றனர் வேண்டுஞ் சீடர்சொற் கேட்ட வின்றவனு மனையரை நோக்கித், துன்றருள் செய்து சிவபரஞ் சோதி தொல்லருள் வலத்தினு லேயே, நன்றுறு தான மிவர்தமக் கின்னே நண்ணிட வேண்டுமென் றுன்னிப், பொன்றிகழ் சடையார் புராணநூல் பலவும் புகன்றனன் புலத்திறந் தெளிய. (சுஉ)

பெருகிய தலங்கள் பற்பல வற்றின் பெருமைகள் பேசிடக் கேட்போர், திருவுறை யிளைசை மான்மியமதனைச் செப்பிடும் பொழுதினிற் செறியும், புரிவுநன் மகிழ்வும் புந்தியுட் டோன்றப் பொலிந்தன ராகியே கேள்வி, மருவுறும் பெரியோர் வாழ்வுறு மிளைசை மாநகர் வதிந்திட விழைந்தார். (சுநூ)

சீடர்க ளின்ன கருத்தின ராத றெரிந்துள முவப்புற லெய்திக், கூடுறு *தோற்ற மாதியாம் வகைகள்

---

* தோற்றமாதியாம்வகைகள்;—தோற்றம் அழிவு பூதங்களின் போக்கு வரவு வித்தை அவித்தை யென்னு மிவை.

குறைவறக் குறிக்கொளுங் குருவு, நாடிமே னிகழ்வு முழுவதுந் தூக்கி நாயகரோ டேகிட வலித்துப், பீடுறு மிளைசை யாண்டைய தென்னப் பேணியே யாய்வுறும் போதில். (சுச)

பொதியமா மலேயிற் பொருநையா றிழிந்து பொன்னொடு மணியுநன் முத்துந், ததையகில் சந்துந் திரையினுல் வாரித் தராதர மாமெனக் குவித்துக், கதிபெறு புனலாற் பயிரொலாம் வளர்க்குங் கடிகெழு பாண்டிநன் னாட்டிற், றுதிமிகு படியிற் கயிலேயா மிளைசைத் தொன்னக ருளதெனத் தெரிந்து. (சுரு)

பாண்டிநாட் டரசன் பார்த்திவர் கோமான் பயிலுநல் லொழுக்கமிக் குடையான், மாண்டகு கருணை பொறைகொடை யமைதி வாய்மையே யாதியாங் குணங்கள், பூண்டவன் செங்கோன் மனுமுறை நிகழப் புரந்திடும் புண்ணிய சீலன், றூண்டவம் புரியு மற்புத மூர்த்தி தாளுறு மன்பினிற் றலேயான். (சுசு)

மதுரைமா நகரம் வாழ்வுறு கின்றேன் மற்றவனென்பது மனேயாற், கிதந்தரு மாசான் றன்னுள நட்புக் கிசைந்தவ னெல்லேயில் லாத, துதிகெழு ஞானந் தனக்கொரு நிதியாய்த் தொன்மைசேர் சீடர்க டமக்குக், கதிதரு மீசா ஞசிரி யப்பேர் கலந்தவ் னென்பதுந் தேரு. (சுஎ)

கயிலேநா யகனுர் திருமுக மதனிற் கவினுற வந்தவா சிரிய, னயமுறு சீட ராகிய வணிகர் நாற்புறஞ் சூழ்வுற நடந்து, சயிலமுங் கடமும் பல்புகை நதியுங்

தன்னிகர் செந்நெனற் கன்னல், பயிலுறு நிலமுந் த
ணந்துசென் றெவரும் பரவிசை யாலவா யடைந்
தான். (சுஅ)

சுடர்மதி மருமா னாகிய சோம சுந்தரக் கடவுணற்
சோதி, யடர்முடி யீந்த வரசியே யான வங்கயற்
கண்ணியா ரோடும், படர்புக ழெண்ணெண் டிருவி
ளை யாடல் பரிந்துசெய் தருளியே யெங்க, ளிடர்கெ
டக் கோயில் கொண்டுவீற் றிருக்கு மெழிலின தால
வாய் நகரம். (சுகூ)

அப்பெரு நகரத் தாரண வொலியு மாகம வொலி
யுமீ ரொன்பான், மெய்ப்படு புராண வொலியுநீங்
காது மெய்யுணர் வுடையவர் சாருந், திப்பிய தரமா
ய்த் திகழ்ந்திடு தெய்வத் திருவெண்ணீற் றொளிகொ
ளு மழகி, னொப்பரும் பொலிவி னொளிர்வதா யமரு
மொருபெருந் திருமட முண்டால். (எ0)

அத்திரு மடத்தி னமர்ந்திடு கின்ற வரும்பெறற்
பாண்டிநாட் டாசான், வித்தக வீசா னாசிரி யன்று
ன் விழுத்தகுங் கேண்மைமீ தூருஞ், சித்தமோ டங்
க ணுபசரித் திடவே திகழ்ந்துவந் தளவளா யிருந்
தான், சுத்தநீர் கெழுமும் வரநதி தன்னிற் றோன்றி
ய வகோரவா சிரியன். (எக)

அகோரசிவாசரியப்படல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கூகூ0.

---

# ஈசானசிவாசாரியப்படலம்.



மாசியனீக்கியமாதவனின்ன
பேசியகாலைபெருந்தவரானே
ரீசனெனுங்குருயாவனவன்றன்
றேசொடுதோன்றியசெய்தியதென்றன். (௧)

பெரியவர்காதைகள்பேணுதறூய்மை
தருமதனுலவைசாற்றுதியென்ன
வொருமையினேடுமுளங்கொளுமன்னேன்
வருமுறைசெப்புதுமென்னவகுப்பான். (உ)

தொலைவறுசெய்யதுவாபரமென்னு
மலியுகவீற்றினினெல்லையின்மாசு
பொலிதரலுற்றுநலத்தியல்பொய்த்த
கலியுகம்வந்துகலந்ததையன்றே. (௩)

கலத்தலுமாந்தர்கலங்கிவிபூதி
நலத்தகுகண்டிகைநல்லெழுத்தஞ்சாச்
சொலத்தகுமிப்பொருண்மேனசைசோர்ந்து
வலத்தகுபத்திதணந்தனர்மாதோ. (௪)

விடுத்தனர்கோயில்வியன்பணிதன்னை
விடுத்தனர்வாவியொடுங்குளம்வெட்டல்
விடுத்தனரன்னமிசைந்திடநல்கல்
விடுத்தனரேனையமெய்யறமெல்லாம். (௫)

இவ்வகையாகியிருந்திடுமோர்நா
ளுய்வகைசெய்தருளம்மையினேடு

மவ்வரமூர்த்தியருள் விளையாட்டான்
மெய்விடைமீமிசை விண்ணிடைவந்தான். (சு)

வந்தருள் காலைமருங்குறையம்மை
யிந்தநிலத்தினில்யாருமறத்தின்
சிந்தனைபத்திமைதீர்ந்தமைநோக்கி
முந்தருளோடுமொழிந்தருள்கின்றாள். (எ)

என்னுயிர்நாதவிரும்புவிமீது
மன்னியுறைந்திடுமானவரெல்லாம்
வெந்நிரயம்புகவெவ்வினையீட்டித்
துன்னுறுகின்றனர்தொன்மையினீங்கி. (அ)

இன்பருள்செய்திடுமெந்தையையின்னே
மன்புனைதேசிகமாவடிவாகிக்
கொன்பயில்பத்திகுலாவநிறுத்தி
யன்பினருள்புரிகென்றனளையை. (கூ)

என்றமைகேட்டெமையாளுடையெம்மா
னன்றருள்கூர்ந்துயர்நன்முகமைந்து
ணின்றதொர்மேன்முகநின்றுபுவிக்க
ணென்றொருநற்கலையுய்த்தனனென்ப. (கo)

அக்கலையாரணமாகமமோங்கத்
தொக்கதொர்கண்டிகைநீறுதுலங்க
மிக்கதொரஞ்செழுத்துண்மைவிளங்கத்
தக்கதொர்வைதிகசைவநிலாவ. (கக)

நினைவருசைவநெறிப்படுமுத்தீ
வினைஞர்குலத்திடைமாண்டவியப்பேர்

புனைமிகுகோத்திரத்தேர்மிகுபோதா
யனமுனிசூத்திரத்தின்னருள்செய்து. (கஉ)

சிவனடிசிந்தைதிருந்துறவைத்துத்
தவமுயலந்தணர்வேந்துதனக்கோ
ருவமையிலாதவுயர்மகவாகி
யிவணவதாரமியைந்ததுமன்றே. (க௩)

வந்தருண்மாமதலைக்குமகிழ்ந்தே
தந்தைசெயத்தகுசார்விதிசெய்ய
வந்தநன்மைந்தனுமாயொடுதந்தை
சிந்தைமலர்ச்சிதிளைப்பவளர்ந்தான். (க௪)

வளர்வுறுகின்றவன்மாமறைநூல்கண்
மிளிர்வுறுசெவ்விவிளைந்திடுமேல்வைத்
தளிர்வுறுநூல்வலதந்தையினுன்முற்
குளிர்வுறுமாச்சிரமத்தியல்கொண்டான். (க௫)

அருமறையேமுதல்வித்தையனைத்துங்
குருமுகமாகவேகொள்கவெனுந்தொல்
வரையறைகாத்திடமற்றவைகொண்டா
னொருகரியாயுறுமோர்குருவின்பால். (க௬)

வேறு.

ஓதுறு கின்றன யாவையுமே யோது முனங்தெளி யொள்ளறிவா, நீதியி * னவதியில் பிரமநிலை நின்ற தொர் நன்முறை தலைநின்றோன், வேதமொ டாகம

* அவதியில் பிரமநிலை—நிரவதிகப் பிரமசரியம். நிரவதிகப் பிரமசரியமெனினும் நைட்டிகப் பிரமசரியமெனினு மொக்கும்.

மெனுமுன்னூல் விதிவழி யொழுகு மொழுக்கத்தா, ஞுதி பராபர முதல்வன்ற னடியிணை பூசைசெ யமைவுற்ருன். (கஎ)

பற்றிய லற்றதொர் பான்மையினுன் பயிலருண் மிக்க பராசத்திக், கற்றமில் வந்தனை செயலாலே யருள வழிக்க வடல்கொண்டோன், முற்றனை யீந்திடு முகமென்று முதன்மையின் மேலுறு முறையாலே, வெற்றிகொ ளூர்த்துவ சிகைகொண்ட மெய்க்குருவாகி விளங்குற்ருன். (கஅ)

முதுசிவ நூலரு ளீசான முகமதின் வந்திடு முறையானும், பதிசிவ தத்துவ வுபதேசம் பாங்கொடு செய்திடு மியலானுங், திதிதரு முண்மைய வீசான சிவமரு வாசிரி யனெனுமங், துதிபெற வெய்தின னுயர் சைவத் துறையுல கோங்கவு தித்துள்ளோன். (கக)

அத்திரு மெய்க்குரு வவனிதனி லமர்வுறு மானுடரனைவோரும், பொய்த்தலில் வேந்தனுள் வசமாகிப் பொலிதரு தன்மையி னலர்நிம்பக், கொத்துயர் தாரணி மீனவனைக் குலவுறு சீட னெனக்கொண்டு, பத்தியெ னப்படு நற்செல்வம் பயில விளைத்தவன் முகமாக. (உ0)

மாந்தர்கள் யாரையுஞ் சிவபத்தி வாய்ந்தவ ராக வியல்வித்துத், தேந்தொறுந் தேந்தொறு முறவேகிச் செறிதரு மானவர் திருநீறு, காந்திகொள் கண்டிகை சிவவடிவாக் கருதுறு மைம்பொறி சிவநாம, மே

ய்ந்திடு மிவைகளின் மிகுபத்தி யிசைவுறு மாறு நிறு த்துற்றே. (உக)

பின்புயர் தண்டமிழ் வளநாட்டிற் பெட்பொடு வந்து திருக்கூட, லென்பெய ரெய்திய நகரத்தி லில குறு திருமட மிசைவுற்றே, மின்படர் மதிதரு குல வேந்தன் மெய்யுறு சிந்தையின் வழிபடவே, யன்பு று பாண்டிய நாட்டாசா னுமென விசையொடு திகழ் வுற்ருன். (உஉ)

க்ஷேத்திர யாத்திரை யமையத்திற் கிளர்புலி யூருறு மாசாற்கு, மீத்திகழ் கூடலி னுசாற்கு மித்திர பாவ மிசைந் ததுவா, லாத்தனி வன்றமிழ் மதுரைதனி லம ருறு கின்றதொர் பொழுதின் கண், வாய்த்திடு புண் ணிய வணிகரொடும் வந்தனன் றென்முகம் வருமா சான். (உங)

வேறு.

இன்னவண்ணமிசைத்தனமீசனென்
றுன்னுதேசிகவுற்பவவுண்மையை
மின்னுசெஞ்சடைமெய்யுறுமாதவீர்
பின்னருற்றனபேசுவங்கேண்மினே. (உச)

நன்முகந்தருஞானநன்னுயகன்
றென்முகந்தருதேசிகன்மேலதா
மன்முகந்தரவந்திடுபுங்கவன்
றன்முகந்தனைநோக்கித்தகவொடும். (உரு)

நட்புமிக்கநயந்தருவாய்மைகள்
பெட்பினங்கவட்பேசுறுபோழ்தினிற்

றிட்பமெய்வலிக்கிள்ளிசெய்தீத்துய
ரொட்பமெய்தியவைசியர்க்குற்றதும். (உசு)

விளைசெயின்பவியனலநல்கிடு
மிளைசையென்னுமெழில்பெறுமாநகர்
கிளைசெயன்னவர்கிட்டிவசித்திடத்
திளைசெய்காதல்கொள்செய்தியுஞ்செப்பியே. (உஎ)

சிதம்பரம்மெனுந்திவ்வியகேத்திரத்
திதம்பரந்திடும்வண்ணமிருந்தியா
ணிதம்பரந்தருநேரில்சமாதியின்
முதம்பரம்புறவெய்திடமுன்னினேன். (உஅ)

ஐயவென்னுயர்சீடர்களாகிய
துய்யவிந்தவணிகரைத்தொண்டுகொள்
செய்யநின்னுயர்சீடர்களாகவே
மெய்யுறக்கொளல்வேண்டுநன்னண்பினேய். (உகூ)

பான்மையின்னபகர்வுறக்கேட்டிறை
மேன்முகம்வருமெய்யனுமங்ஙனே
தான்மலர்ந்துதகவுறுசீடரா
வான்மையெய்தும்வணிகரையேற்றனன். (௩0)

அங்கதற்பினரசவைசேர்ந்துதன்
றுங்கமித்திரன்றாயவர்தங்களைத்
திங்கண்மாமரபுற்றிடுதென்னவன்
பங்கமின்றித்தெரிவுறப்பண்ணினான். (௩க)

பண்ணலோடுமெப்பார்த்திவபுங்கவ
னண்ணியேவருநற்குரவன்றனைத்

தண்ணுறுந்தகைத்தன்குருவேயென
வெண்ணியேயுயர்பத்தியியற்றினுன். (௩உ)

ஈசநேசர்களாகியிருந்திடு
மாசில்வைசியர்மீதுவரங்குலாந்
தேசெனுஞ்சிவஞ்சேர்ந்திடுசிந்தைகொ
ணேசம்வைத்தனனிம்பவலங்கலான். (௩௩)

பின்னர்தன்குலப்பின்னவராயினேர்
தன்னேர்நாட்டிற்றலேஇயவிளைசையிற்
றுன்னிவாழத்தொடர்ந்தனரொன்பது
மன்னர்மன்னனறிந்துமகிழ்ந்தரோ. (௩௪)

நாமுமாங்கடைதும்மெனநாய்கருக்
கேமமாரவியம்பியவரொடுஞ்
சேமநேருறுதேசிகர்தம்மொடும்
பூமிவேந்தன்புறப்படலுற்றனன் (௩௫)

ஊர்தியின்வகையொய்யெனவந்தன
வார்திகழ்முரசாதிகள்வந்தன
பார்திகழ்ந்தபரிசனம்வந்தன
வேர்திகழ்ந்திடுமேனவும்வந்தன. (௩௬)

வந்தகாலேவழுதிகுரவருக்
குந்துமூர்தியுரியனவூருறத்
தந்துவைசியர்தங்களுக்குங்கொடுத்
தந்தமன்னனுமேறினனுண்டரோ. (௩எ)

தூரியங்கடுவைப்பத்துதைந்தெழு
சீரியல்கள்சிறக்கமதுரையின்

வாரிநீங்கிவழிக்கொடுவல்லேவந்
தேரிஞேங்குமிளசையையெய்திஞன். (௩அ)

தொல்வரங்கெழுதோன்றல்பட்டாரகர்
செல்வவைசியர்தம்மொடுசேர்வுழி
நல்விழாவுறுநாளதுவாதலிற்
பல்வளத்தொடுபெல்கியதந்நகர். (௩௯)

வே று.

அந்தணர்சங்கமுமரசர்சூழலும்
வந்தசீர்வணிகர்தம்வகையும்பின்னவர்
தந்தொகுதியுமயற்சார்பிஞேர்களி
னுந்தியகுழுவுமோவுறுவவவ்வழி. (௪0)

இருடிகள்கணங்களுமிலேகரீட்டமுந்
தருமெழில்கெழுமுகந்தருவர்கூட்டமு
மருவுறுகின்னரர்வயங்குசாலமும்
பெருகியேயெங்கணும்பிறங்குமென்பவே. (௪க)

எழுவகையோசைகொளினியபாடலுங்
குழுமியவியங்களின்கோதிலோதையும்
வழுவறவெழுவனவவற்றைமாணுறும்
பழமறையோசைகள்படுத்துமேலெழும். (௪உ)

கணிகளுநாணுறுங்காட்சிகொண்டிடு
மணிகளுமணிகளாலிழைத்தமாழைகொள்
பணிகளுமேனவாம்பகரும்பல்பொரு
ளணிகளும்விளங்குவவாசைகொள்ளவே. (௪௩)

மண்டபநிரைகளும்வயங்குமன்றமும்
விண்டொடுமாடநீள்விமானபந்தியு
மண்டருமழகினுக்கழகவாயெதிர்
கொண்டவர்கண்ணெலாங்கொள்ளைகொள்ளுமே. ()

வீடுகடொறுங்குலாய்மேவும்வாய்தொறு
மாடுபல்சுடர்மணிவிளக்கமாதியாம்
பீடுறுமங்கலப்பொருள்கள்பெட்புறக்
கூடுறுபூரணகும்பமோங்குமே (௪௫)

ஓவியவகைமையிஞெளிரச்செய்திடும்
பாவைகளாயினபலவும்பஃறொழின்
மேவியங்குறுவனவிண்ணின்மாதரா
ராவயின்வருபவரகத்துள்வெள்கவே. (௪௬)

கொடியினமானவுங்குடைகளானவும்
வடுவகல்கவரியின்வகைகளானவு
நெடியநற்றோரணநிரைகளானவு
மிடைவுறவணிபடுத்தெங்குமேயின. (௪௭)

பரிமுகநேர்குலைபரித்துநீண்டுறு
மரிநிறவாழையுமரியபூகமு
நிரையுறநிறுத்தவேநின்றுபூந்துணர்
விரைகெழுதொடையொடுமிளிருகின்றன. (௪௮)

சங்கரனூர்மகிழ்தசாங்கமோடுயர்
குங்குலுவாலெழுகோதிறம்புகைத்
துங்கநல்விரைமணந்தொடர்ந்துமேற்கொளாப்
பொங்கியெம்மருங்கினும்பொலிந்துவிம்முவ. (௪௯)

அருந்தினரருந்தியேசெல்லவன்பொடு
மருந்துகின்ருர்களுமருந்தப்பின்முறை
யருந்தவேண்டுபவரையருந்தநோக்கிடு
மருந்துறுசாலைகளளப்பிலாதவே. (௫௦)

வந்தவரிளைப்பினைமாற்றுந்தன்செயன்
முந்துமத்தலம்வெளிமுயலக்காட்டல்போற்
சிந்தைகொண்மந்தமாருதநற்சீதநீர்ப்
பந்தர்களாயினபரந்துமல்குமே. (௫௧)

நிலத்துறுகண்ணடிநிரைகளாமெனச்
சலத்துறுமேன்மைசாறடாகமாதிய
நலத்துறுகின்றனநண்ணுவார்க்கெலாம்
புலத்துறுபயன்கொளப்பொருந்தித்தேங்குமே. ()

பீடுறுவிழவினின்மகிழும்பெற்றியா
லாடுகின்ருர்களுமாசைகொண்டெழீஇப்
பாடுகின்ருர்களும்பரமன்காட்சியை
நாடுகின்ருர்களுமெங்குநண்ணுவார். (௫௩)

ஒப்பனைசெய்திடலுறுகின்ருேர்க்கெலா
மொப்பனைமுன்வகையுணர்த்துமிங்நக
ரொப்பனையொப்பனையாகுமுங்கிதை
யொப்பனையாகுமாலொழிந்தவொப்பனே. (௫௪)

எம்பிரானெங்களுக்கியற்றுமின்னருண்
மங்கலப்பொலிவெனமாண்பிஞேங்குறுந்
துங்கநல்லுத்தமமாகுந்தொன்னக
ரங்குறவடைந்துளானகிலமாள்பவன். (௫௫)

என்னையின்றிதுவெனவெங்குநோக்கியே
மன்னதிசயத்தினன்மகிழ்ந்தசிந்தைய
னன்னவர்யாவருமருகுசார்வுறச்
சென்னிகைகூப்பியேசெழியனின்றனன். (ருசு)

நின்றிடுமெல்லையினுயிருணின்றிடு
நன்றியுமறுகுணநலமுமும்பருள்
வென்றியுமிக்கருள்கயிலைமேலவன்
றன்றிருநீர்விழாக்கொள்ளச்சாருமே. (ருஎ)

வேறு.

பயனுறு வீரிங் கொல்லைப் படர்மினீ தமய மெ
ன்னு, வயமொடு தெரிப்பார் போல வான்முர சறை
ந்து செல்ல, வுயர்மறைப் பொருளா மீச னெண்புகழ்
வெவ்வேறோதி, யியல்பல புராண மென்ன வியம்
பல வியம்பிப் பொங்க. (ருஅ)

அன்பருக் கெளியான் வந்தா னமரருண் முதல்
வன் வந்தா, னின்பருள் பெருமான் வந்தா னென்று
பொற் சின்ன மார்ப்ப, மன்பனி யமுதங் காதிற் றரு
வியால் வாக்கு மாபோற், றென்பயி லினிய கானந்
திவவியாழ்க் கையர் செய்ய. (ருகூ)

கோங்குக ளரும்பிக் கஞ்சம் பொறிவரி முரலப்
பூத்த, பூங்கொடி யசைந்தா லென்னப் பூவையர் பா
டியாட, வீங்குவெள் ளிடமின் றென்ன வெள்ளிட

வெங்கு மொய்த்துப், பாங்குறப் பணிவார் யாரும் பரிவொடு பணிந்து போத. (சுo)

மூவகை மறையுந் தத்த மூர்த்திகொண் டிசைத்தா லொப்ப, நாவினு லவற்றைக் கொண்டோர் நலந்தர முறையி னேத, வாவிகட் காவியான வங்கணன் ருனே யார்க்குந், தேவெனக் கொண்ட வன்பர் சிவ சிவ முழக்கஞ் செய்ய. (சுக)

திருமுடி யியல்பு தன்னைத் தெரிகுவன் செவ்வே யென்னுப், பிரமன்பல் லெகின மாகிப் பேணல்போற் கொடிகண் மல்கப், பரமனம் விழாக்கொ ளுளின் றவனையாம் பணிந்து கொண்டு, வருதுமென் றடைந்த சிந்து வகையெனக் கவரி துள்ள. (சுஉ)

பணிகெழு பணிகொண் மேலோ யெம்மையும் பணியாக் கொள்கென், றணுகிநின் றசையும் பாந்த ளாமெனப் பீலி மொய்க்க, நணியதோ ரருளனைத்து நலந்தரு முடிமே னின்று, மணிநிழல் புரிதன்மான மதிக்குடை நிழற்றி யோங்க. (சுஙூ)

தெய்வத தருக்கள் விண்ணிற் சிந்துபூ மாரி யேய்ப்ப, மெய்வரு மன்ப ரோச்சு மென்மலர் மீது வீழக், கைவரு படைக்குண் மேலாய்க் கடவுளர் யாரும் வைகும், வைவரு சூலப் புத்தேள் வான்படை முன்புசெல்ல. (சுச)

மூலமார் நிலையு ணின்ற மூர்த்தியொண் மணிப் பொன் னேடைப், பாலமா முகங்கொண் டுள்ள பண் ணவன் வலத்திற் சாரச், சேலுறு விழிகொள் யாண ர்த் தெரிவையர் மருங்கு சேர, வேலொரு தடக்கை கொண்ட மேலவ னிடத்திற்சார. (சுரு)

சிவவரசேவைக்கேற்றதிகழ்பயனளிக்கவல்ல
நவமகல்பெருமைச்சண்டநாயகன்பின்புசார
வுவமையில்கயிலையின்னவுருவினேடுற்றுலொத்த
தவலருஞ்சிறப்பின்மிக்கதனிப்பெருவிடையின்மீதே

நித்தகல் யாணி நாம நிகரறத் தனக்கே கொண் ட, வுத்தமி யோடு மெம்மை யுயர்பரா னந்த வாரி, வைத்திடு மறிவா னந்த வடிவுடைக் கயிலை வள்ளன், மெத்துநல் வனப்பிற் றேன்றி வெளியுறக் காட்சி தந்தான். (சுஎ)

மற்றதுபொழுதின்மன்னன்மற்றையரோடுமெங்ங
னுற்றறிபொறிகளெல்லாமொள்ளியவிழியேயாகப்
பெற்றுநற்கோலக்காட்சிபெட்புமீதூரக்கண்டு
பற்றியசிவானந்தானுபவத்தினிற்படிந்தானம்மா. ()

காட்சிதந் தருளு மூர்த்தி காண்புறு பவருக் கெல் லா, மீட்சியின் மகிழ்ச்சி நல்கி வீதிவாய் வலங்கொ ண் டேகிச், சூட்சியின் வந்து சித்த தடத்தினிற் றென்மை யார, மாட்சிநீர் விழாக்கொண் டுற்றுன் மன்னுயிர் யாவும் வாழ. (சுசு)

ஒப்பிலாவின்பவாரியுயிர்களையழுத்தவேன்ற
விப்பெருநீர்விழாக்கொண்டருளியவெல்லைதன்னி
லப்பரவின்பந்தன்னிலழுந்துதலியையயாருஞ்
செப்பியசித்ததீர்த்தந்திளைத்தனர்மகிழ்வுகூர. (எ௦)

வணிகர்கள் யாரு மங்கண் மற்றிது கண்டு நங்கள், பணிவரு பாக்கி யந்தான் பாக்கிய மென்று மும்மை, துணிபொடு கூறித் தம்மைத் தோற்றுமெய்ப் புளகம் போர்ப்ப, வணிமகிழ் வுததியாடி யாடினு ரனையதீர்த் தம். (எக)

இவையெலா நிகழ்ந்த பின்ன ரெம்பெரு மாட்டி யாகுஞ், சிவைவர கங்கை தன்னிற் சேர்த்ததோர் சுவேத நின்று, நவையகல் பான்மை தோன்று நற்குரு நாய்கர் தம்மைக், குவையொடு நோக்கி யின்ன குளிர்மொழி கூறலுற்றான். (எஉ)

வேறு.

இன்றுநம்பிறப்பெய்தியதரும்பயனேற்ற
மின்றுநந்தவமெய்தியதரும்பயனேற்ற
மின்றுநம்மறிவெய்தியதரும்பயனேற்ற
மின்றுநம்பெருந்தேவனார்தரிசனவியலால். (எ௩)

விடையின்றிங்களின்விசாகநாண்மேவியவுவாவி
னடையுமுற்சவத்தீற்றினிலங்கணனருளாற்
படியினற்கயிலாயமார்பண்ணவனருமை
வடிவின்காட்சியைப்பெற்றனம்பாக்கியவசத்தால். ()

அருமையாகியவிளைசையையடைதலுஞ்சித்தப்
பெருமையாந்தடத்தீசனேடாடலும்பெற்று
மிருமையாமியறெரிந்தவரீசனேடாட
லொருமைநூறு*மாமகப்பயன்றருமெனவுரைப்பர்()

இவைகள்யாவையுமுங்களாலெய்தியவென்று
வுவகையாலுரைசெய்தனனுலகருளாசா
னவைகள்கேட்டுநல்வைசியரனைவருமகத்திற்
றவமகிழ்ந்தனராயினர்தலைமிசைக்கொண்டே. (எசு)

பின்னரெம்பிரான்பூசனைபெருகவேபுரிதற்
குன்னியேபெருநியதியோடுறுபொருளெல்லாந்
துன்னுமாறவட்டொகுத்திருகுரவருஞ்சொற்ற
மன்னுநூன்முறைவிதிவழிவழுவறச்செய்தார். (எஎ)

கயிலைநாயகன்கரையிலாக்கருணையையெய்தச்
செயலரும்பெரும்பூசனைசெய்திடுஞ்செல்வர்
பயிலுநான்மறையந்தணர்மகிழ்ந்திடப்பரிவா
லயிலுவித்துமேலயின்றனர்தாங்களுமன்றே. (எஅ)

பின்னர்நன்னெறிமன்னவர்பின்னவர்சின்னாண்
மன்னியங்கவணத்தர்தாம்வகுத்தருணெறியே
யுன்னிநின்றுதொல்லொன்பதுசித்தருமுழுவ
றன்னெடும்வழிபட்டிடுந்தனிக்குறிகளையும். (எகூ)

விதிவழாவகைவழிபடலியற்றியேவேண்டும்
புதியநற்றிருப்பணிகளும்புரிமுறைபுரிந்து
நதிகொள்செஞ்சடைநம்பனூர்நல்லடிக்கன்பு
பதியுநெஞ்சராய்முறையினிலுணர்நிலைபயின்றூர். ()

* மா—குதிரை.

இத்திறத்தியல்சிரேட்டிகள்யாவருமீண்டிச்
சத்தியத்தெளிவின்பமாந்தனிவடிவுடைய
சுத்தசோதியாயேகமாந்தொல்பரசிவத்தைச்
சித்தபங்கயத்திருத்தியேதியானமேற்கொண்டு. ()

யோகபீடமுற்றிருந்திடுஞ்சிவபரயோகி
யாகுநற்றிருத்தில்லைமாநகர்வருமாசான்
வாகைசேர்ந்துலாந்திருவடிசிரமிசைமருவ
வாகமேதினியொன்றவீழ்ந்தறைகுவாரிதனை. (அஉ)

மூன்றுகாலமுமுணர்ந்துயிர்க்கிதஞ்செயுமுதல்வ
வான்றவைம்புலவேடரையடக்கியவைய
சான்றநின்னதோராணையைத்தரித்துறுமெங்கட்
கேன்றினிச்செயத்தகுவதென்னருளுகவென்றார். ()

என்றவேண்டுரைகேட்டருளிறைசிவஞான
மொன்றிநன்மைசெய்விருப்புறுமுளத்தினிரினிமேற்
றுன்றுகாரியநிகழ்ச்சிகளனைத்தையுஞ்சூழ்ந்து
மன்றவோதுதுங்கேண்மினென்றின்னனவகுப்பான்.

நீங்களிவ்வுயர்வைப்பினிகழநீடூழி
யோங்கிவாழுமின்கயிலைநன்னுதனுமொருபேர்
பாங்கினுற்றிடுபரம்பொருளாகியபகவன்
றாங்குசேவடிதகவொடுபூசிமின்சால. (அரு)

நவபெரும்பெயர்ச்சித்தர்செய்பருச்சனைநயந்து
சிவனமர்ந்தருடிவ்வியக்குறிகண்மற்றுளவா
மெவையுமாங்குயர்தீர்த்தங்களெனையவுமுறையி
னுவகையன்பொடுஞ்சேவையையுஞற்றுமினுரவீர்.()

ஈசநற்சிவகுரவனையீசனுவுன்னிப்
பூசைசெய்மினென்றும்மவனுணையைப்போற்ற
லாசிலாதநுஞ்சீரினுக்காதிகாரணமாம்
பேசினிங்கிதன்மேலுமேபெருகுறுஞ்செல்வம். ()

யாமிங்குற்றபோதியாவுநன்றிருந்தனவதுபோ
லாமிங்கின்னுமுங்களுக்கிலேயையமேநமக்குக்
காமங்கன்றியவில்லறவிருப்பிலேகாமுற்
ரேமங்கைவருயோகமேலெங்கெனுமுறுவாம். ()

என்னுவியம்பிச்சிவயோகமியற்றுந்தீர்த்தன்
முன்னுவணங்கும்வணிகர்க்கொளிமுந்தும்பூதி
பின்னுகநல்கிப்பெருகாசிபலவும்பேசித் [ன்.
தென்னுடுசோலேத்திருத்தில்லேயிற்சென்றுசேர்ந்தா

தாவாதநீர்மையரசன்மகிழ்தக்கசெல்வர்
காவாருநல்லவிளைசைத்திருக்கன்னிமூதூர்க்
கோவாதுமிக்கதொருசேய்மையின்ரேங்கும்பாங்கர்
மாவாழிருக்கைகுரவற்குவகுத்துவைத்தே. (கூ0)

தேசாருகின்றசிவஞானந்திகழவந்த
வீசானதேவனிருபாதமிறைஞ்சிநல்ல
நேசாதிகொண்டுதிருவைந்தெழுத்தென்னநீடிப்
பேசாதியானமனுவுண்மைமுதலபெற்ருர். (கூக)

பாராளுமன்னுமகிழ்பூத்திவைபார்த்தியோக
வேராளுஞ்சித்தரியல்பூசனேயேற்றவொன்பான்
சீராளுமூர்கடமையும்மவர்சேரநல்கி
நீராளுஞ்செல்வமதுராபுரிநேர்ந்துவாழ்ந்தான். ()

மெய்யாதிமூன்றுமளித்தன்றுதொட்டாகமேலை
யையானனங்கொளமலன்வடிவானவையன்
செய்யாணையன்பிறலைக்கொண்டுசெயல்களெல்லா
மொய்யாநடத்திவதிந்தார்பயன்முந்துநாய்கர். (சுஙு)

தேவோங்குசிந்தைத்தனிகர்தமசெல்வமெல்லா
நாவோங்குவாய்மைக்குருபுங்கவனன்மையாலே
மாவோங்குகின்றவளரும்மதிமாட்சிபோலப்
பூவோங்கவைகளுறுமோங்கிப்பொலியவாழ்ந்தார்.

வே று.

என்னவே கடத்தில் வந்தோ னிசைத்தனன் முனிவர்க் கென்ன, வன்னிசேர் குண்டம் வந்தோன் மற்றவை யாவுங்கூற, வன்னவை கேட்டு நைமி சாரணியத்து மேலோர், பன்னரும் புராணம் வல்ல பகவனைப் பூசை செய்தார். (சுரு)

இந்தநற் புராணங் கேட்போ ரிசைப்பவர் யார்க்குமுண்மை, தந்தநான் மறைக ளேத்துந் தனிப்பரசிவன்மேற் பத்தி, செந்திருச் செல்வ முள்ளத் திகழ்வொடு மரோக மென்ன, வந்தநற் பயன்க ளோங்கிப் பதந்தொறும் வளருந் திண்ணம். (சுசு)

மகவினை விழைந்தோர் சேர்வர் வான்பொருள் வேட்டோர் சார்வர், புகழினை நசைந்தோர் கொள்வர் பொற்புறு கன்னி தன்னை, யகமுற விரும்ப லுற்றோ ரடைகுவ ரினைப்பி னீங்குந், தகவினர் துயரமெல்லாந் தணந்துநன் மகிழ்வின் வாழ்வார். (சுஎ)

அந்தணராக்கள்வாழ்கவடைவின்வான்மாரிபெய்க
நந்தலில்வளங்கண்மல்கநாட்டுநல்லரசன்செங்கோ
லுந்துகவுயிர்களெல்லாமோங்குகவறங்கள்யாவு
முந்துகசைவநீதிமுதிருகபுவனமுற்றும். (௯அ)

களிதருங்காட்சிமேயகயிலைநாயகனார்செம்பொ
னளவில்சீரடிகள்வாழ்கநித்யகல்யாணியம்மை
யொளிர்திருமுகத்திற்பூத்தவொப்பிலாக்கருணைவாழ்க
விளைசைமாநகரம்வாழ்கவிசைநகரத்தார்வாழ்க. ()

ஈசானசிவாசாரியப்படல முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - ௧0௯0.

---

இளைசைப்புராணம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கரு | கரு | வாழ்வினின | வாழ்வினில |
| கசு | உரு | மரகதம்பொற் | மரகதம்போற் |
| ருO | கரு | லிளசை | லிளேசை |
| ருக | ச | புவியினிற் | பூவினிற் |
| ருரு | உஉ | போதினின் | போதினில் |
| ருஅ | அ | மணியினி | மணிதனி |
| ,, | கக | கூடுமென்பினின | கூடுமென்பினுல |
| சள | கள | துயிலினி | துயிறனி |
| ளுரு | உரு | கோத்திரானி | கோத்திராக்கினி |
| கூரு | கூ | நின்ஞேர் | நின்னொர் |
| ககக | ரு | மாப்பறவை | மாபறவை |
| கஉரு | உச | வெஞ்சலி | மெஞ்சலி |
| கஉரு | ச | வடியர் | வடியார் |
| கஉஅ | கூ | மெஞ்சமர | வெஞ்சமர |
| ,, | கள | யன்பினின | யன்பினில |
| கருஉ | கூ | வயமாக் | வயமான் |
| ,, | கரு | காலைபொய் | காலைப்பொய் |
| கருச | கரு | முடிந்தமையாண் | முடிந்தமையான் |
| கருகூ | உO | செம்மதுச் | செம்மது |
| கசுஅ | கக | தயையுரி | தயைபுரி |
| களக | கO | இத்தவ | இத்தல |
| களஉ | ரு | வாழ்ந்திட | வாழ்த்திட |
| கஅஉ | கள | வணிகமொல்லா | வணிகமொலா |
| கஅச | கள | கரமாப்பொலி | கரமாபொலி |
| ,, | உO | மனைகோ | மனைகொ |
| கஅசு | கச | நாயகர் | நாய்கர் |
| ககூரு | கள | மானதத்தினி | மானதந்தனி |
| ககூசு | கரு | பெருமையினின | பெருமையினில |
| உOக | கஉ | வீற்றினினெ | வீற்றினிலெ |

